# தாயுமானசுவாமிகள்
# பாடல்



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

திருத்தருமையாதீன முதற்குரவர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

விசுவாவசு ௵ - வைகாசி௴ - 8உ - வெள்ளிக்கிழமை

21—5—1965



வெளியீடு எண் 564.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# தாயுமான சுவாமிகள் பாடல்

இது
திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள் அவர்களது

திருவுளப்பாங்கின் வண்ணம் வெளியிடப்பெற்றது.



தருமையாதீனம்
1965



தருமபுர ஆதீனம் 25-வது மகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

# முன்னுரை

கடவுட் கொள்கை உலகத்தில் என்றும் நின்று நிலவுவது, இறை அனுபவம் வாய்ந்த பெரியார்களாலேயாம். அனுபூதிமான்களில் சிலர், அருள் வாழ்க்கை வாழ்வதனோடு, அருள் வாக்குகளையும் உலகத்திற்கு அளித்துச் செல்கின்றனர். அவ்வாழ்க்கை நெறியிலும், வாக்குக்களிலும் ஆர்வம் மிகக் கொள்கின்றவர்களே பின்னர் அவர்களது நிலையை அடைந்து அருளாளராய்த் திகழ்கின்றனர். இத்தகைய அருளாளரது வழி, நம் நாட்டில் அன்று முதல் இன்றுவரை வாழையடி வாழையாய் விளங்கிவருகின்றது. அவ்வழியில், அண்மைக் காலத்தே வாழ்ந்து அருட்டிருப் பாடல்கள் பலவற்றை அருளிச்செய்தவர், தாயுமான அடிகள்.

தாயுமான அடிகளது திருப்பாடல்கள் உண்மையும், உருக்கமும் உடையவை; தத்துவக் கருத்துக்கள் பொதிந்து, சமயப் பொதுநிலை மிகுந்து காணப்படுபவை. இவைகளோடு எளிய நடையிலும் அமைந்தவை. ஆதலின், இப்பாடல்கள் சமயப்பற்றுடையார் பலராலும் அன்போடு ஓதியுணரப்பெற்று வருதல் கண்கூடு.

இத் திருப்பாடல்களை அச்சிற் பதித்து வெளியிடப்பட்ட பதிப்புக்கள் பல உண்டு. சில பதிப்புக்கள் சிறியதும், பெரியதுமான உரைகளோடு கூடியும் உள்ளன. எனினும்,

மூலபாடங்கள் யாவருக்கும் எளிதில் பொருள் விளங்கும் வகையில் சந்தி பிரித்துத் தெளிவான முறையில் வெளிவரல் வேண்டும் என்னும் பெருங் கருணையால், தருமையாதீனம் 25ஆவது குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அளித்தருளிய அருளாணையின் வண்ணம், இவ்வாதீன ஆதி பரமாசாரிய மூர்த்திகளாகிய ஸ்ரீகுருஞானசம்பந்தரது குரு பூஜை விழா மலராக இந்நூல் வெளிவருகின்றது. ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானத்தின் இப்பெருங் கருணைத்திறத்திற்குச் சமய உலகம் பெரிதும் கடப்பாடுடையது. இவ் அரும்பணியை அடியேற்கு வழங்கியருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணியவர்களது திருவடித் தாமரைகளுக்கு அடியேன் எனது மன மொழி மெய்களாலாகிய வணக்கத்தைச் செலுத்திக் கொள்கிறேன்.

இங்ஙனம்,

அடியேன்,

தருமையாதீனம்,
21—5—65.

சி. அருணைவடிவேல்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தாயுமான சுவாமிகள் துதி

வாயும்ஆ ணவமலமும் மறுபிறப்புந்
துறவறத்தால் மாற வீசி
ஆயும்வே தாகமத்தின் அருள்வலியிற்
சிவஞான ஆழி மூழ்கிப்
பாயுமால் விடைப்பரமன் இருவியலும்
பார்த்துணர்ந்து பதத்தின் ஒன்றும்
தாயுமா னவன்றன்இரு சரணமலர்
சிரமதனில் தரித்து வாழ்வாம்.

புராதனமெய்ச் சிவஞான போதமெனுஞ்
சித்தாந்தப் பொருளி யாவுந்
தராசுமுனே யாநிறுவிச் சாயாமல்
அனுபவத்தில் தமிழைப் பாடிப்
பராவுசிவ மயமாகிப் பரஞானத்
தனிமைநெறிப் பரிமேல் ஏறி
நிராமயதே யத்தேகி நிறைதாயு
மானவனே நினைந்து வெல்வாம்.

— தனிப்பாடல்.

உ

சிவமயம்

# தாயுமான சுவாமிகள் வரலாறு

**முன்னுரை :**

உலகிற்கு ஒருமுதலாகிய இறைவனை அடையும் நெறி இரண்டு; அவை, 'அறிவுநெறி', 'அன்புநெறி' என்பன. இவற்றை, 'ஞானமார்க்கம், பத்திமார்க்கம்' என்பர். இவை இரண்டும் ஒன்றை ஒன்று விட்டு நிற்பன அல்ல; ஒன்றில் ஒன்று கலந்தே இருக்கும். 'அறிவு நெறி' அல்லது, 'ஞானமார்க்கம்' என்பது. தத்துவ நூல் வழியே இறைவனை உணர்ந்து அன்பு செய்வது. 'அன்புநெறி' அல்லது 'பத்திமார்க்கம்' என்பது தத்துவ நூல்வழியன்றி, இயல்பாகவே இறைவனது திருவருளை உணர்ந்து அவனிடத்தில் அன்புமீதூரப் பெறுவது. இவற்றுள், 'ஞானமார்க்கத்தின் பின்னரே பத்திமார்க்கம் வாய்க்கும் என்பதும், 'பத்திமார்க்கத்தில் உள்ளவருங்கூட முற்பிறப்பில்ஞானமார்க்கத்தில் நின்ற தொடர்புடையவர்களே' என்பதும் சிவநெறிக் கொள்கைகள்.

ஞானமார்க்கத்தை விளக்குவன சாத்திரங்கள்: பத்திமார்க்கத்தில் செலுத்துவன, தோத்திரங்கள். சைவ சமயத்திற்கு உரிய சாத்திரங்கள், 'உந்தி, களிறு, உயர்போதம், சித்தியார்' முதலிய மெய்கண்டநூல்களும், தோத்திரங்கள் தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகளும் ஆகும்.

சாத்திரங்களிலும், தோத்திரம் உண்டு. தோத்திரங் களிலும் சாத்திரம் உண்டு.

தேவாரம், திருவாசகம் முதலிய தோத்திரங்கள் தோன்றி விளக்கம் பெற்ற பின்னர்த் தமிழில் தோத்திர நூல்கள் பலவகை வடிவில் தோன்றி வளர்ந்தன. சிவஞான போதம், சிவஞானசித்தி முதலிய சாத்திரங்களுக்குப் பின்னர், அத்தகைய தோத்திர நூல்கள் பலவற்றில், சாத்திரக் கருத்துக்கள் மிகுதியாக இடம் பெறலாயின. இவற்றில் அறிவுநெறியும் அன்புநெறியும் இணைந்து நின்று உலகிற்குப் பயன்பட்டுவருதல் கண்கூடு. இவ்வகையில் ஞானக் கருவூலமாய் நின்று, பத்தி வெள்ளத்தையும் அளவின்றிப் பெருக்கி நிற்கும் அரியதோத்திரப் பாடல்கள்' அண்மைக் காலத்திலே வாழ்ந்த அருளாளராகிய தாயுமான அடிகளது பாடல்களேயாம். இவரது வரலாற்றை நோக்கின், இளமை தொட்டே அடிகள், இறையருள் ஒன்றிலேயே நாட்டம் உடையவராய் இருந்தமை புலனாகும்.

## தோற்றம் :

சோழநாடு, காவிரியின் இருமருங்கிலும் பாடல் பெற்ற திருத்தலங்கள் பலவற்றை உடையது. அவைகளில், 'வேதாரணியம்' எனவழங்கும், 'திருமறைக்காடு' என்பது ஒரு சிறந்த திருத்தலம். அது, வேதங்கள் பூசித்துச் சென்ற பின், அவைகள் இட்ட திருக்காப்புடனே இருந்த கதவை அப்பர் தமதுஅருந்தமிழால் திறந்தும், ஞானசம்பந்தர் தமது நற்றமிழால் அடைத்தும் முன்னைய நிலையை உண்டாக்கிய சிறப்பை உடையது. ஞானசம்பந்தர், நன்றியில் நெறியில் அழுந்திய பாண்டிய நாடும், நற்றமிழ் வேந்தனுகிய

பாண்டியனும் உய்ந்து, வென்றிகொள் திருநீற்றொளியில் விளங்குமாறு செய்யத் திருவுளம் பற்றி, எழுந்தருளிச் சென்ற பெருமையை உடையது.

இத்திருத்தலத்திலே உழுவித்து உண்ணும் சைவ வேளாள மரபினருள், கேடிலியப்பப் பிள்ளை என்னும் பெரியார் ஒருவர் இருந்தார். அவர் தமது மரபிற்கு ஏற்ப, சிவபத்தி சிவனடியார் பத்தி, முதலிய சிவநெறி ஒழுக்கங்களில் சிறந்து, தம் பண்பிற்கேற்ற வாழ்க்கைத் துணைவியாராக வாய்த்த, 'கஜவல்லி அம்மை' என்பவரை மணந்து இல்லறம் நடத்திவந்தார். 'கேடிலியை நாடும் அவர் கேடிலாரே' என்ற அப்பர் திருவாக்கினால், கேடிலி என்பது சிவபிரான் பெயராதல் விளங்கும். இவருக்கு, 'வேதாரணியப் பிள்ளை' என்ற தமையனார் ஒருவர் இருந்தார்.

கேடிலியப்பப் பிள்ளையவர்களது சிவபத்திமுதலியவைகளைக் கண்ட சைவ ஆதீனத்தார், இவரை அத்தலத் திருக்கோயில் அலுவலராக அமர்த்தினர். அவ்வலுவலை இவர் நன்கு புரிந்து வருங்கால், ஓர் ஆண் மகவு பிறக்க, அதற்கு 'சிவசிதம்பரம்' என்று பெயரிட்டு வளர்த்து வந்தார்.

அந்நாளில் திருச்சிராப்பள்ளியை, நாயக்கர் வழிவந்தவராகிய, முத்துக்கிருஷ்ண நாயக்கர் என்பவர் ஆண்டு வந்தார். அவர் ஒரு சமயம் வேதாரணியத்துக்குத் தரிசனம், கடலாட்டு முதலியவற்றின் பொருட்டு வந்தபொழுது, திருக்கோயில் அலுவலராகிய கேடிலியப்பப் பிள்ளையவர்கள், நன்கு வரவேற்றுத் தரிசனம் முதலியவைகளைச் சிறப்புறச் செய்வித்தார். அவ்வமையம் மன்னர், பிள்ளையவர்களது செயல்திறன், சிவபத்தி முதலியவைகளைக் கண்டு, தமது ஆட்சியில் தலைமைக் கணக்கு அலுவலராக அமர்த்திக்

கொண்டார். அப்பதவி, அக்காலத்தில், 'பெரிய சம்பிரதி' என்று சொல்லப்பட்டது. இவ்வலுவல் காரணமாக, கேடிலியப்பப் பிள்ளையவர்கள், திருமறைக்காட்டை விட்டுத் திருச்சிராப்பள்ளி சென்று வாழ வேண்டியதாயிற்று.

அங்ஙனம் சென்று வாழ்ந்திருக்குங்கால், தம் தமையனார் வேதாரணியப் பிள்ளை மகப்பேறின்றி வருந்துவது கேட்ட கேடிலியப்பப் பிள்ளையவர்கள், தமக்கு இருந்தவோரே மகனாகிய சிவசிதம்பரத்தை அவருக்குச் சுவீகாரபுத்திரனாக அளித்துவிட்டார். அதன்பின்பு தமக்குப் புதல்வர்ப்பேறு இல்லாமையால், அதுகுறித்து, திருச்சிராப்பள்ளிக் குன்றுடையாராகிய தாயுமானேசுரரைத் தம் மனைவியரோடும் அன்போடு வணங்கி வேண்டிவந்தார். வேண்டுவார் வேண்டுவதே ஈவானாகிய அப்பெருமானது திருவருளின் வழியே சில ஆண்டுகட்குப்பின், அவர்கட்கு, நல்லதொரு நாளில், நல்லோரையில், நன்மகனார் ஒருவர் அவதரித்தார். அவருக்குச் சிராப்பள்ளிப் பெருமானது திருப்பெயராகிய ' தாயுமானவர் என்பதையே பெயராக இட்டுத் தாயும் தந்தையும் பெருமகிழ்வுடன், சடங்குகள் பலவும் சிறக்கச் செய்து, அருமையாக வளர்த்தார்கள், அவரே நம் தாயுமான அடிகள்.

கல்வி :

தாயுமானவரும் இளம்பிறைபோல் இனிது வளர்ந்து. உரியபொழுதிலே கல்வி தொடங்கிக் கற்பிக்கப் பெற்று. தென்மொழி வடமொழி இருமொழிகளிலும் உள்ள இலக்கியம், இலக்கணம், தருக்கம் முதலியவைகளைக் கற்றார். முறைப்படி சமய தீக்கை பெற்றுச் சைவத் திருமுறைகள்

பாண்டியனும் உய்ந்து, வென்றிகொள் திருநீற்றொளியில் விளங்குமாறு செய்யத் திருவுளம் பற்றி, எழுந்தருளிச் சென்ற பெருமையை உடையது.

இத்திருத்தலத்திலே உழுவித்து உண்ணும் சைவ வேளாள மரபினருள், கேடிலியப்பப் பிள்ளை என்னும் பெரியார் ஒருவர் இருந்தார். அவர் தமது மரபிற்கு ஏற்ப, சிவபத்தி சிவனடியார் பத்தி, முதலிய சிவநெறி ஒழுக்கங் களில் சிறந்து, தம் பண்பிற்கேற்ற வாழ்க்கைத் துணைவியா ராக வாய்த்த, 'கஜவல்லி அம்மை' என்பவரை மணந்து இல்லறம் நடத்திவந்தார். 'கேடிலியை நாடும் அவர் கேடிலாரே' என்ற அப்பர் திருவாக்கினால், கேடிலி என்பது சிவபிரான் பெயராதல் விளங்கும். இவருக்கு, 'வேதா ரணியப் பிள்ளை' என்ற தமையனார் ஒருவர் இருந்தார்.

கேடிலியப்பப் பிள்ளையவர்களது சிவபத்திமுதலியவை களைக் கண்ட சைவ ஆதீனத்தார், இவரை அத்தலத் திருக் கோயில் அலுவலராக அமர்த்தினர். அவ்வலுவலை இவர் நன்கு புரிந்து வருங்கால், ஓர் ஆண் மகவு பிறக்க, அதற்கு 'சிவசிதம்பரம்' என்று பெயரிட்டு வளர்த்து வந்தார்.

அந்நாளில் திருச்சிராப்பள்ளியை, நாயக்கர் வழிவந்த வராகிய, முத்துக்கிருஷ்ண நாயக்கர் என்பவர் ஆண்டு வந் தார். அவர் ஒரு சமயம் வேதாரணியத்துக்குத் தரிசனம், கடலாட்டு முதலியவற்றின் பொருட்டு வந்தபொழுது, திருக் கோயில் அலுவலராகிய கேடிலியப்பப் பிள்ளையவர்கள், நன்கு வரவேற்றுத் தரிசனம் முதலியவைகளைச் சிறப்புறச் செய்வித்தார். அவ்வமையம் மன்னர், பிள்ளையவர்களது செயல்திறன், சிவபத்தி முதலியவைகளைக் கண்டு, தமது ஆட்சியில் தலைமைக் கணக்கு அலுவலராக அமர்த்திக்

கொண்டார். அப்பதவி, அக்காலத்தில், 'பெரிய சம்பிரதி' என்று சொல்லப்பட்டது. இவ்வலுவல் காரணமாக, கேடிலியப்பப் பிள்ளையவர்கள், திருமறைக்காட்டை விட்டுத் திருச்சிராப்பள்ளி சென்று வாழ வேண்டியதாயிற்று.

அங்ஙனம் சென்று வாழ்ந்திருக்குங்கால், தம் தமையனார் வேதாரணியப் பிள்ளை மகப்பேறின்றி வருந்துவது கேட்ட கேடிலியப்பப் பிள்ளையவர்கள், தமக்கு இருந்தஒரே மகனாகிய சிவசிதம்பரத்தை அவருக்குச் சுவீகாரபுத்திரனாக அளித்துவிட்டார். அதன்பின்பு தமக்குப் புதல்வர்ப்பேறு இல்லாமையால், அதுகுறித்து, திருச்சிராப்பள்ளிக் குன்றுடையாராகிய தாயுமானேசுரரைத் தம் மனைவியரோடும் அன்போடு வணங்கி வேண்டிவந்தார். வேண்டுவார் வேண்டுவதே ஈவானாகிய அப்பெருமானது திருவருளின் வழியே சில ஆண்டுகட்குப்பின், அவர்கட்கு, நல்லதொரு நாளில், நல்லோரையில், நன்மகனார் ஒருவர் அவதரித்தார். அவருக்குச் சிராப்பள்ளிப் பெருமானது திருப்பெயராகிய ' தாயுமானவர் என்பதையே பெயராக இட்டுத் தாயும் தந்தையும் பெருமகிழ்வுடன், சடங்குகள் பலவும் சிறக்கச் செய்து, அருமையாக வளர்த்தார்கள், அவரே நம் தாயுமான அடிகள்.

**கல்வி :**

தாயுமானவரும் இளம்பிறைபோல் இனிது வளர்ந்து. உரியபொழுதிலே கல்வி தொடங்கிக் கற்பிக்கப் பெற்று. தென்மொழி வடமொழி இருமொழிகளிலும் உள்ள இலக்கியம், இலக்கணம், தருக்கம் முதலியவைகளைக் கற்றார். முறைப்படி சமய தீக்கை பெற்றுச் சைவத் திருமுறைகள்

மெய்கண்ட நூல்கள் என்பவற்றையும் ஓதியுணர்ந்து, மற்றும் திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தரலங்காரம் போன்ற நூல்களையும் பயின்றார். முன்னைப்பிறப்பின் தொடர்பால் தாயுமானவருக்கு அவர் கற்ற கல்விகள் எல்லாம், பிறரிடம் 'கடம், படம்' என்று உருட்டிப் பெருமை படைத்துக் கொள்வதற்கு உரியனவாகாது, 'ஆன்மலாபத்தை அடைதல் எவ்வாறு?' என்று அதனையே விரும்பும் பெருவேட்கை உண்டாவதற்கே உதவுவவாயின.

அலுவல் ஏற்றல் :

இங்ஙிலையில் திருச்சிராப்பள்ளி அரசர் குடும்பத்தில் இரண்டு தலைமுறைகள் சென்றன. அஃதாவது, முத்துக் கிருஷ்ண நாயக்கரும், முத்துவீரப்ப நாயக்கரும் மறைந்து. விசயரங்க சொக்கநாத நாயக்கர் ஆட்சிக்கு வந்து ஆளுகை புரியலானார், அதுபோது கேடிலியப்பப் பிள்ளை சிவபதம் அடைய, அவர் மகனாராகிய தாயுமானவரே அவரது பதவியை ஏற்கத் தகுதியுடையவர் என்று கருதி, அப் பதவியை அரசர் தாயுமானவரையே ஏற்று அலுவல் பார்த்துவரச் செய்தார்.

உலகியலில் தமக்கு வழிமுறையாக வந்த அலுவலைத் தாயுமானார் ஏற்று நடத்திவந்த போதிலும், அவரது உண்மை நாட்டம், ஆன்ம லாபத்தைப் பெறுவதிலேயே இருந்தது. எனவே, பெரியார்களை எதிர்ப்படும்போதெல்லாம் தாயுமானவர், தத்துவ ஆராய்ச்சி பற்றியே அளவளாவி வந்தார். ஞான தாகம் உடையவராய் இருந்த தாயுமானவர்க்கு, அவர் தம் உள்ளமும், உடலும் உருகத் தக்க வகையில் ஒருநாள் தக்க ஞானாசாரியரது தரிசனம் கிடைத்துவிட்டது.

குரு தரிசனம் :

திருச்சிராப்பள்ளிக் குன்றின் படிவழிப் பாங்கரில் உள்ளது, ஸ்ரீ சாரமா முனிவர் மடாலயம். 'சாரமா முனிவர்' என்பவர். நந்தி தேவர் மாணுக்கராய்க் கயிலையி னின்றும் தமிழ்நாடு போந்து தங்கியருளிய திருமூல நாயனரது பரம்பரையில் வந்தவர். அவர் திருச்சிராப் பள்ளியில் அமர்ந்து ஞான ஒளி பரப்பி வந்த இடமே, ஸ்ரீ சாரமா முனிவர் மடாலயம். அவர் சமாதி கூடிப் பரிபூரணம் எய்திய இடத்தில், அறுமுகக் கடவுள் திருக் கோயில் ஒன்று திகழ்வதை இன்றும் காணலாம்.

அம் முனிவருக்குப்பின் வழிவழியாகப் பல முனிவர்கள் அம்மடாலயத்தில் எழுந்தருளியிருந்து, பக்குவிகள் பலர்க்கு ஞானேபதேசம் செய்துவந்தனர். அவ்வகையில் 17-வது பட்டமாக எழுந்தருளியிருந்தவர், ஸ்ரீ மௌனகுரு சுவாமி கள்.

அக் குருமூர்த்திகளது தரிசனமே ஒருநாள் நம் தாயுமானவர்க்குக் கிட்டியது. அவரது திருவடிகளில் வீழ்ந்து தம்மை அடியவராக ஏற்று, உண்மை நெறியை உணர்த்தி உய்விக்குமாறு வேண்டினர்.

குருவருள் :

மௌனகுருவும் அங்ஙனமே அவரைத் தம் அடியவ ராக ஏற்று, விசேட தீக்கை செய்து, சிவபூசை எழுந்தருள் வித்துக் கொடுத்தருளினர். அதன் பின்பு, கல்வியில் வல்லவராகிய தாயுமானவர் வேதாந்த சித்தாந்தங்களிலும். பிற சமய நூல்களிலும் தமக்கிருந்த ஐயங்களைப் பற்றி

எல்லாம் தம் குருவினிடம் விண்ணப்பிக்க, குருமூர்த்திகள் அவ்வையங்களை யெல்லாம் தக்க சுருதி, யுக்தி, அனுபவங் களால் நீக்கித் தெரிவித்தருளினுர்கள். அதுபோழ்து குருமூர்த்திகள் தாயுமானவருக்குத் தெளிவை உண்டாக் கியது, ' சிவஞான சித்தியார் ' என்னும் நூலைக்கொண்டே யாகும். அதனுல், தாயுமானவர் தெரிந்து கடைப்பிடித்த மெய்கண்டநெறி சிவஞானசித்தி நெறியாயிற்று. சாரமா முனிவர் மடாலயமே பிற்காலத்தில் 'மௌன மடம்' என்று வழங்கப் பெறுவதாயிற்று.

17ஆவது பட்டம் ஸ்ரீ மௌனகுரு சுவாமிகள் தருமை யாதீனத்தில் சென்றிருந்து அந்த மௌனமடத்தின் பரிபாலனத்தைத் தருமைஆதீனமடாலயத்தில் ஒப்படைத்து விட்டுப் பரிபூரணம் அடைந்தமையால், தருமையாதீனத்தி லிருந்த முனிவர் குழாத்துள் ஒருவரே திருச்சிராப்பள்ளி மௌனமடத்துக் கட்டளை விசாரணைத் தம்பிரான் சுவாமிகளாக அமர்த்தப்பெற்றனர். அதுமுதல் ஏறக் குறைய முந்நூறு ஆண்டுகளுக்குமேலாக மலைக்கோட்டை ஸ்ரீ மௌனமடம், தருமை ஆதீன பரிபாலனத்துக்கு உட் பட்டதாய் இருந்துவருதல் யாவரும் அறிந்தது.

குருவுபதேசம் பெற்றபின்பு தாயுமானவர், அதனைச் சிந்தித்துத் தெளிவதிலேயே பெரிதும் ஈடுபாடுடையவராய் இருந்தார். அக்காலங்களில் பாடிய பாடல்களே, அவரது பாடலின் முற்பகுதியில் விளங்குகின்றன என்பர். அவரது ஞானநெறியை அறிந்த அரசர், இனி, அடியேன் தங்கட்கு இடையூறு விளைக்க விரும்பவில்லை ; தங்கள் விருப்பப்படி இருக்கலாம்' என்று சொல்லி, அவருக்கு வேண்டுவன பலவற்றையும் செய்துவந்தார். ஆயினும், தாயுமானவர்

அரசாங்க அலுவலைப் பார்த்துக்கொண்டே, ஞானநெறியில் ஒழுகிவந்தார். இதற்கிடையில், தாயுமானவர், தம் குருவை வணங்கித் தமக்கு நிருவாண தீக்கை செய்து, துறவுநிலையை அளிக்குமாறு வேண்டினர். ஆயினும், 'சிறிது காலம் இல்லறத்தில் இருந்து மீண்டபின்பே அஃது உனக்கு வாய்க்கும்' என்று குருவாக்குப் பிறந்தது; அதனால், தாயுமானவர் யாதும் சொல்லாது அமைந்திருந்தார்.

### வெளியேற்றம் :

பின்பு, விசயரங்கசொக்கநாத நாயக்கர் உலகவாழ்வை நீத்துவிட, ஆட்சி அவர் மனைவி மீனட்சியுடையதாயிற்று. அவள் தாயுமானவரது பேரழகில் ஈடுபட்டு, ஒருநாள் தன் தகாத செயலுக்கு உட்படுமாறு வற்புறுத்த, தாயுமானவர் இணங்காது, அவளுக்கு அறிவுரை பல பகர்ந்து இருக்கச் செய்து, அன்று இரவே திருச்சிராப்பள்ளியை விட்டுத் தம் சிறியதாயார் மகனராகிய 'அருளைய பிள்ளை' என்பவருடன் வெளிப்போந்து நடந்து, 'நல்லூர்' என்ற சிற்றூரை அடைந்தார். வரும்பொழுது, மறந்து வைத்துவந்த பூசைப் பெட்டகத்தைப் பின்பு அருளையர் சென்று கொணர்ந்து கொடுத்தார்.

அப்பால் இருவருமாகச் சென்று விராலிமலையில் வேளாள அன்பர் ஒருவர் ஆவன செய்துதர, அங்கே பல நாட்கள் இருந்தனர். தாயுமானவருச்குச் சித்தர்களது தொடர்பு விராலி மலையில் ஏற்பட்டதே என்று கூறுவர். பின்பு, 'கோகர்ணம்' என வழங்கும் கபிலநகர் அடைந்து, பெரியநாயகியைப் பாடலால் துதித்து, இராமேசுவரத்தை அடைந்தனர். அங்குள்ள அம்மைமீது பாடியதே மலைவளர் காதலி பதிகம். இராமேசுரத்தில் தாயுமானவர்

தங்கியிருந்தபொழுது, மழை இல்லாதிருந்த காலத்தில், ஒரு வெண்பாவைப் பாடியருள, நல்ல மழை பொழிந்தது.

தாயுமானவர்பால் நிகழ்ந்த இந்நிகழ்ச்சிகளையெல்லாம் கேள்வியுற்ற அவர் தமையனார் சிவசிதம்பரம் பிள்ளையவர்கள் இராமேசுரம் சென்று, தாயுமானவரையும், அருளையரையும் திருமறைக்காட்டிற்கு அழைத்து வந்தார்.

**திருமணம் :**

தாயுமானவரை அவர் தமையனார் முதலியோர் திருமணம் புரிந்துகொள்ளுமாறு வற்புறுத்த, அதுவே, தம் குருவாணையாகவும் இருந்தமையால், தாயுமானவர் அதற்கு இசைந்தார். பின்பு, 'மட்டுவார் குழலி' என்னும் கற்பிற் சிறந்த அம்மையாரை மணம் செய்விக்கப் பெற்றார்.

தாயுமானவர் அவ்வம்மையோடு இல்லறத்தை இனிதே நடத்திவந்தார். அதுகாலை அவ்வம்மையார் ஓர் ஆண் மகவை ஈன்று சிவபதம் அடைந்தார். அம்மகவுக்கு, 'கனக சபாபதி' என்று பெயரிட்டு வளர்த்திருந்து, சிலஆண்டுகள் சென்றபின், தம்மகனையும் உடைமைகளையும் தம்தமையனாரிடமே ஒப்புவித்துவிட்டுத் தாயுமானவர் மீண்டும் திருச்சிராப்பள்ளியை அடைந்தார். அருளையரும் அவரைப் பின்தொடர்ந்து சென்றார்.

**துறவு நிலை :**

திருச்சிராப்பள்ளியை அடைந்த தாயுமானவர் தம் குருமூர்த்திகளிடம் சென்று வணங்கிநிற்க, அவரும் தம் மாணாக்கரது பரிபக்குவ நிலையைக்கண்டு, நிருவாண தீக்கை

செய்து, துறவு நிலைவழங்கி, ஞானோபதேசத்தைச் செய் தருளினார். அதனால், வெறுமிடியனுக்குப் பெருநிதியம் கிடைத்தாற்போன்று பெருமகிழ்வெய்திய தாயுமானவர், தம் குருவின் அடிநிழலிலேயே இருந்து, ஞான நிட்டையைப் பயின்று வந்தார். அக்காலத்தில், சிரகிரிப்பெருமான் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் தென்முகக் கடவுள் திருமுன்பும், அவருக்கு ஞான நிட்டை பயிலும் இடமா யிற்று. துறவு நிலையை அடைந்த பின்னர்த் தாயுமானவர், 'சுவாமிகள்' என்றும், 'அடிகள்' என்றும் அனைவராலும் போற்றப்பெற்றார்.

பன்னாட்களுக்குப்பின் தாயுமான அடிகள், சிவதல யாத்திரை செய்ய விரும்பிக் குருமூர்த்திகளிடம் விடை பெற்றுத் தம் மாணவர் அருளையருடன் பல தலங்களுக்குச் சென்று இறைவனை வணங்கி, இராமநாதபுரத்தை அடைந் தார். அந்நகரின் கீழ்பால் 'காட்டூரணி' என்னும் இடத் தில் புளியமரம் ஒன்றின் நிழலில் தங்கி நிட்டை கூடி யிருந்தார். அக்காலை, தம் சிறிய தாயார் மகனாராய்த் தம்மை அகலாதிருக்கும் அருளையருக்கும், கோடிக்கரை ஞானியார் முதலிய பக்குவிகள் சிலருக்கும், அடிகள் ஞானோபதேசம் செய்தருளினார்.

**இறையடி கூடல் :**

அடிகள் தங்கியிருந்த அவ்விடத்தில் அம்மையார் ஒருவர் காவும், குளமும் அமைத்து எழுந்தருளியிருக்கச் செய்தார். அவ்விடம் இப்பொழுது, 'இலட்சுமிபுரம்' என வழங்குகிறது. அவ்விடத்திலே தாயுமான அடிகள் ஞானநிட்டையில் பலநாள் இருந்து, இறையடி நிழலை எய்தினார்கள். சுவாமிகள் இங்குப் பன்னாள் நிட்டையில்

இருக்க அதையறியாத சிலர், தேகவியோகம் ஆனதாகக் கருதி, அவரது உடலைஎரிப்படுத்தினர் என்றும், தீப்பற்றிய பொழுது சுவாமிகள் கண் விழித்துப் பார்த்து, நிகழ்ந்ததை உணர்ந்து அங்ஙனமே இறையடி யடைந்தார்கள் என்றும் செவிவழிச்செய்தி ஒன்று வழங்குகிறது. அடிகள் இறைவன் திருவடி கூடியது, சாலிவாகன சகம் 1581க்குச் சரியான சுபகிருது ஆண்டு (கி. பி. 1659) தைத்திங்கள் சோமவாரம் விசாக நட்சத்திரம் பௌர்ணமி கூடிய நாள் என்பது. அவர் மாணுக்கராகிய கோடிக்கரை ஞானியார் பாடலால் நன்கு விளங்குகிறது, அப்பாடல் வருமாறு :-

துகளறு சாலி வருடம்ஆ யிரத்தைஞ்
　　ஞூற்றெண்டெண் பத்தொன்று தொடரும்
மிகுசுப கிருதாம் வருடம்தை மாதம்
　　வெண்மதி வாரநாள் விசாகம்
மகிமைசேர் பூர்ணத் திதியினில் அருத்த
　　மண்டல சமயத்திற் கங்கை
திகழ்கனி யதனில் தாயுமா னவர்தாம்
　　சிவத்தினிற் கலந்தநற் றினமே.

இப் பாடலாலும், விசயரங்க சொக்கநாத நாயக்கரது ஆட்சிக் காலம் கி. பி. 1627 முதல் 1653 வரை என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுவதனுலும், தாயுமான அடிகள் காலம், கி. பி. 17ம் நூற்றுண்டு என்பது தெளிவு.

முடிவுரை :

சுவாமிகள் அருளிச் செய்த பாடல்கள் 1452. இவை பல்வேறுவகை அமைப்பில், பல தலைப்புக்களுடன் காணப் படுகின்றன. பெரும்பான்மையான தலைப்புக்கள், முதற்

பாட்டின் தொடக்கத்தை ஒட்டி அமைந்தவை. கண்ணி களும், பெருங்கழிநெடில் விருத்தங்களும் முடிவை ஒட்டி அமைந்துள்ளன. இப் பாடல்களில் எல்லாம் அடிகளது உண்மை யுள்ளம் தெளிவுற விளங்குதல் காணலாம். தத்துவக் கருத்து வகையிலேயே இவர்களது பாடல்கள் இருத்தலால், வடசொற்கள் மிகுதியாகப் பயில்வன. இவை களை அன்போடு ஓதியுணர்வோர் உண்மை ஞானத்தைப் பெற்று உய்தல் உறுதி.

தாயுமான அடிகள் தாள்மலர் வாழ்க !

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தாயுமான சுவாமிகள் பாடல்

## திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்

### பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### சிவத்தின் சொருப இயல்பு

1 அங்கிங் கெனாதபடி எங்கும்ப்ர காசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது? தன்னருள்வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது? சமயகோ டிகளெலாந்
தம்தெய்வம் எம்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது?
எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லஒரு சித்தாகி இன்பமாய்
என்றைக்கும் உள்ளதெது? மேல்
கங்குல்பகல் அறநின்ற எல்லையுள தெது? அது
கருத்திற் கிசைந்த;ததுவே
கண்டன எலாம்,மோன உருவெளிய தாகவும்
கருதிஅஞ் சலிசெய்குவாம். (1)

## திருவருட் பெருமை

2 ஊர்அனந் தம்;பெற்ற பேர்அனந் தம்,சுற்றும்
உறவனந் தம்;வினையினால்
உடல்அனந் தம்;செயும் வினைஅனந் தம்;கருத்
தோஅனந் தம்;பெற்றபேர்
சீர்அனந் தம்;சொர்க்க நரகமும் அனந்தம்;நல்
தெய்வமும் அனந்தபேதம்;
திகழ்கின்ற சமயமும் அனந்தம்;அதனால்ஞான
சிற்சத்தி யால்உணர்ந்து
கார்அனந் தங்கோடி வருடித்த தெனஅன்பர்
கண்ணும்விண் ணுந்தேக்கவே
கருதரிய ஆனந்த மழைபொழியும் முகிலை,நம்
கடவுளைத், துரியவடிவைப்,
பேர்அனந் தம்பேசி மறைஅனந் தம்சொலும்
பெரியமவு னத்தின்வைப்பைப்
பேசரும் அனந்தபத ஞானஆ னந்தமாம்
பெரியபொருளைப்பணிகுவாம். (2)

## பராசத்தி தன்மை

3 அத்துவித வத்துவைச், சொற்ப்ரகா சத்தனியை,
அருமறைகள் முரசறையவே
அறிவினுக் கறிவாகி ஆனந்த மயமான
ஆதியை, அனாதிஏக
தத்துவ சொருபத்தை, மதசம்ம தம்பெருச்
சாலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப ஆலம்ப
சாந்தபத வ்யோமநிலையை,

நித்தநின் மலசகித நிட்ப்ரபஞ் சப்பொருளை,
நிர்விடய சுத்தமான
நிர்விகா ரத்தைத், தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்,
சித்தம்அறி யாதபடி சித்தத்தில் நின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை அஞ்சலிசெய்வாம். (3)

---

# 1. பரிபூர ஞானந்தம்

## வாய் வேதாந்தம்

4 யிங்கரிய மன்றிஒரு சாதனம்
மனோவாயு நிற்கும்வண்ணம்
வாலாய மாகவும் பழகியறி யேன்; துறவு
மார்க்கத்தின் இச்சைபோல
நேசானு சாரியாய் விவகரிப் பேன்.; அந்த
நினைவையும் மறந்தபோது
நித்திரைகொள் வேன்; தேகம் நீங்கும்என
நெஞ்சம் துடித்தயருவேன்; [எண்ணிலோ
பேசாத ஆனந்த நிட்டைக்கும் அறிவிலாப்
பேதைக்கும் வெகுதூரமே;
பேய்க்குணம் அறிந்திந்த நாய்க்கும்ஒரு வழிபெரிய
பேரின்ப நிட்டையருள்வாய்!
பாசா டவிக்குளே செல்லா தவர்க்கருள்
பழுத்தொழுகு தேவதருவே!
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ஞானந்தமே! (1)

## பரிபாக காலம்

5 தெரிவாக ஊர்வன, நடப்பன, பறப்பன,
செயற்கொண் டிருப்பனமுதல்
தேகங்க ளத்தனையும் மோகங்கொள் பௌதிகஞ்
சென்மித்த வாங்கிறக்கும்;

விரிவாய பூதங்கள் ஒன்ருெடொன் ருய் அழியும்;
மேற்கொண்ட சேடமதுவே
வெறுவெளி, நிராலம்பம், நிறைசூன்யம், உபசாந்தம்
வேதவே தாந்தஞானம்,
பிரியாத பேரொளி பிறக்கின்ற அருள், அருள்
பெற்ருேர்கள் பெற்றபெருமை,
பிறவாமை என்றைக்கும் இறவாமை யாய்வந்து
பேசாமை யாகும்எனவே
பரிவாய் எனக்குநீ அறிவிக்க வந்ததே
பரிபாக காலமலவோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே! (2)

உயிர்களின் கீழ்மை

6 ஆராயும் வேளையிற் பிரமாதி யானலும்
ஐயஒரு செயலுமில்லே;
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
ராம்என இருந்தபேரும்
நேராக ஒருகோபம் ஒருவேளே வரஅந்த
நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறு வார்;வசன
நிர்வாக ரென்றபேரும்
பூராய மாய்ஒன்று பேசுமிடம் ஒன்றைப்
புலம்புவார்; சிவராத்திரிப்
போதுதுயி லோம்என்ற விரதியரும் அறிதுயிற்
போலே யிருந்துதுயில்வார்;
பாராதி தனிலுள்ள செயலெலாம் முடிவிலே
பார்க்கில்நின் செயலல்லவோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே! (3)

### கன்மத்தின் வலிமை

7 அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே
அம்மாயை யில்லாமையே
யாமென்னும் அறிவுமுண்; டப்பாலும் அறிகின்ற
அறிவினை அறிந்துபார்க்கின்,
எண்டிசை விளக்கும்ஒரு தெய்வஅரு ளல்லாமல்
இல்லையெனும் நினைவுமுண்;டிங்
கியானென தறத்துரிய நிறைவாகி நிற்பதே
இன்பமெனும் அன்புமுண்டு;
கண்டன எலாம்அல்ல என்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்கள்ஓயக்
கண்மூடி ஒருகண மிருக்கஎன் றூற்பாழ்த்த
கன்மங்கள் போராடுதே;
பண்டையுள கன்மமே கர்த்தா எனும்பெயர்ப்
பட்சம்நான் இச்சிப்பனோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! (4)

### வாதனைக் கவலை

8 சந்ததமும் எனதுசெயல் நினதுசெயல் யானெனுந்
தன்மைநினை யன்றியில்லாத்
தன்மையால் வேறலேன்; வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவமிதுவே;
இந்தநிலை தெளியநான் நெக்குருகி வாடிய
இயற்கைதிரு வுளமறியுமே;
இந்நிலையி லேசற் றிருக்கஎன் றூல்மடமை
இதசத்ரு வாகவந்து
சிந்தைகுடி கொள்ளுதே; மலமாயை கன்மம்
திரும்புமோ, தொடுவழக்காய்ச்
சென்மம்வரு மோஎனவும் யோசிக்குதேமனது;
சிரத்தையெனும் வாளுமுதவிப்

பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
பாதுகாத் தருள்செய்குவாய்;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ஞானந்தமே! (5)

## சமய வாதங்கள்

9 பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்;
பொறிபுலன் அடங்குமிடமே
பொருளென்பர் சிலர்;கரண முடிவென்பர் சிலர்;
போனஇட மென்பர் சிலபேர்; [குணம்
நாதவடி வென்பர்சிலர்; விந்துமய மென்பர்சிலர்;
நட்டநடு வேஇருந்த
நாமென்பர் சிலர்; உருவ மாமென்பர் சிலர்;கருதி
நாடில்அரு வென்பர் சிலபேர்;
பேதமற வுயிர்கெட்ட நிலையமென் றிடுவர்சிலர்;
பேசில்அரு ளென்பர்சிலபேர்;
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்;
பிறவுமே மொழிவர்;இவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிட்டைபெறுமோ;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ஞானந்தமே! (6)

## அனுதி பந்தம்

10 அந்தகா ரத்தையோர் அகமாக்கி மின்போல்என்
அறிவைச் சுருக்கினவரார்?
அவ்வறிவு தானுமே பற்றினது பற்றும்
அழுந்தவுந் தலைமீதிலே

சொந்தமாய் எழுதிப் படித்ததார்? மெய்ஞ்ஞான
சுகநிட்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவும் உண்டுண்டு
தூங்கவைத் தவரார்கொலோ?
தந்தைதாய் முதலான அகிலப்ர பஞ்சந்
தனைத்தந்த தெனதாசையோ?
தன்னையே நோவனோ! பிறரையே நோவனோ!
தற்கால மதைநோவனோ!
பந்தமா னதுதந்த வினையையே நோவனோ!
பரமார்த்தம் ஏதும் அறியேன்;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! (7)

## இன்னும் அருள்க

11 வாராதெ லாம்ஒழிய, வருவன எலாம் எய்த,
மனதுசாட் சியதாகவே
மருவநிலை தந்ததும், வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமாகவே
பூராய மாய்உணர ஊகமது தந்ததும்,
பொய்யுடலை நிலையன்றெனப்
போதநெறி தந்ததுஞ், சாசுவத ஆனந்த
போகமே வீடென்னவே
நீராள மாய்உருக உள்ளன்பு தந்ததும்,
நின்னதருள்; இன்னுமின்னும்
நின்னையே துணைஎன்ற என்னையே காக்கஒரு
நினைவுசற் றுண்டாகிலோ,
பாராதி அறியாத மோனமே இடைவிடாப்
பற்றாக நிற்கஅருள்வாய்;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே! (8)

## எல்லாம் வல்லவன்

12 ஆழாழி கரையின்றி நிற்கஇலேயோ? கொடிய
ஆலம்அமு தாகஇலேயோ?
அக்கடலின் மீதுவட வனல்நிற்க இல்லேயோ?
அந்தரத் தகிலகோடி
தாழாமல் நிலேநிற்க இல்லேயோ? மேருவும்
தனுவாக வளேயஇலேயோ?
சத்தமே கங்களும் வச்ரதரன் ஆணேயிற்
சஞ்சரித் திடஇல்லேயோ?
வாழாது வாழவே இராமனடி யாற்சிலேயும்
மடமங்கை யாகஇலேயோ?
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்கஇலேயோ?
பாழான என்மனம் குவியஒரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ஞானந்தமே! (9)

## ஆசைக்கோர் அளவில்லே

13 ஆசைக்கொர் அளவில்லே; அகிலமெல் லாங்கட்டி
ஆளினும் கடல்மீதிலே
ஆணேசெல வேநினேவர்; அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலேந்திடுவர்;
நெடுநா ளிருந்தபேரும்
நிலேயாக வேஇனுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணுவார்; எல்லாம்

யோசிக்கும் வேளையிற் பசிதீர உண்பதும்
உறங்குவது மாகமுடியும்;
உள்ளதே போதும்;நான் நான்எனக் குளறியே
ஒன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையைஅருள்வாய்;
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே! (10)

---

## 2. பொருள் வணக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### பெருவெளி

14 நித்தியமாய், நின்மலமாய், நிட்களமாய், நிராமயமாய் நிறைவாய், நீங்காச்
சுத்தமுமாய்த், தூரமுமாய்ச், சமீபமுமாய்த், துரியநிறை சுடராய், எல்லாம்
வைத்திருந்த தாரகமாய், ஆனந்த மயமாகி மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றஒன்றைச் சுகாரம்பப் [பெருவெளியைச் சிந்தை செய்வாம்.

### சித்தாந்தப் பேரொளி

15 யாதுமனம் நினையும்அந்த நினைவுக்கு நினைவாகி, யாதின் பாலும்
பேதமற நின்றுயிருக் குயிராகி, அன்பருக்கே பேரானந்தக்
கோதில்அமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத் [தன்னைக் கொடுத்துக் காட்டும்
தீதில்பரா பரமான சித்தாந்தப் பேரொளியைச் சிந்தை செய்வாம். (2)

## அப்பாலுக் கப்பால்

16 பெருவெளியாய், ஐம்பூதப் பிறப்பிடமாய்ப், பேசாத
பெரிய மோனம்
வரும்இடமாய், மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய், ஞானக்
குருவருளாற் காட்டிடவும் அன்பரைக்கோத்
கொண்டப் பாலுந் [தறவிழுங்கிக்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருள்அந்தப்
சிந்தை செய்வாம். [பொருளினையாம்

## இனிய பொருள்

17 இகபரமும் உயிர்க்குயிரை, யானெனதற் றவர்உறவை,
எந்த நாளும்
சுகபரிபூ ரணமான நிராலம்ப கோசரத்தைத்,
துரிய வாழ்வை,
அகமகிழ வருந்தேனை, முக்கனியைக், கற்கண்டை,
அமிர்தை நாடி,
மொகுமொகென இருவிழிநீர் முத்திறைப்பக்கரமலர்கள்
முகிழ்த்து நிற்பாம். (4)

## தீதில் பொருள்

18 சாதி,குலம், பிறப்,பிறப்புப், பந்தம்,முத்தி. அருவுருவத்
தன்மை, நாமம்
ஏதுமின்றி, எப்பொருட்கும் எவ்விடத்தும் பிரிவறநின்
றியக்கஞ் செய்யும்
சோதியை,மாத் தூவெளியை, மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்,
தீதில்பர மாம்பொருளைத், திருவருளே நினைவாகச்
சிந்தை செய்வாம். (5)

## குருவாகி வந்தது

19 இந்திரசா லம், கனவு, கானலின் நீர் எனஉலகம்
எமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தால் அழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க;
புந்திமகி ழுறநாளும் தடையறஆ னந்தவெள்ளம்
பொலிக, என்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை அனுதினமும்
வழுத்தல் செய்வாம். (6)

## பூரண ஆனந்தப் பொருள்

20 பொருளாகக் கண்டபொரு ளெவைக்கும்முதற் பொரு
போத மாகித் [ளாகிப்,
தெருளாகிக், கருதும்அன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே னாகி,
அருளானோர்க் ககம்புறம்என் றுன்னாத பூரணஆ
னந்த மாகி,
இருள்தீர விளங்குபொருள் யாதந்தப் பொருளினையாம்
இறைஞ்சி நிற்பாம். (7)

## பெரிய பொருள்

21 அருமறையின் சிரப்பொருளாய், விண்ணவர்மா
ராதி யானோர் [முனிவர்சித்த
தெரிவரிய பூரணமாய்க், காரணம்கற் பனைகடந்த
செல்வ மாகிக்,
கருதரிய மலரின்மணம் எள்ளில்எண்ணெய் உடல்
கலந்தெந் நாளுந் [உயிர்போற்
துரியநடு வூடிருந்த பெரியபொருள் யா?ததனைத்
தொழுதல் செய்வாம். (8)

## சாந்தப் பொருள்

22 விண்ணாதி பூதமெலாம் தன்னகத்தில் அடக்கிவெறு
வெளியாய், ஞானக்
கண்ணாரக் கண்ட அன்பர் கண்ணூடே ஆனந்தக்
கடலாய், வேறொன்
றெண்ணாத படிக்கிரங்கித் தானாகச் செய்தருளும்
இறையே! உன்றன்
தண்ணாருஞ் சாந்தஅருள் தனைநினைந்து கரமலர்கள்
தலைமேற் கொள்வாம். (9)

## அன்புப் பெருக்கு

23 விண்ணிறைந்த வெளியாய்,என் மனவெளியிற் கலந்
வெளியி னூடும் [தறிவாம்
தண்ணிறைந்த பேரமுதாய்ச், சதானந்த மானபெருந்
தகையே! நின்பால்
உண்ணிறைந்த பேரன்பால் உள்ளுருகி, மொழிகுழறி,
உவகை யாகிக்,
கண்ணிறைந்த புனல்உகுப்பக், கரமுகிழ்ப்ப நின்னரு
கருத்தில் வைப்பாம். [ளைக்

## எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

24 ஆதியந்தங் காட்டாத முதலாய். எம்மை
அடிமைக்கா வளர்த்தெடுத்த அன்னைபோல
நீதிபெருங் குருவாகி, மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச், சொச்சமதாய். நிமல மாகி,
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி,
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியை, என் உயிர்த்துணையை, நாடிக் கண்ணீர்
சொரியஇரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம்.

25 அகரஉயிர் எழுத்தனைத்து மாகி வேறாய்
அமர்ந்ததென அகிலாண்டம் அனைத்து மாகிப்,
பகர்வனவெல் லாமாகி. அல்ல வாகிப்,
பரமாகிச், சொல்லரிய பான்மை யாகித்,
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத அறிவாகிச், சுத்த மாகி,
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பால் நினைதல் செய்வாம்.

---

## 3. சின்மயானந்த குரு

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### என்னையும் ஆள்வையோ !

26 அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினல் உருகிவிழிநீர்
ஆருக ஆராத முத்தியின தாவேச
ஆசைக் கடற்குள்மூழ்கிச்
சங்கர ! சுயம்புவே ! சம்புவே ! எனவுமொழி
தழுதழுத் திடவணங்கும்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தண்ணருள் கொடுத்தாள்வையோ!
துங்கமிகு பக்குவச் சனகன்முதன் முனிவோர்கள்
தொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியைஒரு சொல்லால் உணர்த்தியே
சொருபானு பூதிகாட்டிச்
செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்திமுதலே !
சிரகிரி விளங்கவரு தட்சிணு மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (1)

### நீ முன்நிற்பது என்று?

27 ஆக்கையெனும் இடிகரையை மெய்யென்ற பாவிநான்
அத்துவித வாஞ்சையாதல்
அரியகோம் பில்தேனை முடவன்இச் சித்தபடி
யாகும் ; அறிவவிழஇன்பம்

தாக்கும்வகை ஏதி(ந்)நாட் சரியைகிரி யாயோக
சாதனம் விடுத்ததெல்லாஞ்
சன்மார்க்க மல்ல : இவைநிற்க ; என் மார்க்கங்கள்
சாராத பேரறிவதாய்
வாக்குமனம் அணுகாத பூரணப் பொருள்வந்து
வாய்க்கும் படிக்குபாயம்
வருவித் துவட்டாத பேரின்ப மானசுக
வாரியினை வாய்மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண் ?
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிணு மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (2)

'பூரணன்' என்பதன் பொருள் யாது ?

28 ஔவியம் இருக்க, நானென்கின்ற ஆணவம்
அடைந்திட் டிருக்க, லோபம்
அருளின்மை கூடக் கலந்துள் ளிருக்க, மேல்
ஆசா பிசாசமுதலாம்
வெவ்விய குணம்பல இருக்க, என் அறிவூடு
மெய்யன் வீற்றிருக்க
விதியில்லை யென்னிலோ, பூரணன் எனும்பெயர்
விரிக்கில்உரை வேறுமுளதோ?
கவ்வுமல மாகின்ற நாகபா சத்தினுற்
கட்டுண்ட உயிர்கள்மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே!
கதியான பூமிநடுவுட்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்குவரு தட்சிணு மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (3)

## செய்ததும் செய்யாததும்

29 ஐவகை யெனும்பூத மாதியை வகுத்,ததனுள்
அசரசர பேதமான
யாவையும் வகுத்து, நல்அறிவையும் வகுத்து,மறை
யாதிநூ லேயும்வகுத்துச்,
சைவமுத லாம்அளவில் சமயமும் வகுத்து,மேற்
சமயங் கடந்தமோன
சமரசம் வகுத்தநீ யுன்னை நான் அணுகவுந்
தண்ணருள் வகுக்கஇலையோ?
பொய்வளரும் நெஞ்சினர்கள் காணுத காட்சியே!
பொய்இலா மெய்யர் அறிவிற்
போதபரி பூரண அகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே!
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிணு மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (4)

## முன்னும் பின்னும்

30 ஐந்துவகை யாகின்ற பூதபே தத்தினுல்
ஆகின்ற ஆக்கைநீர்மேல்
அமர்கின்ற குமிழியென நிற்கின்றதென்னநான்
அறியாத காலமெல்லாம்
புந்திமகி ழுறஉண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி என்றிருந்தேன்;
பூராய மாகநின தருள்வந் துணர்த்தஇவை
போனவழி தெரியவில்லை;

எந்தநிலை பேசினும் இணங்கவிலை; அல்லால்
இறப்பொடு பிறப்பையுள்ளே
எண்ணினல் நெஞ்சது பகீரெனும்; துயிலுரு
திருவிழியும்; இரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கம்; இவை என்கொலோ?
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிண மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (5)

அன்னையும் தந்தையும்

31 காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போற்
கட்டுண் டிருந்தஎமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற்கிசைந்த
பேரிட்டு, மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை அமுதமூட்டிப்,
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பின் நமனைவிட்
டிடருற உறுக்கி, இடர்தீர்த்.
"திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்துதுயில் கொண்மின்!" என்று
சீரிட்ட வுலகன்னை வடிவான எந்தையே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிண மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (6)

## இரச வாதம் செய்தது

32 கருமருவு குகையனைய காயத்தின் நடுவுட்
களிம்புதோய் செம்பனையயான்
காண்டக விருக்கநீ ஞானஅனல் மூட்டியே,
கனிவுபெற உள்ளுருக்கிப்,
பருவம தறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே, பணிகொண்ட
பட்சத்தை என்சொல்லுகேன்!
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியாம் அந்தமீதும்,
அத்துவித நிலையராய் என்னையாண் டுன்னடிமை
யானவர்கள் அறிவினூடும்,
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிண மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (7)

## பேரின்ப நிலை

33 "கூடுத லுடன்பிரித லற்று, நிர்த் தொந்தமாய்க்,
குவிதலுடன் விரிதல்அற்றுக்,
குணம்அற்று, வரவினொடு போக்கற்று, நிலையான
குறிஅற்று, மலமும்அற்று,
நாடுதலும் அற்று, மேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலும் அற்று, விந்து,
நாதம்அற் றைவகைப் பூதபே தமும்அற்று,
ஞாதுருவின் ஞானம்அற்று,

வாடுதலும் அற்று,மேல் ஒன்றற், றிரண்டற்று,
வாக்கற்று, மனமும் அற்று,
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்டவசமாய்த்
தேடுதலும் அற்றஇடம் நிலை" என்ற மௌனியே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (8)

நினது அருள் வேண்டும்

34 தாராத அருளெலாந் தந்தருள மௌனியாய்த்,
தாயனைய கருணைகாட்டித்,
தாளிணை என் முடிசூட்டி, " அறிவிற் சமாதியே
சாசுவத சம்ப்ரதாயம்,
ஓராமல், மந்திரமும் உன்னுமல். முத்தி நிலை
ஒன்றுே டிரண்டெனுமல்,
ஒளியெனவும், வெளியெனவும். உருவெனவும்,
ஒலியெனவும் உணர்வுருமல், [நாதமாம்
பாராது பார்ப்பதே ஏதுசா தனம்அற்ற
பரமஅநு பூதிவாய்க்கும்
பண்பென் " றுணர்த்தியது பாராமல் அந்நிலை
பதிந்தநின் பழஅடியர்தம்
சீராய் இருக்கநின தருள்வேண்டும் ஐயனே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (9)

## எல்லாம் நின் அருள்

35 போதமாய், ஆதிநடு அந்தமும் இலாததாய்ப்,
புனிதமாய், அவிகாரமாய்ப்,
போக்குவர வில்லாத இன்பமாய் நின்றநின்
பூரணம் புகலிடமதா
ஆதரவு வையாமல் அறிவினை மறைப்பதும்நின்
அருள் ; பின்னும் அறிவின்மைதீர்த்
தறிவித்து நிற்பதும்நின் அருள்; ஆகில், எளியனேற்
கறிவாவதே? தறிவிலா
ஏதம்வரு வகையேது ? வினையேது ? வினைதனக்
கீடான காயமே? தென்
இச்சா சுதந்திரஞ் சிறிதும்இலை; இகபரம்
இரண்டினுள் மலைவுதீரத்
தீதில்அருள்கொண்டினிஉணர்த்திஎனை ஆள்வையோ?
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (10)

## ஞானம் ஒன்றே முத்திக்கு வாயில்

36 பத்திநெறி நிலைநின்றும், நவகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்,
பரவையிடை மூழ்கியும், நதிகளிடை மூழ்கியும்,
பசிதாக மின்றிஎழுநா
மத்தியிடை நின்றும், உதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்தும்
மவுனத் திருந்தும், உயர் மலைமுழை தனிற்புக்கு
மன்னுதச நாடிமுற்றுஞ்

சுத்திசெய் தும்,மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட் டத்தடைத்துச்
சொல்லரிய அமுதுண்டும், அற்பவுடல் கற்பங்கள்
தோறும்நிலை நிற்கவீறு
சித்திசெய் தும்,ஞானம் அலதுகதி கூடுமோ?
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே!
சின்மயா னந்தகுருவே! (11)

---

# 4. மௌனகுரு வணக்கம்

## ஞான யானை

37 ஆசைநிகளத்தினை நிர்த்தூளி படஉதறி,
ஆங்கார முளையை எற்றி,
அத்துவித மதமாகி, மதம்ஆறும் ஆருக
அங்கையின் விலாழியாக்கிப்,
பாசஇருள் தன்நிழல் எனச்சுளித் தார்த்து, மேற்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க உண்டு,முக
படாம்அன்ன மாயைநூறித்,
தேசுபெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக்கு ளேயடக்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்து,நின்
திருவருட் பூர்த்தியான
வாசமுறு சற்சார மீதென்னை ஒருஞான
மத்தகச மெனவளர்த்தாய்;
மந்த்ர குரு வே!யோக தந்த்ர குருவே!மூலன்
மரபில்வரு மௌனகுருவே! (1)

## விசித்திரம்

38 ஐந்துவகை யாகின்ற பூதமுதல் நாதமும்
அடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை அறிவாதி பிரிவாக வறிவார்கள்:
"அறிவாக நின்றநிலையில்

சிந்தையற நில்'' என்று சும்மா இருத்தி,மேற்
சின்மயா னந்தவெள்ளம்
தேக்கித் திளைத்துநான் அதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன்றுகாண் !
" எந்தைவட வாற்பரம குருவாழ்க ! வாழ அரு
ளியநந்தி மரபுவாழ்க !"
என்றடியர் மனமகிழ, "வேதாக மத்துணி
பிரண்டில்லை யொன்''றென்னவே
வந்தகுரு வே!வீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே !
மந்த்ரகுரு வே!யோக தந்த்ரகுரு வே!மூலன்
மரபில்வரு மௌனகுருவே ! (2)

## மாயையின் வல்லமை

39 ஆதிக்க நல்கினவர் ஆர்? இந்த மாயைக்கென்
அறிவின்றி யிடமில்லையோ ?
அந்தரப் புட்பமுங், கானலின் நீரும்ஓர்
அவசரத் துபயோகமோ ?
போதித்த நிலையையும் மயக்குதே ! அபயம்நான்
புக்கஅருள் தோற்றிடாமல்
பொய்யான உலகத்தை மெய்யா நிறுத்திஎன்
புந்திக்குள் இந்த்ரசாலம்
சாதிக்கு தே ; இதனை வெல்லவும் உபாயம்நீ
தந்தருள்வ தென்று? புகல்வாய் ;
சண்மதத் தாபனமும் வேதாந்த சித்தாந்த
சமரசநிர் வாகநிலையும்
மாதிக்கொ டண்டப் பரப்பெலாம் அறியவே
வந்தருளும் ஞானகுருவே !
மந்த்ரகுரு வே ! யோக தந்த்ரகுரு வே ! மூலன்
மரபில்வரு மௌனகுருவே ! (3)

## உலகாயத நடை

40 மின்னனைய பொய்யுடலை நிலையென்றும் மைஇலகு
விழிகொண்டு மையல்பூட்டும்
மின்னார்கள் இன்பமே மெய்யென்றும், வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்,
பொன்னை அழியாதுவளர் பொருளென்றுபோற்றி, இப்
பொய்வேட மிகுதிகாட்டிப்,
பொறைஅறிவு துறவீதலாதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டுத்,
தன்னிகரில் லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல், வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி
மன்னஒரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞானகுருவே!
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே! (4)

## நமது மரபு

41 "போனக மிருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்குமதுபோல்,
புருடர்பெறு தருமாதி வேதமுடன் ஆகமம்
புகலும்அதில் நாலாம்பயன்
ஞானநெறி முக்யநெறி காட்சிஅனு மானமுதல்
நாலு விதங்கள்தேர்ந்து,
நான்நான் எனக்குழறு படைபுடை பெயர்த்திடவும்
நான்குசா தனமும்ஓர்ந்திட்,

டானநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற்,
றணுபட்ச சம்புபட்சம்
ஆம்இரு விகற்பமும் மாயாதி சேவையும்
அறிந், திரண் டொன்றென்னும் ஓர்
மானத விகற்பமற என்றும்நிற் பதுநமது
மர'' பென்ற பரமகுருவே!
மந்த்ரகுருவே! யோக தந்த்ரகுருவே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே. (5)

## புருடார்த்தம் அற்ற புருடன்

42 கல்லாத அறிவும், மேற் கேளாத கேள்வியும்,
கருணைசிறி தேதுமில்லாக்
காட்சியும், கொலைகளவு கட்காம மாட்சியாய்க்
காதலித் திடுநெஞ்சமும்,
பொல்லாத பொய்ம்மொழியும், அல்லாது நன்மைகள்
பொருந்துகுணம் ஏதும்அறியேன்;
புருடர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருடார்த்தம் ஏதும்இல்லேன்;
எல்லாம் அறிந்தநீ அறியாத தன்,றெனக்
கெவ்வண்ணம் உய்வண்ணமோ?
இருளை இருள் என்றவர்க் கொளிதா ரகம்;பெறும்
எனக்குநின் அருள்தாரகம்;
வல்லான் எனும்பெயர் உனக்குள்ள தே;இந்த
வஞ்சகனை ஆள நினையாய்;
மந்த்ரகுருவே! யோக தந்த்ரகுருவே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே! (6)

## மௌனகுருவின் மகிமை

43 கானகம் இலங்குபுலி பசுவொடு குலாவும்; நின்
கண்காண மதயானை நீ
கைகாட்ட வும்கையால் நெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக ஏந்திவருமே;
போனகம் அமைந்ததென அக்காம தேனுநின்
பொன்னடியில் நின்றுசொலுமே;
புவிராசர் கவிராசர் தவராசன் என்றுனைப்
போற்றிசய போற்றியென்பார்;
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களும் உன்
நட்பினை விரும்புவார்; சுகர்வாம தேவர்முதன்
ஞானிகளும் உனைமெச்சுவார்;
வானகமும் மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடும்உன்
மகிமையது சொல்லவெளிதோ;
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே! (7)

## கொலுக் காட்சி

44 சருகுசல பட்சிணிகள் ஒருகோடி யல்லால்,
சகோரபட் சிகள்போலவே
தவளநில ஒழுகமிர்த தாரைஉண் டழியாத
தன்மையர் அனந்தகோடி.
இருவினைகள் அற்றிரவு பகலென்ப தறியாத
ஏகாந்த மோனஞான
இன்பநிட் டையர்கோடி, மணிமந்த்ர சித்திநிலை
எய்தினர்கள் கோடிசூழக்

குருமணிஇழைத்திட்ட சிங்காதனத்தின்மிசை
கொலுவீற் றிருக்கும் நின்னைக்,
கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெலாந் தீரும்வண்ணம்
மருமல ரெடுத்துன் இரு தாளை அர்ச் சிக்கஎனை
வாஎன் றழைப்பதெந்நாள்?
மந்த்ர குருவே! யோக தந்த்ர குருவே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே! (8)

## அகங்காரத்தின் ஆற்றல்

45 ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
ஆணவத் தினும்வலிதுகாண்;
அறிவினை மயக்கிடும்; நடு அறிய வொட்டாது;
யாதொன்று தொடினும் அதுவாய்த்
தாங்காது மொழிபேசும்; அரிகரப் பிரமாதி
தம்மொடு சமானமென்னும்;
தடையற்ற தேரில்அஞ் சுருவாணி போலவே
தன்னில்அசை யாதுநிற்கும்;
'ஈங்கா ரெனக்குநிகர்?' என்னப்ர தாபித்
திராவணா காரமாகி
இதயவெளி எங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்கும்; இத னொடெநேரமும்
வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ?
மௌனோப தேசகுருவே!
மந்த்ரகுரு வே!யோக தந்த்ரகுரு வே!மூலன்
மரபில்வரு மௌனகுருவே! (9)

## மலே இலக்கு

46 பற்றுவெகு விதமாகி ஒன்றைவிட் டொன்றனைப்
பற்றிஉழல் கிருமிபோலப்,
பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்தும்அறி யேன்; துவிதமோ
சிற்றறி;வ தன்றியும், எவரேனும் ஒருமொழி
திடுக்கென் றுரைத்தபோது
சிந்தைசெவி யாகவே பறையறைய உதரவெந்
தீநெஞ்சம் அளவளாவ
உற்றுணர வுணர்வற்றுன் மத்தவெறி யினர்போல
உளறுவேன்; முத்திமார்க்கம்
உணர்வதெப் படி? இன்ப துன்பம்ச மானமாய்
உறுவதெப் படி? ஆயினும்,
மற்றெனக் கைய! நீ சொன்னஒரு வார்த்தையினை
மலேஇலக் கெனநம்பினேன்;
மந்த்ரகுரு வே! யோக தந்த்ரகுரு வே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே ! (10)

---

## 5. கருணாகரக் கடவுள்

### சிவ சிந்தனை

47 நிர்க்குண ! நிராமய ! நிரஞ்சன ! நிராலம்ப !
நிர்விடய ! கைவல்யமாம்
நிட்கள ! அசங்க !சஞ் சலரகித ! நிர்வசன !
நிர்த்தொந்த! நித்த! முத்த!
தற்பர ! விச்வாதீத ! வ்யோமபரி பூரண !
சதானந்த ! ஞான ! பகவ !
சம்பு ! சிவ ! சங்கரா ! சர்வேச ! என்றுநான்
சர்வகாலமு நினைவனோ?
அற்புத ! அகோசர ! நிவர்த்திபெறும் அன்பருக்
கானந்த பூர்த்தியான
அத்துவித நிச்சய ! சொரூபசாட் சாத்கார
அனுபூதி அனுகூதமுங்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்தகுருவே !
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே ! (1)

### தத்துவ சுத்தி

48 மண்ணாதி ஐந்தொடு புறத்தில்உள கருவியும்,
வாக்காதி, சோத்ராதியும்,
வளர்கின்ற சத்தாதி, மனமாதி, கலையாதி,
மன்னுசுத் தாதியுடனே,

தொண்ணூற்றெ டாறும்,மற் றுள்ளனவும், மௌனி
சொன்னஒரு சொற்கொண்டதே! [யாய்ச்
தூவெளிய தாய்அகண் டானந்த சுகவாரி
தோற்றும்அதை என்சொல்லுவேன்!
பண்ணூறும் இசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்றுதவரூப்
பக்குவ விசேடராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகைகூப்பிக்
கண்ணூறு கரைபுரள நின்றஅன் பரையெலாங்
கைவிடாக் காட்சியுறவே!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே! (2)

## முடிந்த உண்மை

49 "எல்லாமும்உன் அடிமையே; எல்லாம்உன் உடை
எல்லாம்உன் னுடையசெயலே; [மையே
எங்கணும் வியாபிநீ" என்றுசொலும் இயல்பென்
றிருக்காதி வேதமெல்லாம்
சொல்லால் முழக்கியது; மிக்கஉப காரமாச்
சொல்லிறந் தவரும்விண்டு
சொன்னவையும் இவை; நல்ல குருவான பேருந்
தொகுத்தநெறி தானும்இவையே
அல்லாமல் இல்லையென நன்று அறிந்தேன்:
அறிந்தபடி நின்றுசுகம்நான்
ஆகாத வண்ணமே இவ்வண்ணம் ஆயினேன்;
அதுவுநின தருளென்னவே
கல்லாத அறிஞனுக் குள்ளே உணர்த்தினை;
கதிக்குவகை ஏது?புகலாய்;
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே! (3)

## பெற்றும் பெருமை

50 பட்டப் பகற்பொழுதை இருளென்ற மருளர்தம்
பட்சமோ எனதுபட்சம் !
பார்த்தஇடம் எங்கணும் கோத்தநிலை குலையாது
பரமவெளி யாகஒருசொல்
திட்டமுடன் மௌனியாய் அருள்செய் திருக்கவும்
சேராமல், ஆர்ஆகநான்
சிறுவீடு கட்டியதில் அடுசோற்றை உண்டுண்டு
தேக்குசிறி யார்கள்போல,
நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமும்
நன்னிலய மாகஉன்னி,
நானென்று நீயென் றிரண்டில்லை என்னவே
நடுவே முளைத்தமனதைக்
கட்டஅறி யாமலே வாடினேன் ; எப்போது
கருணைக் குரித்தாவனோ ?
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே ! (4)

## மெய்யும் பொய்யும்

51 மெய்விடா நாஉள்ள மெய்யர்உள் இருந்துநீ
மெய்யான மெய்யையெல்லாம்
மெய்யென வுணர்த்தியது மெய் ; இதற் கையமிலை ;
மெய்யேதும் அறியாவெறும்
பொய்விடாப் பொய்யனேன் உள்ளத் திருந்துதான்
பொய்யான பொய்யையெல்லாம்
பொய்யென வண்ணமே புகலவைத் தாய்எனிற்
புன்மையேன் என்செய்குவேன் ?

மைவிடா தெழுநீல கண்டகுருவே! விண்டு
வடிவான ஞானகுருவே!
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே!
மதங்கள் தொறு நின்றகுருவே!
கைவிடா தேஎன்ற அன்பருக் கன்பாய்க்
கருத்தூ டுணர்த்துகுருவே!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே! [5)

அரைக் கும்பிடே

52 பண்ணேன் உனக்கான பூசைஒரு வடிவிலே;
பாவித் திறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலருடு நீயே இருத்தி; அப்
பனிமலர் எடுக்கமனமும்
நண்ணேன்; அலாமல்இரு கைதான் குவிக்கஎனின்
நாணும்என் னுளம்நிற்றி நீ;
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யல்முறையோ?
விண்ணே! விணுதியாம் பூதமே! நாதமே!
வேதமே! வேதாந்தமே!
மேதக்க கேள்வியே! கேள்வியாம் பூமிக்குள்
வித்தே! அவ் வித்தின்முளையே!
கண்ணே! கருத்தே! என் எண்ணே! எழுத்தே!
கதிக்கான மோனவடிவே!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே! (6)

## ஞானத்திற்கு உரியவர்

53 சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றின்அது
தான்வந்து முற்றும்எனலால்,
சகமீ திருந்தாலும் மரணம்உண் டென்பது
சதா நிட்டர் நினைவதில்லை;
சிந்தைஅறி யார்க்கீது போதிப்ப தல்லவே ;
செப்பினும் வெகுதர்க்கமாம் ;
திவ்யகுண மார்க்கண்டர், சுகராதி முனிவோர்கள்
சித்தாந்த நித்யரலரோ ?
இந்த்ராதி தேவதைகள், பிரமாதி கடவுளர்
இருக்காதி வேதமுனிவர்,
எண்ணரிய கணநாதர், நவநாத சித்தர்கள்,
இரவிமதி யாதியோர்கள்
கந்தருவர், கின்னரர்கள், மற்றையர்கள் யாவரும்
கைகுவித் திடுதெய்வமே!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே ! (7)

## சதாகால பூசை

54 துள்ளுமறி யாமனது பலிகொடுத்தேன் ; கன்ம
துட்டதே வதைகள் இல்லை ;
துரியநிறை சாந்ததே வதையாம் உனக்கே
தொழும்பன்அன் பபிடேகநீர்;
உள்ளுறையில் என்ஆவி நைவேத்தியம் ; ப்ராணன்
ஓங்குமதி தூபதீபம் ;
ஒருகாலம் அன்றிது, சதாகால பூசையா
ஒப்புவித்தேன் ; கருணைகூர் ;

தெள்ளிமறை வடிவிட்ட அமுதப் பிழம்பே!
தெளிந்ததே னே! சீனியே!
திவ்யரசம் யாவுந் திரண்டொழுகு பாகே!
தெவிட்டாத ஆனந்தமே!
கள்ளன்அறி வூடுமே மெள்ளமெ ள வெளியாய்க்
கலக்கவரு நல்லஉறவே!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே! (8)

## அன்பர் செயல்

55 உடல்குழைய, என்பெலாம் நெக்குருக, விழிநீர்கள்
ஊற்றென வெதும்பிஊற்ற,
ஊசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
ஓர்உறவும் உன்னிஉன்னிப்,
படபடென நெஞ்சம் பதைத்துள் நடுக்குறப்
பாடிஆ டிக்குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பி,ஆர்த் தார்த்தெழுந்து,
மடல்அவிழ மலரனைய கைவிரித் துக்கூப்பி,
வானே! அவ் வானில்இன்ப
மழையே! மழைத்தாரை வெள்ளமே! நீடூழி
வாழி! என வாழ்த்திஏத்தும்
கடல்மடை திறந்தனைய அன்பர்அன் புக்கெளியை
கல்நெஞ்ச னுக்கெளியையோ?
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே! (9

## அறிஞர் அறம்

56 இங்குற்ற படிஅங்கும் எனஅறியும் நல்லறிஞர்
எக்கால மும்உதவுவார்;
இன்சொல்தவ றார்;பொய்ம்மை யாம்இழுக் குரையார்;
இரங்குவார்; கொலைகள்பயிலார்;
சங்கற்ப சித்தர்அவர் உள்ளக் கருத்தில்உறை
சாட்சிநீ இகபரத்தும்
சந்தான கற்பகத் தேவாய் இருந்தே
சமத்தவின் பமும்உதவுவாய்;
சிங்கத்தை ஒத்தெனைப் பாயவரு வினையினைச்
சேதிக்க வருசிம்புளே !
சிந்தா குலத்திமிரம் அகலவரு பானுவே !
தீனனேன் கரையேறவே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளர்அருட்
கனவட் டக்கப்பலே!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே ! (10)

# 6. சித்தர் கணம்

## சித்தரைக் காணும் வேட்கை

57 திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
சென்ருேடி ஆடிவருவீர் ;
செம்பொன்மக மேருவொடு குணமேரு என்னவே
திகழ்துருவம் அளவளாவி
உக்ரமிகு சக்ரதரன் என்னநிற் பீர்; கையில்
உழுந்தமிழும் ஆசமனமா
ஓர்ஏழு கடலையும் பருகவல் லீர்; இந்த்ரன்
உலகும்அயி ராவதமுமே
கைக்கெளிய பந்தாய் எடுத்துவிளை யாடுவீர் ;
ககனவட் டத்தையெல்லாம்
கடுகிடை யிருத்தியே அட்டகுல வெற்பையுங்
காட்டுவீர் ; மேலும்மேலும்
மிக்கசித் திகளெலாம் வல்லநீர் அடிமைமுன்
விளங்கவரு சித்தி இலிரோ ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே ! (1)

## சித்தர்க்குக் கூடும்

58 பாட்டளி துதைந்துவளர் கற்பகநல் நீழலைப்
பாரினிடை வரவழைப்பீர் ;
பத்மநிதி சங்கநிதி இருபாரி சத்திலும்
பணிசெயுந் தொழிலாளர்போல்

கேட்டது கொடுத்துவர நிற்கவைப் பீர்;பிச்சை
கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதி யாக்குவீர் ; கற்பாந்த வெள்ளம்ஒரு
கேணியிடை குறுகவைப்பீர் ;
ஒட்டினை யெடுத்தாயி ரத்தெட்டு மாற்றுக
ஒளிவிடும் பொன்னுக்குவீர் ;
உரகனும் இளைப்பாற யோகதண் டத்திலே
உலகுசுமை யாகஅருளால்
மீட்டிடவும் வல்லநீர் என்மனக் கல்லைஅனல்
மெழுகாக்கி வைப்பதரிதோ ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே ! (2)

## சித்தர் வல்லமை

59 பாரொடுநன் னீராதி ஒன்றொடொன் றுகவே
பற்றிலய மாம்போதினில்
பரவெளியின் மருவுவீர் ; கற்பாந்த வெள்ளம்
பரந்திடின் அதற்குமீதே
நீரில்உறை வண்டாய்த் துவண்டுசிவ யோகநிலை
நிற்பீர் ; விகற்பமாகி
நெடியமுகில் ஏழும் பரந்துவரு டிக்கிலோ
நிலவுமதி மண்டலமதே
ஊரென விளங்குவீர் ; பிரமாதி முடிவில்விடை
ஊர்தியரு ளால்உலவுவீர் ;
உலகங்கள் கீழ்மேல வாகப் பெருங்காற்
றுலாவின்நல் தாரணையினால்
மேருவென அசையாமல் நிற்கவல்லீர் ; உமது
மேதக்க சித்தியெளிதோ !
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே ! (3)

## மானிடப் பிறப்பின் அருமை

60 எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான்
யாதினும் மரிதரிதுகாண் ;
இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ,
ஏதுவரு மோஅறிகிலேன் ;
கண்ணகல் நிலத்துநான் உள்ளபொழு தே அருட்
ககனவட் டத்தில்நின் று
காலூன்றி நின்றுபொழி ஆனந்த முகிலொடு
கலந்துமதி அவசமுறவே
பண்ணுவது நன்மை ; இந் நிலைபதியு மட்டுமே
பதியாய் இருந்ததேகப்
பரிவுகுலை யாமலே கௌரிகுண் டலிஆயி
பண்ணவிதன் அருளினுலே
விண்ணிலவு மதிஅமுதம் ஒழியாது பொழியவே
வேண்டுவேன் உமதடிமைநான் ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே ! (4)

## உலகியல்

61 பொய்திகழும் உலகநடைஎன்சொல்கேன்என்சொல்
பொழுதுபோக் கேதென்னிலோ, [கேன்
பொய்யுடல் நிமித்தம் புசிப்புக் கலைந்திடல்,
புசித்தபின் கண்ணுறங்கல்,
கைதவம் அலாமல்இது செய்தவம தல்லவே ;
கண்கெட்ட பேர்க்கும்வெளியாய்க்
கண்டதிது: விண்டிதைக் கண்டித்து நிற்றல்எக்
காலமோ ? அதையறிகிலேன் ;

மைதிகழும் முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினெடு செம்பொன்மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல்
வரைந்துசய விருதுகாட்டி
மெய்திகழும் அட்டாங்க யோகபூ மிக்குள் வளர்
வேந்தரே! குணசாந்தரே!
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே! (5)

சிவராச யோகர்

62 கெசதுரக முதலான சதுரங்க மனமாதி
கேள்வியின் இசைந்துநிற்பக்,
கெடிகொண்ட தலம் ஆறும் மும்மண்ட லத்திலுங்
கிள்ளாக்குச் செல்ல, மிக்க.
தெசவிதம தாய்நின்ற நாதங்கள் ஒலிடச்,
சிங்காச ஞதிபர்களாய்த்
திக்குத் திகந்தமும் பூரண மதிக்குடை
திகழ்ந்திட, வசந்தகாலம்
இசையமலர் மீதுறை மணம்போல ஆனந்தம்
இதயமேற் கொள்ளும்வண்ணம்
என்றைக்கும் அழியாத சிவராச யோகராய்
இந்த்ராதி தேவர்களெலாம்
விசயசய சயவென்ன ஆசிசொல வேகொலு
விருக்கும்நும் பெருமையெளிதோ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே! (6)

## பேதைக்கு அருளுக

63 ஆணிலே பெண்ணிலே என்போல ஒருபேதை
அகிலத்தின் மிசையுள்ளதோ ?
ஆடிய கறங்குபோல் ஓடியுழல் சிந்தையை
அடக்கிஒரு கணமேனும்யான்
காணிலேன் திருவருளை ; அல்லாது மௌனியாய்க்
கண்மூடி ஓடுமூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை எழுப்பநினைவும்
பூணிலேன் ; இற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்யுலக னயினேன் ; நாயினுங் கடையான
புன்மையேன் இன்னமின்னம்
வீணிலே அலையாமல் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும் ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே ! (7)

## அருட்பாவும் மருட்பாவும்

64 கன்னல்அமு தெனவும்முக் கனியெனவும் வாயூறு
கண்டெனவும் அடியெடுத்துக்
கடவுளர்கள் தந்ததல ; அழுதழுது பேய்போற்
கருத்தில்எழு கின்றதெல்லாம்
என்னதறி யாமைஅறி வென்னும்இரு பகுதியால்
ஈட்டுதமிழ் என்தமிழினுக்
கின்னல்பக ராதுலகம் ஆராமை மேலிட்
டிருத்தலால் இத்தமிழையே

சொன்னவ னியாவன் அவன் முத்திசித் திகளெலாந்
தோய்ந்தநெறி யேபடித்தீர் !
சொல்லுமென அவர் நீங்கள் சொன்ன அவையிற்
தோய்ந்தகுண சாந்தனெனவே [சிறிது
மின்னல்பெற வேசொல்ல அச்சொல்கேட்டடிமைமனம்
விகசிப்ப தெந்தநாளோ ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகர் சித்தர்கணமே ! (8)

தவராச சிங்கங்கள்

65 பொற்பினொடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலால்,
போந்திடை ஒடுக்கமுறலால்
பொலிவான வெண்ணீறு பூசியே அருள்கொண்டு
பூரித்த வெண்ணீர்மையால்,
எற்பட விளங்குகக னத்தில் இமை யாவிழி
இசைந்துமேல் நோக்கமுறலால்,
இரவுபகல் இருளான கனதந்தி படநூறி
இதயங் களித்திடுதலால்,
பற்பல விதங்கொண்ட புலிகலையின் உரியது
படைத்துப்ர தாபமுறலால்,
பனிவெயில்கள் புகுதாமல் நெடியவான் தொடர்
பருமர வனங்களாரும் [நெடிய
வெற்பினிடை யுறைதலால் தவராச சிங்கமென
மிக்கோர் உமைப்புகழ்வர்காண் !
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே ! (9)

## ஆடம்பரக் கல்வி

66 கல்லாத பேர்களே நல்லவர்கள்! நல்லவர்கள்!!
கற்றும்அறி வில்லாதஎன்
கன்மத்தை என்சொல்கேன்? மதியைஎன் சொல்லு
கைவல்ய ஞான நீதி [கேன்?
நல்லோர் உரைக்கிலோ, கன்மம்முக் கியம்என்று
நாட்டுவேன்; கன்மம்ஒருவன்
நாட்டினு லோ,பழைய ஞானம்முக் கியம்என்று
நவிலுவேன்; வடமொழியிலே
வல்லான் ஒருத்தன்வர வும்த்ரா விடத்திலே
வந்தவா விவகரிப்பேன்;
வல்லதமிழ் அறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்;
வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தைஎன் முத்திதருமோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே! (10)

# 7. ஆனந்தமான பரம்

## பலவகைக் குற்றங்கள்

67 கொல்லாமை எத்தனை குணக்கேட்டை நீக்கும்அக்
குணம்ஒன்றும் ஒன்றிலேன்பால்
கோரம்எத் தனை, பட்ச பாதம்எத் தனை, வன்
குணங்கள் எத் தனை, கொடியபாழ்ங்
கல்லாமை எத்தனை, அகந்தைஎத் தனை, மனக்
கள்ளம் எத் தனை, உள்ள சற்
காரியஞ் சொல்லிடினும் அறியாமை எத்தனை,
கதிக்கென் றமைத்த அருளில்
செல்லாமை எத்தனை, விர் தாகோட்டி என்னிலோ
செல்வதெத் தனை, முயற்சி
சிந்தையெத் தனை, சலனம் இந்த்ரசா லம்போன்ற
தேகத்தில் வாஞ்சைமுதலா
அல்லாமை எத்தனை அமைத்தனை உனக்கடிமை
யானேன் இவைக்கும் ஆளோ ?
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மானபரமே ! (1)

## அறிதற்கரியான்

68 தெருளாகி மருளாகி உழலும்மன மாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகி, அச்
சித்தெலாஞ் சூழ்ந்தசிவ சித்தாய், விசித்திரமாய்த்
திரமாகி நானுவிதப்

பொருளாகி, அப்பொருளை அறிபொறியு மாகிஐம்
புலனுமாய் ஐம்பூதமாய்ப்
புறமுமாய் அகமுமாய்த் தூரம் சமீபமாய்ப்,
போக்கொடு வரத்துமாகி,
இருளாகி, ஒளியாகி, நன்மைதீ மையுமாகி,
இன்ருகி, நாளையாகி,
என்றுமாய் ஒன்றுமாய்ப் பலவுவாய் யாவுமாய்,
இவைஅல்ல வாயநின்னை
அருளாகி நின்றவர்கள் அறிவதல் லால்ஒருவர்
அறிவதற் கெளிதாகுமோ?
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
அனந்த மானபரமே! (2)

## மக்கள் அறிந்ததும் அறியாததும்

69 மாறுபடு தர்க்கந் தொடுக்கஅறி வார்; சாண்
வயிற்றின் பொருட்டதாக
மண்டலமும் விண்டலமும் ஒன்ருகி மன துழல
மாலாகி நிற்கஅறிவார்;
வேறுபடு வேடங்கள் கொள்ளஅறி வார்; ஒன்றை
மெணமெணென் றகம்வேறதாம்
வித்தைஅறி வார்; எமைப் போலவே சந்தைபோல்
மெய்நூல் விரிக்கஅறிவார்:
சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கஅறிவார்
திரமென்று தம்தம் மதத்தையே தாமதச்
செய்கையொடும் உளறஅறிவார்;
ஆறுசம யங்கள்தொறும் வேறுவே ருகிவிளை
யாடும்உனை யாவரறிவார்!
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மானபரமே! (3)

## அறிஞர் செயலும் அறியார் செயலும்

70 காயிலை உதிர்ந்தகனி, சருகு, புனல் மண்டிய
கடும்பசி தனக்கடைத்தும்,
கார்வரையின் முழையிற் கருங்கல்போல் அசையாது
கண்மூடி நெடிதிருந்தும்,
தீயினிடை வைகியும் தோயமதின் மூழ்கியும்,
தேகங்கள் என்பெலும்பாய்த்
தெரியநின் றும்சென்னி மயிர்கள்கூ டாக்குருவி
தெற்றவெயி லூடிருந்தும்,
வாயுவை அடக்கியும், மனதினை அடக்கியும்,
மௌனத்தி லேயிருந்தும்,
மதிமண்ட லத்திலே கனல்செல்ல அமுதுண்டு
வனமூ டிருந்தும் அறிஞர்
ஆயுமறை முடிவான அருள்நாடி னார்; அடிமை
அகிலத்தை நாடல் முறையோ?
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மானபரமே! (4)

## குணமும் அவன்; குற்றமும் அவன்.

71 சுத்தமும் அசுத்தமுந் துக்கசுக பேதமும்
தொந்தமுடன் நிர்த்தொந்தமும்
தூலமொடு சூக்குமமும் ஆசையும் நிராசையும்
சொல்லும்ஒரு சொல்லின்முடிவும்
பெத்தமொடு முத்தியும் பாவமொ டபாவமும்
பேதமொ டபேதநிலையும்
பெருமையொடு சிறுமையும் அருமையுடன் எளிமையும்
பெண்ணினுடன் ஆணும்மற்றும்

நித்தமும் அநித்தமும் அஞ்சன நிரஞ்சனமும்
நிட்களமும் நிகழ்சகளமும்
நீதியும் அநீதியும் ஆதியொ டனுதியும்
நிர்விடய விடயவடிவும்
அத்தனையும் நீ அலதெ ளத்தனையும் இல்லையெனின்
யாங்கள் உனை யன்றியுண்டோ ?
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே ! (5)

## ஞான உழவு

72 காராரும் ஆணவக் காட்டைக் களைந்,தறக்
கண்,டகங் காரமென்னும்
கல்லைப் பிளந்து,நெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்தி,மேன்மேல்
பாராதி அறியாத மோனமாம் வித்தைப்
பதித் தன்பு நீராகவே
பாய்ச்சி,அது பயிராகு மட்டும்மா மாயைவன்
பறவைஅணு காதவண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்அன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரம்;என்றும்
ஆராரும் அறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே !
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே ! (6)

## அறிந்தும் அறியாமை

73 வானுதி பூதமாய், அகிலாண்ட கோடியாய்,
மலையாகி, வளைகடலுமாய்,
மதியாகி, இரவியாய், மற்றுள வெலாமாகி,
வான்கருணை வெள்ளமாகி,
நானுகி நின்றவனு நீயாகி நின்றிடவும்
நானென்ப தற்றிடாதே
நான்நான்எனக்குளறி நாஞ விகாரியாய்,
நான்அறிந் தறியாமையாய்ப்
போனுல் அதிட்டவலி வெல்லஎளி தோ! பகற்
பொழுதுபுகு முன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள் வான்றனை எழுப்பவச
போதிப்ப தெந்தநெறியை ! [மோ இனிப்
ஆனுலும் என்கொடுமை அநியாயம்! அநியாயம்!!
ஆர்பால் எடுத்துமொழிவேன் ?
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மானபரமே ! (7)

## வேறுகதி இல்லை

74 பொய்யனேன்; புலையனேன்; கொலையனேன்;
புலப்பட அறிந்துநிலையாப் [நின்னருள்
புன்மையேன்; கல்லாத தன்மையேன்; நன்மைபோற்
பொருளலாப் பொருளை நாடும்
வெய்யனேன்; வெகுளியேன்; வெறியனேன்; சிறிய
வினையனேன் என்றென்னை நீ [னேன்
விட்டுவிட நினைவையேல், தட்டழிவ தல்லாது
வேறுகதி ஏதுபுகலாய் !

துய்யனே ! மெய்யனே ! உயிரினுக் குயிரான
துணைவனே ! இணைஒன் றிலாத்
துரியனே ! துரியமுங் காணு அதீதனே !
சுருதிமுடி மீதிருந்த
ஐயனே ! அப்பனே ! எனும்அறிஞர் அறிவைவிட்
டகலாத கருணைவடிவே !
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மானபரமே ! (8)

## எங்குமில்லாப் பேதைமை

75 எத்தனை விதங்கள்தான் கற்கினும் கேட்கினும்என்
இதயமும் ஒடுங்கஇல்லை ;
யான்எனும் அகந்தைதான் எள்ளளவும் மாறஇலை ;
யாதினும் அபிமானம்என்
சித்தமிசை குடிகொண்ட ; தீமையொ டிரக்கம்என்
சென்மத்தும் நான்அறிகிலேன் ;
சீலமொடு தவவிரதம் ஒருகனவி லாயினுந்
தெரிசனஞ் செய்துமறியேன் ;
பொய்த்தமொழி அல்லால் மருந்துக்கும் மெய்ம்மொழி
புகன்றிடேன்; பிறர்கேட்கவே
போதிப்ப தல்லாது சும்மா இருந்தருள்
பொருந்திடாப் பேதைநானே ;
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
அவனிமிசை உண்டோ ? சொலாய் !
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மானபரமே ! (9)

## குருவருள் அனுபவம்

76 எக்கால மும்தனக் கென்னவொரு செயலிலா
ஏழைநீ என்றிருந்திட்
டெனதாவி யுடல்பொருளும் மௌனியாய் வந்துகை
ஏற்றுநம தென்றஅன்றே
பொய்க்கால தேசமும், பொய்ப்பொருளில் வாஞ்சையும்,
பொய்யுடலை மெய்யென்னலும்,
பொய்யுறவு பற்றலும் பொய்யாக. நானென்னல்
பொய்யினும் பொய்யாகையால்,
மைக்கால் இருட்டனைய இருள் இல்லை ; இருவினைகள்
வந்தேற வழியும்இல்லை ;
மனம்இல்லை ; அம்மனத் தினம்இல்லை ; வேறும்ஒரு
வரவில்லை ; போக்கும்இல்லை :
'அக்காலம் இக்காலம்' என்பதிலை ; எல்லாம்
அதீதமய மானஅன்றோ?
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மானபரமே! (10)

# 8. சுக வாரி

## சொன்னபடி கேட்டல்

77 இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதேன்
எனருசித் திடவலியவந்
தின்பங் கொடுத்தநினை எந்நேரம் நின்அன்பர்
இடையரு துருகிநாடி,
உன்னிய கருத்தவிழ உரைகுளறி, உடல்எங்கும்
ஓய்ந்தயர்ந் தவசமாகி,
உணர்வரிய பேரின்ப அநுபூதி யுணர்விலே
உணர்வார்கள் உள்ளபடிகாண்
கன்னிகை ஒருத்திசிற் றின்பம்வேம் பென்னினும்
கைக்கொள்வள்; பக்குவத்தில்
கணவன்அருள் பெறின்முனே சொன்னவா றென்
கருதிநகை யாவள்; அதுபோல், [னெனக்
சொன்னபடி கேட்கும்இப் பேதைக்கு நின்கருணை
தோற்றிற் சுகாரம்பமாம்;
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே!பரஞ்
சோதியே! சுகவாரியே! (1)

## அறியாப் பருவத்தில் ஆண்டமை

78 அன்பின்வழி அறியாத என்னைத் தொடர்ந்தென்னை
அறியாத பக்குவத்தே
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநான்
அற்றேன் அலந்தேன்என

என்புலன் மயங்கவே பித்தேற்றி விட்டாய் ;
இரங்கிஒரு வழியாயினும்
இன்பவெள்ள மாகவந் துள்ளங் களிக்கவே
யெனை நீ கலந்ததுண்டோ ?
தன்பருவ மலருக்கு மணம்உண்டு ; வண்டுண்டு ;
தண்முகை தனக்கும்உண்டோ ?
தமியனேற் கிவ்வணம் திருவுளம் இரங்காத
தன்மையால் ; தனியிருந்து
துன்பமுறின் எங்ஙனே அழியாத நின்அன்பர்
சுகம்வந்து வாய்க்கும்?உரையாய் !
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே'பரஞ்
சோதியே ! சுகவாரியே ! (2)

வன்புக்கு இரங்கல்

.79 கல்லேனும் ஐயஒரு காலத்தில் உருகும்;என்
கல்நெஞ்சம் உருகஇலையே !
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
கற்பிக்க ஒருகடவுளோ !
"வல்லான் வகுத்ததே வாய்க்கால்" எனும்பெரு
வழக்குக் கிழுக்குமுண்டோ !
வானமாய் நின்றின்ப மழையாய் இறங்கிஎனை
வாழ்விப்ப துன்பரங்காண் !
பொல்லாத சேய்எனில் தாய்தள்ளல் நீதமோ !
புகலிடம் பிறிது முண்டோ !
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையேன் ஆவன்அந்தோ !
சொல்லால் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா இருக்கஅருளாய் !
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே!பரஞ்
சோதியே ! சுகவாரியே ! (3)

## உலகியலை வேண்டாமை

80 என்பெலாம் நெக்குடைய, ரோமஞ் சிலிர்ப்ப,உடல்
இளக,மனம் அழலின்மெழுகாய்
இடையறு துருகவரு மழைபோல் இரங்கியே
இருவிழிகள், நீர்இறைப்ப,
அன்பினுல் மூர்ச்சித்த அன்பருக் கங்ஙனே
அமிர்தசஞ் சீவிபோல்வந்
தானந்த மழைபொழிவை ; உள்ளன்பி லாதஎனை
ஆர்க்காக அடிமைகொண்டாய் ?
புன்புலால் மயிர்தோல் நரம்பென்பு மொய்த்திடு
புலைக்குடிலில் அருவருப்புப்
பொய்யல்ல வே;இதனை மெய்யென்று நம்பிஎன்
புந்திசெலு மோ[illegible]லே !
துன்பமாய் அலையவோ ! உலகநடை ஐயஒரு
சொப்பனத் தினும்வேண்டிலேன் ;
சுத்தநிர்க் குணமான பரதேய்வ மே!பரஞ்
சோதியே ! சுகவாரியே ! (4)

## எளியேனைக் கைவிடாதே !

81 வெந்நீர் பொருதெனுடல் காலின்முள் தைக்கவும்
வெடுக்கென் றசைத்தெடுத்தால்,
விழிஇமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன் ;
வேறென்றை ஒருவர் கொல்லின்,
அந்நேரம் ஐயோஎன் முகம்வாடி நிற்பதுவும்
ஐயநின் அருள்அறியுமே ;
ஆனலும் மெத்தப் பயந்தவ னியான்என்னை
ஆண்டநீ கைவிடாதே !

இந்நேரம் என்றிலை ; உடற்சுமைய தாகவும்
எடுத்தால் இறக்களன்றே
எங்கெங்கும் ஒருதீர்வை ஆயமுண் டாயினும்
இறைஞ்சுசுக ராதியான
தொன்னீர்மை யாளர்க்கு மானிடம் வகுத்தஅருள்
துணைஎன்று நம்புகின்றேன் ;
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே!பரஞ்
சோதியே! சுகவாரியே! (5)

## பேச வாய் இல்லை

82 பற்றுவன அற்றிடு நிராசைஎன் றொருபூமி,
பற்றிப்பிடிக்கும் யோகப்
பாங்கிற் பிராணலயம் என்னும்ஒரு பூமிஇவை
பற்றின்மனம் அறும்என்னவே
கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி
கனிவிக்கவந்த கனிபோல்
கண்டதிந் நெறியெனத் திருவுள்க் கனிவினொடு
கனிவாய் திறந்தும் ஒன்றைப்
பெற்றவனும் அல்லேன்; பெருதவனும் அல்லேன்;
பெருக்கத் தவித்துளறியே
பெண்ணீர்மை யென்ன இருகண்ணீர் இறைத்து
பேய்போல் இருக்கஉலகம் [நான்
சுற்றிநகை செய்யவே உலையவிட் டாய்எனிற்
சொல்லஇனி வாயும்உண்டோ?
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே!பரஞ்
சோதியே! சுகவாரியே! (6)

## தொண்டரொடு கூட்டுக.

83 அரும்பொனே மணியேயென் அன்பேஎன் அன்பான
அறிவேஎன் அறிவில்ஊறும்
ஆனந்த வெள்ளமே என்றென்று பாடினேன்;
ஆடினேன் நாடிநாடி
விரும்பியே கூவினேன்; உலறினேன்; அலறினேன்;
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி யெனஎன் இரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்;
இரும்புநேர் நெஞ்சகக் கள்வன் ஆ னாலும்உனை
இடைவிட்டு நின்றதுண்டோ!
என்றுநீ அன்றுநான் உன்னடிமை யல்லவோ!
ஏதேனும் அறியாவெறுந்
துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ!
தொண்டரொடு கூட்டுகண்டாய்!
சுத்தநிர்க்குணமான பரதெய்வ மே!பரஞ்
சோதியே! சுகவாரியே!

## முழுவதும் அருள நான் செல்லுமோ!

84 பாராதி அண்டங்கள் எத்தனையும் வைக்கின்ற
பரவெளியின் உண்மைகாட்டிப்,
பற்றுமன வெளிகாட்டி, மனவெளியி னில்தோய்ந்த
பாவியேன் பரிசுகாட்டித்
தாராள மாய்நிற்க நிச்சிந்தை காட்டிச்,
சதாகால நிட்டையெனவே
சகசநிலை காட்டினை; சுகாதீத நிலயந்
தனைக்காட்ட நாள்செல்லுமோ!

காரார எண்ணரும் அனந்தகோ டிகள்நின்று
காலூன்றி மழைபொழிதல்போற்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
கம்மி, ஆனந்தவெள்ளம்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவுமுகிலே!
சுத்தநிர்க் குணமான பரதேய்வ மே!பரஞ்
சோதியே! சுகவாரியே! (8)

சோதிக்க வேண்டா.

85 பேதித்த சமயமோ ஒன்றுசொன படிஒன்று
பேசாது; துறவாகியே
பேசாத பெரியோர்கள் நிருவிகற் பத்திறற்
பேசார்கள்; பரமகுருவாய்ப்
போதிக்கும் முக்கண் இறை நேர் மையாய்க் கைக்
போதிப்ப தாச்சறிவிலே; [கொண்டு
போக்குவர வறவின்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவர்? ஐயனே!
சாதித்த சாதனமும் யோகியர்கள் நமதென்று
சங்கிப்பர் ஆதலாலே
தன்னிலே தானய் அயர்ந்துவிடு வோம்எனத்
தனிஇருந் திடின்அங்ஙனே
சோதிக்க மனமாயை தனைஏவி னல்அடிமை
சுகமாவ தெப்படிசொலாய்;
சுத்தநிர்க் குணமான பரதேய்வ மே!பரஞ்
சோதியே! சுகவாரியே! (9)

## வீற்றிருப்பது எங்கே?

86 அண்டமுடி தன்னிலோ? பகிரண்ட மதனிலோ?
அலரிமண் டலநடு விலோ?
அனல்நடுவி லோ? அமிர்த மதிநடுவி லோ? அன்பர்
அகம்உருகி மலர்கள் தூவித்
தெண்டனிட வரும்மூர்த்தி நிலையிலோ? திக்குத்
திகந்தத்தி லோ? வெளியிலோ?
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ? வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ?
கண்டபல பொருளிலோ? காணாத நிலையெனக்
கண்டகு னியமதனிலோ?
காலம்ஒரு மூன்றிலோ? பிறவிநிலை தன்னிலோ?
கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ! நீவீற் றிருப்பது?
தொழும்பனேற் குளவுபுகலாய்;
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மே! பரஞ்
சோதியே! சுகவாரியே! (10)

## ஆண்டான் வருத்தலாமோ!

87 எந்தநாள் கருணைக் குரித்தாகு நாள்எனவும்
என்னிதயம் எனைவாட்டுதே!
ஏதென்று சொல்லுவேன்! முன்னெடுபின் மலைவறவும்
இற்றைவரை யாதுபெற்றேன்!
பந்தமா னதிலிட்ட மெழுகாகி உள்ளம்
பதைத்துப் பதைத்துருகவோ!
பரமசுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
பலகாலும் மூர்ச்சிப்பதோ?

சிந்தையா னதும்அறிவை; என் அறிவில் அறிவான
தெய்வம்நீ யன்றியுளதோ !
தேகம்நிலை யல்லவே ; உடைகப்பல், கப்பலாய்த்
திரைஆழி யூடுசெலுமோ !
சொந்தமாய் ஆண்டநீ அறியார்கள் போலவே
துன்பத்தில் ஆழ்த்தல் முறையோ ?
சுத்தநிர்க் குணமான பரதேய்வ மே!பரஞ்
சோதியே ! சுகவாரியே ! (11)

## மனத்தின் ஏச்சுரை

88 'எந்நாளும் உடலிலே உயிராம் உனைப்போல்
இருக்கஇலை யோ?மனம் எனும்
யானும் என் னட்பாம் பிராணனும்; எமைச்சடம
தென்றுனைச் சித்தென்றுமே
அந்நாளில் எவனோ பிரித்தான் ; அதைக்கேட்ட
அன்றுமுதல் இன்றுவரையும்
அநியாய மாய்எமை அடக்கிக் குறுக்கே
அடர்ந்தரசு பண்ணிஎங்கள்
முன்னாக நீஎன்ன கோட்டைகொண் டாய்?'என்று
மூடமனம் மிகவும்ஏச
மூண்டெரியும் அனலிட்ட மெழுகாய் உளங்கருகல்
முறைமையோ ? பதினாயிரஞ்
சொன்னாலும் நின்அருள் இரங்கஇலை யேஇனிச்
சுகம்வருவ தெப்படி?சொலாய் ;
சுத்தநிர்க் குணமான பரதேய்வ மே!பரஞ்
சோதியே ! சுகவாரியே ! (12)

---

# 9. எங்கும் நிறைகின்ற பொருள்

## அவனன்றி ஓர் அணுவும் அசையாது

89 "அவனன்றி ஓர் அணுவும் அசையா"தெனும் பெரிய
ஆத்தர்மொழி ஒன்றுகண்டால்
அறிவாவ தேது? சில அறியாமை யே? திவை
அறிந்தார்கள் அறியார்கள் யார்?
மௌனமொ டிருந்ததார்? என்போல் உடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றும் அவர் ஆர்?
மனமெனவும் ஒருமாயை எங்கே யிருந்துவரும்?
வன்மையொ டிரக்கமெங்கே?
புவனம் படைப்பதென்? கர்த்தவிய மெவ்விடம்?
பூதபே தங்களெவிடம்?
பொய்மெய்இதம் அகிதமே வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையும் எவ்விடம்?
எவர்சிறியர் எவர்பெரியர் எவருறவர் எவர்பகைஞர்?
யாதும்உனை யன்றியுண்டோ!
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே! (1)

## சமயங்களின் வாதம்

90 அன்னே! அனே! எனும் சிலசமயம்; நின்னையே
ஐயாஐ யாஎன்னவே
அலறிடும் சிலசமயம்; அல்லாது பேய்போல
அலறியே ஒன்றும்இலவாய்ப்

பின்னேதும் அறியாமல் ஒன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடும் சிலசமயம்;மேல்
பேசரிய ஒளியென்றும், வெளியென்றும், நாதாதி
பிறவுமே நிலயமென்றும்,
தன்னே ரிலாததோர் அணுவென்றும், மூவிதத்
தன்மையாங் காலமென்றும்
சாற்றிடும் சிலசமயம் ; இவையாகி வேறதாய்ச்
சதாஞான ஆனந்தமாய்
என்னே எனேகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகலஎளிதோ !
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே ! (2)

## துவிதமும் அத்துவிதமும்

91 வேதமுடன் ஆகம புராணம் இதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா எடுத்துரைக்கும் ;
ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை
உண்டுபணும் ஞானமாகும் ;
ஊகம்,அநு பவம்,வசனம் மூன்றுக்கும் ஒவ்வுமீ
துபயவா திகள்சம்மதம் ;
ஆதலின் எனக்கினிச் சரியையா திகள்போதும்
யாதொன்று பாவிக்கநான்
அதுவாத லால்உன்னை நானென்று பாவிக்கின்
அத்துவித மார்க்க முறலாம் ;
ஏதுபா வித்திடினும் அதுவாகி வந்தருள்செய்
எந்தைநீ குறையும் உண்டோ !
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே ! (3)

## மன மாயையின் ஆடல்

92 சொல்லா னதிற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டி ஆட்டித்
துடையினைக் கிள்ளல்போல், சங்கற்ப மொன்றில்
தொடுக்கும் ; தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை எனும்சத்த பூமியிடை
போந்துதலை சுற்றியாடும்
புருடனில் அடங்காத பூவைபோல் தானே
புறம்போந்து சஞ்சரிக்கும்
கல்லோ டிரும்புக்கும் மிகவன்மை காட்டிடும்
காணாது கேட்டஎல்லாம்
கண்டதாக் காட்டியே அணுவாச் சுருக்கிடுங்
கபடநா டகசாலமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை ; ஏழையாம்
என்னால் அடக்கவசமோ !
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே ! (4)

## நடிப்பு அன்பு

93 கண்ணார நீர்மல்கி உள்ளம்நெக் குருகாத
கள்ளனேன் ஆனாலுமோ
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரைகாட்டி,
அண்ணா ! பரஞ்சோதி ! அப்பா ! உனக்கடிமை
யான்எனவும் மேல்எழுந்த
அன்பாகி நாடகம் நடித்ததோ குறைவில்லை ;
அகிலமும் சிறிதறியுமேல்,

தண்ணாரும் நின்னதரு ளறியாத தல்லவே?
சற்றேனும் இனிதிரங்கிச்
சாசுவத முத்திநிலை ஈதென் றுணர்த்தியே
சகசநிலை தந்துவேறென்
றெண்ணாமல் உள்ளபடி சுகமாய் இருக்கவே
ஏழையேற் கருள்செய்கண்டாய்;
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே! (5)

## இப்பொழுது முடியாதோ!

94 காகமா னவைகோடி கூடிநின் றாலும்ஒரு
கல்லின்முன் எதிர் நிற்குமோ?
கன்மமா னவைகோடி முன்னேசெய் தாலும்நின்
கருணைப்ர வாகஅருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்கவல்லவோ!
தமியனேற் கருள்தாகமோ
சற்றும்இலை என்பதுவும் வெளியாச்சு; வினையெலாம்
சங்கேத மாய்க்கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே; துன்பங்கள்
சேராமல் யோகமார்க்க
சித்தியோ வரவில்லை; சகசநிட் டைக்கும்என்
சிந்தைக்கும் வெகுதூரம்; நான்
ஏகமாய் நின்னோ டிருக்கும்நாள் எந்தநாள்?
இந்நாளின் முற்றுறாதோ?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே! (6)

## ஒருவனுக்குமட்டும் அருளாதது ஏன்?

95 ஒருமைமன தாகியே அல்லல்அற நின்னருளில்
ஒருவன் நான் வந்திருக்கின்,
உலகம் பொருதோ? மாயா விசித்ரமென
ஓயுமோ? இடமில்லையோ?
அருளுடைய நின் அன்பர் சங்கைசெய் திடுவரோ?
அலதுகிர்த்திய கர்த்தராய்
அகிலம் படைத்தெம்மை ஆள்கின்ற பேர்சிலர்
அடாதென்ப ரோ? அகன்ற
பெருமைபெறு பூரணங் குறையுமோ? பூதங்கள்
பேய்க்கோலமாய் விதண்டை
பேசுமோ? அலதுதான் பரிபாக காலம்
பிறக்கஇலை யோ? தொல்லையாம்
இருமைசெறி சடவினை யெதிர்த்துவாய் பேசுமோ?
ஏதுளவு சிறிதுபுகலாய்;
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே! (7)

## ஒரு விண்ணப்பம்

96 நில்லாது தேகம்எனும் நினைவுண்டு; தேகம்நிலை
நின்றிடவும் மௌனியாகி
நேரே உபாயமொன் றருளினை; ஐயோ! இதனை
நின்றனுட் டிக்களன்றல்,
கல்லாத மனமோ ஒடுங்கிஉப ரதிபெறக்
காண இலை; ஆகையாலே
கையேற்று ணும்புசிப் பொவ்வாதெ நாளும்உன்
காட்சியில் இருந்துகொண்டு

வல்லாள ராய்இயம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க் கேவல்செய்து
மனதின் படிக்கெலாம் சித்திபெறலாம்; ஞானம்
வாய்க்கும்;ஒரு மனுஎனக்கிங்
கில்லாமை ஒன்றினையும் இல்லாமை யாக்கவே
இப்போ திரங்குகண்டாய்;
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே! (8)

97 மரவுரி உடுத்தும்,மலை வனநெற் கொறித்தும்.உதிர்
வனசருகு வாயில்வந்தால்
வன்பசி தவிர்த்தும்,அனல் வெயிலாதி மழையால்
வருந்தியும், மூலஅனலைச்
சிரமள வெழுப்பியும், நீரினிடை மூழ்கியும்.
தேகம்நம தல்லஎன்று
சிற்சுக அபேட்சையாய் நின்னன்பர் யோகம்
செலுத்தினர்; யாம்பாவியேம்!
விரவும்அறு சுவையினேடு வேண்டுவ புசித்,தரையில்
வேண்டுவ எலாம்உடுத்து,
மேடைமா ளிகையாதி வீட்டினிடை வைகியே,
வேருெரு வருத்தம்இன்றி
இரவுபகல் ஏழையர்கள் சையோக மாயினேம்;
எப்படி பிழைப்பதுரையாய்;
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே! (9)

## பொன்நாட்டிலும் உள்ள போராட்டம்

98 முத்தனைய மூரலும், பவளவாய் இன்சொலும்,
முகத்திலகு பசுமஞ்சளும்,
மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற, இருகும்ப
முலையின்மணி மாலைநால,

வைத்தெமை மயக்கிஇரு கண்வலையை வீசியே
மாயா விலாசமோக
வாரிதியில் ஆழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி இமையாத
பொன்னுட்டும் வந்ததென்றால்,
போராட்ட மல்லவோ? பேரின்ப முத்திஇப்
பூமியில் இருந்துகாண
எத்தனை விகாதம்வரும் என்றுசுகர் சென்றநெறி
இவ்வுலகம் அறியாததோ?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே! (10)

எந்நாளும் வாழி !

99 உன்னிலையும் என்னிலையும் ஒருநிலை எனக்கிடந்
துளறிடும் அவத்தையாகி
உருவுதான் காட்டாத ஆணவமும் ஒளிகண்
டொளிக்கின்ற இருளென்னவே
தன்னிலைமை காட்டா தொருங்கஇரு வினையினல்
தாவுசுக துக்கவேலை
தட்டழிய முற்றும்இல் லாமாயை யதனுல்
தடித்தகில பேதமான
முன்னிலை ஒழிந்திட அகண்டிதா காரமாய்
மூதறிவு மேல்உதிப்ப
முன்பினெடு கீழ்மேல் நடுப்பக்கம் என்னுமல்
முற்றும்ஆ னந்தநிறைவே
என்னிலைமை யாய்நிற்க இயல்புகூர் அருள்வடிவம்
எந்நாளும் வாழி!வாழி!!
இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்கும்நிறை கின்றபொருளே! (11)

———

## 10. சச்சிதானந்த சிவம்

### தாய் இல்லாப் பிள்ளையோ!

100 பாராதி ககனப் பரப்பும்உண் டோஎன்று
படர்வெளிய தாகிஎழுநாப்
பரிதிமதி காணுச் சுயஞ்சோதி யாய்,அண்ட
பகிரண்ட உயிர்எவைக்கும்
நேராக அறிவாய், அகண்டமாய், ஏகமாய்,
நித்தமாய், நிர்த்தொந்தமாய்,
நிர்க்குண விலாசமாய், வாக்குமனம் அணுகாத
நின்மலானந்தமயமாய்ப்,
பேராது நிற்றிநீ; சும்மா இருந்துநான்
பேரின்பம் எய்திடாமல்
பேய்மனதை அண்டியே தாயிலாப் பிள்ளைபோற்
பித்தாகவோ? மனதைநான்
சாராத படிஅறிவில் நிருவிகற் பாங்கமாஞ்
சாசுவத நிட்டைஅருளாய்!
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதானந்தசிவமே! (1)

### உடம்பின் இழிவு

101 குடக்கொடு குணக்காதி திக்கினை உழக்கூடு
கொள்ளல்போல், ஐந்துபூதம்
கூடும் சுருங்கிலேச், சாலேகம் ஒன்பது
குலாவுநடை மனையை,நாறும்

வடக்கயிறு வெண்ணரம் பாஎன்பு தசையினல்
மதவேள் விழா நடத்தி
வைக்கின்ற கைத்தேரை வெண்ணீர்செநீர்கணீர்
மலநீர்பு ணீரிறைக்கும்
விடக்குத் துருத்தியைக். கருமருந் துக்கூட்டை,
வெட்டவெட் டத்தளிர்க்கும்
வேட்கைமரம் உறுகின்ற சுடுகாட்டை, முடிவிலே
மெய்போ லிருந்துபொய்யாம்
சடக்கைச், சடக்கெனச் சதமென்று சின்மயந்
தானுகி நிற்பதென்ருே?
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே! (2)

## ஒன்றிற்கும் வழி இல்லை

102 பாகத்தி னற்கவிதை பாடிப் படிக்கவோ
பத்திநெறி இல்லை; வேத
பராய ணப்பனுவல் மூவர்செய் பனுவலது
பகரவோ இசையும்இல்லை;
யோகத்தி லேசிறிது முயலஎன் ருல்தேகம்
ஒவ்வா;திவ் வூன்வெறுத்தால்
உயிர்வெறுத் திடலொக்கும்; அல்லாது கிரியைகள்
உபாயத்தி னற்செய்யவோ
மோகத்தி லேசிறிதும் ஒழியஇலை; மெய்ஞ்ஞான
மோனத்தில் நிற்கவென்ருல்
முற்ருது; பரிபாக சத்திகள் அனேகம்;நின்
மூதறிவி லேஎழுந்த
தாகத்தி லேவாய்க்கும் அமிர்தப்பிர வாகமே!
தன்னந் தனிப்பெருமையே!
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே! (3)

## அருளோ! அல்லது மருளோ!

103 இமையளவு போதைஒரு கற்பகா லம்பண்ணும்;
இவ்வுலகம் எவ்வுலகமோ
என்றெண்ணம் வருவிக்கும்; மாதர்சிற் றின்பமோ
என்னின்மக மேருவாக்கிச்
சுமைஎடுமின் என்றுதான் சும்மாடு மாய்,எமைச்
சுமைஆளும் ஆக்கி,நாளும்
துர்ப்புத்தி பண்ணி,உள நற்புத்தி யாவையும்
சூறையிட் டிந்த்ரசாலம்
அமையஒரு கூத்தும் சமைந்தாடும் மனமாயை
அம்மம்ம! வெல்லஎளிதோ!
அருள்பெற்ற பேர்க்கெலாம் ஒளிபெற்று நிற்குமீ
தருளோ! அலாதுமருளோ!
சமயநெறி காணுத சாட்சிநீ சூட்சுமமாத்
தமியனேற் குளவுபுகலாய்!
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே! (4)

## எனது எண்ணம்

104 இனியே தெமக்குனருள் வருமோ! எனக்கருதி
ஏங்குதே நெஞ்சம்; ஐயோ!
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பர்என்
றெண்ணவோ திடமில்லையே!
அனியாய மாய்இந்த உடலைநா னென்றுவரும்
அந்தகற் காளாகவோ!
ஆடித் திரிந்துநான் கற்றதும் கேட்டதும்
அவலமாய்ப் போதல்நன்றோ?

கனியேனும் வறியசெங் காயேனும் உதிர்சருகு
கந்தமூ லங்களே னும்
கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனியாகித்
தனியே இருப்பதற் கெண்ணினேன் ; எண்ணம்இது
சாமிநீ அறியாததோ !
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே ! (5)

## உண்மை நிலை

105 மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
வாயிலுடன் மதிஅகடுதோய்
மாடகூ டச்சிகர மொய்த்தசந் திரகாந்த
மணிமேடை உச்சிமீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
முத்துமுத் தாய்க்குலாவி
மோகத் திருந்தும்என் ! யோகத்தின் நிலைநின்று
மூச்சைப் பிடித்தடைத்துக்
கைத்தலம் நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
கரடிநுழை நூழைகொண்ட
கானமலை உச்சியிற் குகையூ டிருந்தும்என் !
கரதலா மலகமென்னச்
சத்தமற மோனநிலை பெற்றவர்கள் உய்வர்காண் !
சனகாதி துணிவிதன்றோ !
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே ! (6)

## அறியார், அறியார்.

106 கைத்தலம் விளங்குமொரு நெல்லியங் கனியெனக்
கண்டவே தாகமத்தின்
காட்சிபுரு டார்த்தம்; அதின் மாட்சிபெறும்; முத்தி
கருதின் அநு மானமாதி [அது
உத்திபல வாம்; நிரு விகற்பமேல், இல்லையால்;
ஒன்றோ டிரண்டென்னவோ
உரையுமிலை; நீயுமிலை; நானுமிலை என்பதும்
உபாயம்; நீ உண்டுநானும்
சித்தமுளன் நானில்லை எனும்வசனம் நீ அறிவை;
தெரியார்கள் தெரியவசமோ!
செப்புகே வலநீதி ஒப்புவமை யல்லவே;
சின்முத்தி ராங்கமரபில்
சத்தமற எனை ஆண்ட குருமௌனி கையினால்
தமியனேற் குதவுபொருளே!
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதானந்த சிவமே! (7)

## வாழ்த்தினாற் பெறலாம்.

107 காயாத மரமீது கல்லேறு செல்லுமோ!
கடவுள் நீ; யாங்கள் அடியேம்;
கன்மபந் தத்தினாற் சன்மபந் தம்பெறக்
கற்பித்த துன்னதருளே;
வாயார உண்டபேர் வாழ்த்துவதும் நோந்தபேர்
வைவதுவும் எங்கள் உலக
வாய்பாடு; நிற்க; நின் வைதிக ஒழுங்கு,' நினை
வாழ்த்தினாற் பெறுபேறுதான்

ஓயாது பெறுவார்என முறையிட்ட தால்,பின்னர்
உளறுவது கருமமன்றும் ;
உபயநெறி ஈதென்னின் உசிதநெறி எந்தநெறி?
உலகிலே பிழைபொறுக்கும்
தாயான கருணையும் உனக்குண் டெனக்கினிச்
சஞ்சலங் கெடஅருள்செயாய் ;
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே ! (8)

இதுவின்றி அதுவாயின், மிகவும் நன்று.

108 இன்னம் பிறப்பதற் கிடமென்னின் இவ்வுடலம்
இறவா திருப்ப,மூலத்
தெழும்அங்கி அமிர்தொழுகும் மதிமண்ட லத்திலுற
என்னம்மை குண்டலினிபால்
பின்னம் பிறக்காது சேயென வளர்த்திடப்
பேயேனை நல்கவேண்டும் ;
பிறவாத நெறிஎனக் குண்டென்னின் இம்மையே
பேசுகர்ப் பூரதீபம்
மின்னும் படிக்ககண் டாகார அன்னைபால்
வினையேனை ஒப்புவித்து,
வீட்டுநெறி கூட்டிடுதல் மிகவுநன் ; றிவையன்றி
விவகார முண்டென்னிலோ,
தன்னந் தனிச்சிறியன் ஆற்றிலேன் ; போற்றி!வளர்
சன்மார்க்க முத்திமுதலே !
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே ! (9)

## விசாரணை

109 வேதாவை, 'இவ்வணம் விதித்ததே', தென்னின்,உன்
வினைப்பகுதி' என்பன்; அந்த
வினைபேச அறியாது ; நிற்க ;இவை மனதால்
விளைந்ததால் மனதைநாடில்
போதமே நிற்கும்; அப் போதத்தை நாடிலோ
போதமும் நின் னுல்விளக்கம் ;
பொய்யன்று ; தெய்வமறை யாவுமே நீஎன்று
போக்குவர வறநிகழ்த்தும் ;
ஆதார ஆதேயம் முழுதுநீ யாதலால்
அகிலமீ தென்னை ஆட்டி
ஆடல்கண் டவனும்நீ ; ஆடுகின் றவனும்நீ ;
அருளும்நீ ; மௌனஞான
தாதாவும் நீ;பெற்ற தாய்தந்தை தாமும்நீ ;
தமரும்நீ ; யாவும்நீகாண் !
சர்வபரி பூரண அகண்டதத் துவ்மான
சச்சிதானந்த சிவமே! (10)

## மறவா வரம்

110 கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னீழல் வைகினும்,
குளிர்தீம் புனற்கைஅள்ளிக்
கொள்ளுகினும் அந்நீரிடைத்திளைத் தாடினும்,
குளிர்சந்த வாடைமடவார்
வந்துலவு கின்றதென முன்றிலிடை உலவவே
வசதிபெறு போதும்,வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும், வேலைஅமுதம்

விந்தைபெற அறுசுவையில் வந்ததென அமுதுண்
வேளேயிலும், மாலேகந்தம் [ணும்
வெள்ளிலே அடைக்காய் விரும்பிவேண்டியவண்ணம்
விளேயாடி விழிதுயிலினும்,
சந்ததமும் நின் அருளே மறவா வரம்தந்து
தமியேனே ரட்சைபுரிவாய்;
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதானந்த சிவமே! (11)

---

## 11. தேசோ மயானந்தம்

### வீட்டின்ப வேட்கை

111 மருமலர்ச் சோலைசெறி நன்னீழல் மலையாதி
மன்னுமுனி வர்க்கேவலாய்,
மந்த்ரமா விகைசொல்லும் இயமநிய மாதியாம்
மார்க்கத்தில் நின்றுகொண்டு,
கருமருவு காயத்தை நிருமலம தாகவே
கமலாச னுதிசேர்த்துக்,
காலைப் பிடித்,தனலை அம்மைகுண் டலிஅடிக்
கலைமதியி னூடுதாக்கி,
உருகிவரும் அமிர்தத்தை உண்டுண் டுறங்காமல்
உணர்வான விழியைநாடி,
ஒன்றோ டிரண்டெனுச் சமரச சொருபசுகம்
உற்றிடஎன் மனதின்வண்ணம்
திருவருள் முடிக்கஇத் தேகமொடு காண்பனோ!
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே! (1)

### பிறவிக்கடல் நிலை

112 இப்பிறவி என்னும்ஓர் இருட்கடலின் மூழ்கி,நா
னென்னும்ஒரு மகரவாய்பட்,
டிருவினை யெனுந்திரையின் எற்றுண்டு, புற்புத
மெனக்கொங்கை வரிசைகாட்டும்

துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்தடிப்பச்
சோராத ஆசையாங் காஞறு வான்நதி
சுரந்ததென மேலும் ஆர்ப்பக்,
கைப்பரிசு காரர்போல் அறிவான வங்கமுங்
கைவிட்டு மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவர்என் றஞ்சியே,
கண்ணருவி காட்டும்எளியேன்
செப்பரிய முத்தியாங் கரைசேரவுங் கருணை
செய்வையோ! சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே! (2)

## நிலையாமை யுணர்வு

113 தந்தை தாய், தமர், தாரம், மகவென்னும் இவையெலாம்
சந்தையிற் கூட்டம்; இதிலோ
சந்தேக மில்லை; மணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வும் ஓர் இந்த்ரசா லக்கோலம்;
வஞ்சனை, பொறாமை, லோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சை யிலாதகனவே;
எந்தநா ளுஞ்சரி எனத்தேர்ந்து தேர்ந்துமே
இரவுபகல் இல்லா இடத்
தேகமாய் நின்றநின் அருள்வெள்ள மீதிலே
யான்என்ப தறமூழ்கியும்,
சிந்தைதான் தெளியாது சுழலும்வகை என்கொலோ!
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோம யானந்தமே! (3)

## ஏழைக் குடும்பன்

114 ஆடாமல் ஓய்ந்திட்ட பம்பரம் போல்விசை
அடங்கிமனம் வீழநேரே
அறியாமை யாகின்ற இருள்அகல இருள்ஒளியும்
அல்லா திருந்தவெளிபோற்
கோடா தெனைக்கண் டெனக்குள் நிறை சாந்தவெளி
கூடிஇன் பாதீதமுங்
கூடினே னே சரியை கிரியையின் முயன்றுநெறி
கூடினே னே அல்லன்யான்;
ஈடாக வேஆறு வீட்டினில் நிரம்பியே
இலகிவளர் ப்ராணன் என்னும்
இருநிதி யினைக்கட்டி யோகபர னுகாமல்
ஏழைக் குடும்பனுகித்
தேடா தழிக்கஒரு மதிவந்த தென்கொலோ!
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே! (4)

## வன்மை வந்தது எவ்வாறு?

115 'பாடாது பாடிப் படித்தளவில் சமயமும்
பஞ்சுபடு சொல்லன் இவனைப்
பார்மினே! பார்மினே!!' என்றுசபை கூடவும்,
பரமார்த்தம் இதுஎன்னவே
ஆடாதும் ஆடிநெஞ் சுருகிநெக் காடவே
அமலமே! ஏகமே! எம்
ஆதியே! சோதியே! எங்கும்நிறை கடவுளே!
அரசே! எனக்கூவிநான்

வாடாது வாடும்என் முகவாட்ட முங்கண்டு
வாடா எனக்கருணை நீ
வைத்திடா வண்ணமே சங்கேத மாஇந்த
வன்மையை வளர்ப்பித்ததார் !
தேடாது தேடுவோர் தேட்டற்ற தேட்டமே !
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே !
தேசோ மயானந்தமே. (5)

## தீரா மயக்கம்

116 பிறியாத தண்ணருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப உண்மையை அளித்தனை ; என் மனமறப்
பேரம் பலக்கடவுளாய்
அறிவாய் இருந்திடும் நாதஒலி காட்டியே
அமிர்தப்ர வாகசித்தி
அருளினை; அலாது. திருஅம்பலமு மாகிஎனை
ஆண்டனை ; பின் எய்திநெறியாய்க்
குறிதான் அளித்தனை ; நன் மரவுரிகொள் அந்தணக்
கோலமாய் அசபா நலங்
கூடினபின் மௌனியாய்ச் சும்மா இருக்கநெறி
கூட்டினை ; எலாம் இருக்கச்
சிறியேன் மயங்கிமிக அறிவின்மை ஆவனோ !
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே !
தேசோ மயானந்தமே ! (6)

## வழக்குத் தீரவேண்டும்.

117 ஆரார் எனக்கென்ன போதித்தும் என்னஎன்
அறிவினை மயக்க வசமோ ?
அண்டகோ டிகளெலாங் கர்ப்பஅறை போலவும்
அடுக்கடுக் காஅமைத்துப்
பேராமல் நின்றபர வெளியிலே மனவெளி
பிறங்குவத லாதொன் றினும்
பின்னமுற மருவாது ; நன்மைத் தால்இனிப்
பேரின்ப முத்தி நிலையும்
தராது ; தள்ளவும் போகா துன்னால்அது ;
தள்ளினும் போகேனியான் ;
தடைஏதும் இல்லை ; ஆண் டவன், அடிமை
தன்மையிலும் என்வழக்குத் [என்னும்இரு
தீராது விடுவதிலை ; நடுவான கடவுளே !
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகோண்ட அறிவான தெய்வமே !
தேசோ மயானந்தமே ! (7)

## செயற்கரிய செயல்

118 கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம் ;
கரடிவெம் புலிவாயையும் ;
கட்டலாம் ; ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்
கட்செவி எடுத்தாட்டலாம் ;
வெந்தழலின் இரதம்வைத் தைந்துலோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம் ;
வேறொருவர் காணமல் உலகத் துலாவலாம் ;
விண்ணவரை ஏவல்கொளலாம் ;

சந்ததமும் இளமையோ டிருக்கலாம்; மற்ருெரு
சரீரத்தி னும்புகுதலாம்;
சலமேல் நடக்கலாம்; கனல்மேல் இருக்கலாம்;
தன்னிகரில் சித்திபெறலாம்;
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறம்அரிது; சத்தாகிஎன்
சித்தமிசை குடிகோண்ட அறிவான தெய்வமே.
தேசோ மயானந்தமே! (8)

## கைம்மாறு என்?

119 'எல்லாம் அறிந்தவரும், ஏதும்அறி யாதவரும்
இல்லை' எனும் இவ்வுலகமீ
தேதும்அறி யாதவன் எனப்பெயர் தரித்து, மிக
ஏழைக்குள் ஏழையாகிக்
கல்லாத அறிவிற் கடைப்பட்ட நான், அன்று
கையினுல் உண்மைஞானம்
கற்பித்த நின்அருளி னுக்கென்ன கைம்மாறு
காட்டுவேன்? குற்றேவல்நான்;
'அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறைஎயிற்
ருபாச வடிவமான
அந்தகா! நீஒரு பகட்டாற் பகட்டுவ
தடாதடா! காசுநம்பால்
செல்லாதடா!' என்று பேசவா யதுதந்த
செல்வமே! சத்தாகி, என்
சித்தமிசை குடிகோண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே! (9)

## பாவப் பயன்

120 ' மின்போலும் இடைஒடியும் ஒடியும், என மொழிதல்
மென்சிலம் பொலிகளார்ப்ப, [போல்
வீங்கிப் புடைத்துவிழு சுமைஅன்ன கொங்கைமட
மின்னார்கள் பின் ஆவலாய்
என்போல் அலைந்தவர்கள், கற்றூர்கள் கல்லார்கள்
இருவர்களில் ஒருவர்உண்டோ ?
என்செய்கேன்?அம்மம்ம!என்பாவம்,என்கொடுமை,
ஏதென் றெடுத்துமொழிவேன் !
அன்பால் வியந்துருகி அடியற்ற மரமென்ன
அடியிலே வீழ்ந்துவீழ்ந்தெம்
அடிகளே உமதடிமை யாங்களெனும் நால்வருக்
கறமாதி பொருள் உரைப்பத்
தென்பாலின் முகமாகி வடபால் இருக்கின்ற
செல்வமே! சத்தாகி,என்
சித்தமிசை குடிகோண்ட அறிவான தேய்வமே!
தேசோ மயானந்தமே ! (10)

## குருவாய் வந்தமை

121 புத்தமிர்த போகமும், கற்பகநன் னீழலிற்
பொலிவுற இருக்கும்இயல்பும்,
பொன்னுலகில் அயிரா வதத்தேறு வரிசையும்,
பூமண்ட லாதிக்கமும்,
மத்தவெறி யினர்வேண்டும் மால்என்று தள்ளவும்,எம்
மாலும்ஒரு சுட்டும்அறவே
வைக்கின்ற வைப்பாளன் மௌனதே சிகன்என்ன
வந்தநின் அருள்வாழிகாண் !

சுத்தபரி பூரண அகண்டமே! ஏகமே!
சுருதிமுடி வானபொருளே!
சொல்லரிய உயிரினிடை அங்கங்கு நின்றருள்
சுரந்துபொழி கருணைமுகிலே!
சித்திநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே!
தேடரிய சத்தாகி,என்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோ மயானந்தமே! (11)

---

## 12. சிற்சுகோதய விலாசம்

### யாக்கையின் இழிவு

122 காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்,
கால்இ ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காமவேள் நடன சாலையை,
மோக ஆசைமுறி இட்ட பெட்டியை.மும்
மலமி குந்தொழுகு கேணியை,
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை,
முடங்கல் ஆர்கிடை சரக்கினை,
மாக இந்த்ரதனு மின்னை ஒத்திலக
வேத மோதிய குலாலனார்
வனைய வெய்யதடி கார ஞனயமன்
வந்தடிக்குமொரு மட்கலத்
தேக மானபொய்யை, மெய்யெ னக்கருதி
ஐய வையமிசை வாடவோ!
தேரிவ தற்கரிய பிரமமே! அமல
சிற்சு கோதய விலாசமே! (1)

### கேவல சகல சுத்தம்

123 குறிக ளோடுகுணம் ஏதும் இன்றிஅனல்
ஒழுக நின்றிடும் இரும்பனல்
கூடல் இன்றிஅது வாய் இருந்தபடி
கொடிய ஆணவ அறைக்குளே

அறிவ தேதும்அற, அறிவி லாமைமய
மாய் இருக்கும்எனை, அருளினல்
அளவி லாததனு கரண மாதியை
அளித்த போதுனை அறிந்துநான்
பிறிவி லாதவணம் நின்றி டாதபடி,
பலநிறங் கவரும் உபலமாய்ப்
பெரிய மாயையில் அழுந்தி நின்னதுப்ர
சாத நல்லருள் மறந்திடும்
சிறிய னேனும்உனை வந்தணைந்துசுக
மாய்இருப்பதினி என்றுகாண்!
தெரிவ தற்கரிய பிரம மே!அமல
சிற்சு கோதய விலாசமே! (2)

கவலை தீருமோ!

124 "ஐந்து பூதம்ஒரு கானல் நீர்என
அடங்க வந்தபெரு வானமே!
ஆதி, அந்தம்,நடு ஏதும் இன்றி அரு
ளாய்நி றைந்திலகு சோதியே!
தொந்த ரூபமுடன் அருப மாதிகுறி
குணம் இறந்துவளர் வத்துவே!
துரிய மே! துரிய உயிரி னுக்குணர்வு
தோன்ற நின்றருள்சு பாவமே!
எந்த நாளும்நடு வாகி நின்றொளிரும்
ஆதியே! கருணை நீதியே!
எந்தையே!" என இடைந்தி டைந்துருகும்
எளிய னேன்கவலை தீரவும்
சிந்தை யானதை அறிந்து நீஉன்அருள்
செய்ய நானும் இனி உய்வனே?
தெரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே! (3)

## மருளன் அருளரோடு சேர்வேனே!

125 ஐவர் என்றபுல வேடர் கொட்டம
தடங்க மர்க்கடவன் முட்டியாய்
அடவி நின்றுமலே அருகில் நின்றுசரு
காதி தின்றுபனி வெயிலினல்
மெய்வ ருந்துதவம் இல்லே; நற் சரியை,
கிரியை, யோகம்என மூன்றதாய்
மேவு கின்றசவு பான நன்னெறி
விரும்ப இல்லே; உல கத்திலே
பொய்மு டங்குதொழில் யாத தற்குநல
சார தித்தொழில் நடத்திடும்
புத்தி யூகம்அறி வற்ற மூகம்இவை
பொருள்எ னக்கருதும் மருளன்யான்,
தெய்வ நல்லருள் படைத்த அன்பரொடு
சேர வுங்கருணே கூர்வையோ!
தேரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே! (4)

## இதனே நமுவவிடலாகாது

126 ஏக மானவுரு வான நீஅருளி
னல்அ னேகவுரு வாகியே
எந்த நாள்அகில கோடி சிட்டிசெய
இசையும் நாள்வரை அந்நாள்முத
லாக நாள்இது வரைக்கும் உன்னடிமை
கூட வேசனன மானதோ
அனந்தம் உண்டு; நல சனனம்ஈ, திதனுள்
அறிய வேண்டுவன அறியலாம்;

மோக மாதிரு பாச மானதை
அறிந்து விட்டுனையும் எனையுமே
முழுது ணர்ந்துபர மான இன்பவெ ளம்
மூழ்க வேண்டும்; இது வின்றியே,
தேக மோநமுவி நானு மோநழுவின்
பின்னை உய்யும்வகை உள்ளதோ?
தேரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே! (5)

## யோக நிலை

127 நியம லட்சணமும் இயம லட்சணமும்
ஆச னுதிவித பேதமும்
நெடிது ணர்ந்திதய பத்ம பீடமிசை
நின்றி லங்குமச பாநலத்
தியல றிந்து, வளர் மூல குண்டலியை
இனிதி றைஞ்சி, அவள் அருளினல்
எல்லை யற்றுவளர் சோதி மூலஅனல்
எங்கள் மோனமனு முறையிலே
வயமி குந்துவரும் அமிர்த மண்டல
மதிக்கு ளேமதியை வைத்து,நான்
வாய்ம டுத்தமிர்த வாரி யைப்பருகி,
மன்னும் ஆரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை
பெற்ற ஞானநெறி யடைவனே!
தேரிவ தற்கரிய பிரம மே! அமல
சிற்சு கோதய விலாசமே! (6)

## ஐயன் அருள்

128 எறிதி ரைக்கடல் நிகர்த்த செல்வம்மிக
அல்லல் என்றெருவர் பின்செலா,
தில்லே யென்னுமுரை பேசி டா,துலகில்
எவரும் ஆம்என மதிக்கவே
நெறியின் வைகிவளர் செல்வ மும்உதவி,
நோய்கள் அற்றசுக வாழ்க்கையாய்,
நியம மாதிநிலே நின்று, ஞானநெறி
நிட்டை கூடவும்எந் நாளுமே
அறிவில் நின்றுகுரு வாய்உ ணர்த்தியதும்
அன்றி, மோனகுரு வாகியே
அகில மீதுவர வந்த சீரருளே
ஐய ஐய இனி என்சொல்கேன்!
சிறியன். ஏழை,நம தடிமை என்றுனது
திருவு ளத்தினில் இருந்ததோ ?
தேரிவ தற்கரிய பிரமமே! அமல
சிற்சு கோதய விலாசமே! (7)

## அன்புருவம்

129 எவ்வுயிர்த் திரளும் உலகில் என்னுயிர்
எனக்கு ழைந்துருகி நன்மையாம்
இதம்உ ரைப்ப, என தென்ற யாவையும்
எடுத்தெ றிந்துமத யானேபோல்
கவ்வை யற்றநடை பயில, அன்பர்அடி
கண்ட தேஅருளின் வடிவமாக்
கண்ட யாவையும் அகண்டம் என்னஇரு
கைகு வித்து,மலர் தூவியே,

பவ்வ வெண்டிரை கொடுத்த தண்டரளம்
விழிஉ திர்ப்ப,மொழி குளறியே,
பாடி, ஆடிஉள் ளுடைந்து டைந்தெழுது
பாவைஒத் தசைதல் இன்றியே,
திவ்ய அன்புருவ மாகி, அன்பரொடும்
இன்ப வீட்டினில் இருப்பனே!
தெரிவ தற்கரிய பிரம மே!அமல
சிற்சு கோதய விலாசமே! (8)

## அகில மாயை

130 மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவி யேதுரிய வடிவமாய்,
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்த நின்அடியர் அடியிலே
பத்தி யாய்நெடிது நம்பும் என்னைஒரு
மையல்தந் தகில மாயையைப்
பாரு பார்என நடத்த வந்ததென?
பாரதத் தினுமி துள்ளதோ?
சுத்த நித்தஇயல் பாகுமோ; உனது
விசுவ மாயைநடு வாகவே
சொல்ல வேணும்வகை; நல்ல காதிகதை
சொல்லும் மாயையினும் இல்லை;என்
சித்தம் இப்படி மயங்கு மோ? அருளை
நம்பி னோர்கள்பெறு பேறிதோ?
தெரிவ தற்கரிய பிரம மே!அமல
சிற்சு கோதய விலாசமே. (9)

## தென்முகத் தெய்வம்

131 பன்மு கச்சமய நெறிப டைத்தவரும்,
யாங்க ளேகடவுள் என்றிடும்
பாத கத்தவரும், வாத தர்க்கமிடு
படிற ருந்தலை வணங்கிடத்
தன்மு கத்தில்உயிர் வரவ ழைக்கும்எம
தரும னும்பகடு மேய்க்கியாய்த்
தனி இருப்பவட நீழ லூடுவளர்
சனக னதிமுனி வோர்கள்தம்
சொன்ம யக்கமது தீர அங்கைகொடு
மோன ஞானம துணர்த்தியே,
சுத்த நித்த அருள் இயல்ப தாகஉள
சோம சேகரக்கு பாலுவாய்த்,
தென்மு கத்தின்முக மாய்இருந்த கொலு
எம்மு கத்தினும் வணங்குவேன்;
தேரிவ தற்கரிய பிரமமே! அமல
சிற்சு கோதய விலாசமே! (10)

---

# 13. ஆகார புவனம்

சிதம்பர ரகசியம்

## வணக்கம்

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

132 ஆகார புவனம் இன்பா கார மாக
அங்ஙனே ஒருமொழியால் அகண்டா கார
யோகானு பூதிபெற்ற அன்பர் ஆவிக்
குறுதுணையே! என்னளவும் உகந்த நட்பே!
வாகாரும் படிக்கிசைகிண் கிணிவாய்என்ன
மலர்ந்தமல ரிடைவாசம் வயங்கு மாபோல்
தேகாதி உலகமெங்கும் கலந்து தானே
திகழ்அனந்தா னந்தமயத் தெய்வக் குன்றே! (1)

133 அனந்தபத உயிர்கள்தொறும் உயிராய், என்றும்
ஆனந்த நிலையாகி, அளவைக் கெட்டாத்
தனந்தனிச்சின் மாத்திரமாய்க், கீழ்மேல் காட்டாச்
சதசத்தாய், அருட்கோயில் தழைத்த தேவே!
இனம்பிரிந்த மான்போல்நான் இடையா வண்ணம்
இன்பமுற்ற அன்பர்பக்கல் இருத்தி வைத்துக்
கனந்தருமா கனமே! தண் ணருளிற் றுனே
கனிபலித்த ஆனந்தக் கட்டிப்பேறே! (2)

134 பேறனைத்தும் அணுவெனவே உதறித் தள்ளப்
பேரின்ப மாகவந்த பெருக்கே! பேசா
வீறனைத்தும் இந்நெறிக்கே என்ன என்னை
மேவென்ற வரத்தே! பாழ் வெய்ய மாயைக்

கூறனைத்துங் கடந்தஎல்லைச் சேட மாகிக்
குறைவற நின் றிடுநிறைவே குலவா நின்ற
ஆறனைத்தும் புகுங்கடல்போற் சமய கோடி
அத்தனையும் தொடர்ந்துபுகும் ஆதி நட்பே! (3)

135 ஆதியந்தம் எனும் எழுவாய் ஈறற் றோங்கி,
அருமறைஇன் னமுங்காணு தரற்ற, நாளு
பேதமதங் களும்அலைய, மலைபோல் வாதப்
பெற்றியரும் வாய்வாதப் பேய ராகச்,
சாதகம்மோ னத்திலென்ன வடவால் நீழல்
தண்ணருட்சந் திரமௌலி! தடக்கைக் கேற்ற
வேதகசின் மாத்திரமாய் எம்ம னோர்க்கும்
வெளியாக வந்தஒன்றே! விமல வாழ்வே! (4)

136 விமலமுதற் குணமாகி நூற்றெட் டாதி
வேதம்எடுத் தெடுத்துரைத்த விருத்திக் கேற்க,
அமையும்இலக் கணவடிவாய்; அதுவும் போதா
தப்பாலுக் கப்பாலாய், அருட்கண் ணாகிச்,
சமமும்,உடன் கலப்பும், அவிழ் தலும்யாம் காணத்
தண்ணருள்தந் தெமைக்காக்கும் சாட்சிப் பேறே!
இமையளவும் உபகாரம் அல்லால் வேறொன்
றியக்கா நிர்க் குணக்கடலாய் இருந்த ஒன்றே! (5)

137 ஒன்றாகிப், பலவாகிப், பலவாக் கண்ட
ஒளியாகி, வெளியாகி, உருவு மாகி,
நன்றாகித், தீதாகி, மற்று மாகி,
நாசமுடன் உற்பத்தி நண்ணு தாகி,
இன்றாகி நாளையுமாய், மேலு மான
எந்தையே! எம்மானே! என்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில்வந் தருள்கூருங் கருணை விண்ணே! (6)

## விண்ணப்பித்தல்

138 அருள்பழுத்த பழச்சுவையே! கரும்பே! தேனே!
ஆரமிர்தே! என்கண்ணே! அரிய வான
பொருளனைத்தும் தரும்பொருளே! கருணை நீங்காப்
பூரணமாய் நின்ற ஒன்றே! புனித வாழ்வே!
கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்,
காலமுந்தே சமும்வகுத்துக், கருவி யாதி
விரிவினையுங் கூட்டிஉயிர்த் திரளை ஆட்டும்
விழுப்பொருளே! யான்சொலும்விண் ணப்பங்
கேளே. (7)

## வைதிக சைவப் பெரியோர்கள்

139 விண்ணவர்இந் திரன்முதலோர், நாரதாதி
விளங்கு சத்த இருடிகள், நல்வீணை வல்லோர்,
எண்ணரிய சித்தர், மனுவாதி வேந்தர்,
இருக்காதி மறைமுனிவர் எல்லாம் இந்தக்
கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானே உள்ளங்
கையில்நெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவால்இச் சமயத்தன்றே
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தார்என்றும். (8)

## சமயங்களின் தராதரம்

140 செப்பரிய சமயநெறி யெல்லாம் தம்தம்
தெய்வமே தெய்வம்எனும்; செயற்கை யான
அப்பரிசா ளரும்அஃதே பிடித்தால் இப்பால்
அடுத்தஅந்நூல் களும்விரித்தே அனுமா னாதி
ஒப்பவிரித் துரைப்பர்; இங்ஙன் பொய்மெய் என்ன
ஒன்றிலைஒன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கும்;
இப்பரிசாம் சமயமுமாய், அல்ல வாகி.
யாதுசம யமும்வணங்கும் இயல்ப தாகி, (9)

## வைதீக சைவத்தின் மேன்மை

141 இயல்பென்றும் திரியாமல் இயம மாதி
எண்குணமுங் காட்டி, அன்பால் இன்ப மாகிப்,
பயனருளப் பொருள்கள்பரி வாரமாகிப்,
பண்புறவுஞ் சௌபான பட்சங் காட்டி,
மயல்அறுமந் திரஞ்சிட்சை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க, மௌன மோலி
அயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தில்
அமர்ந்ததுவை திகசைவம் அழகி தந்தோ! (10)

## இதுவன்றித் தாயகம் இல்லை

142 அந்தோ!ஈ ததிசயம்! இச் சமயம் போல்இன்
றறிஞர்எல்லாம் நடுவறிய அணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும், பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கும், மற்றும் மற்றும்
இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கும்,
இதுவன்றித் தாயகம்வே றில்லை! இல்லை!!
சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத்
தக்கநெறி இந்நெறியே தான்சன் மார்க்கம்! (11)

## கிரியையும் ஞானமேயாதல்

143 சன்மார்க்க ஞானமதின் பொருளும், வீறு
சமயசங்கே தப்பொருளும். தான்ஒன் றாகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்ட தில்லை;
பகர்வரிய தில்லைமன் றுட் பார்த்த போதங்
கென்மார்க்க மிருக்கு?தெல்லாம் வெளியே யென்ன
எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்;
கன்மார்க்க நெஞ்சமுள எனக்குந் தானே
கண்டஉடன் ஆனந்தம் காண்ட லாகும். (12)

## சைவ சித்தாந்தம் - பதி இயல்பு

144 காண்டல்பெறப் புறத்தின்உள்ள படியே உள்ளும்;
காட்சிமெய்ந்நூல் சொலும்பதியாம் கடவுளே! நீ
நீண்டநெடு மையும் அகலக் குறுக்குங் காட்டா
நிறைபரிபூ ரண அறிவாய், நித்த மாகி,
வேண்டுவிருப் பொடுவெறுப்புச், சமீபம் தூரம்,
விலகல்அணு குதல்முதலாம் விவகா ரங்கள்,
பூண்டஅள வைகள்மனவாக் காதி எல்லாம்
பொருந்தாமல் அகம்புறமும் புணர்க்கை யாகி,(13)

## பதியிருக்கப் பாசம் பசுவிற் கலந்தது எவ்வாறு ?

145 ஆகியசற் காரியஊ கத்துக்கேற்ற
அமலமாய், நடுவாகி, அனந்தசத்தி
யோகமுறும் ஆனந்த மயம தாகி,
உயிர்க்குயிராய் எந்நாளும் ஓங்கா நிற்ப
மோகஇருள், மாயை,வினை உயிர்கட் கெல்லாம்
மொய்த்ததென்கொல்! உபகார முயற்சி யாகப்
பாகமிக அருள ஒரு சத்தி வந்து
பதிந்ததென் கொல்! நான்எனும்அப் பான்மை
என்கொல்! (14)

## பாசத்தால் தோன்றும் துன்பத்தொடர்ச்சி

146 நானென்னும் ஓர் அகந்தை எவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானு வாகித்
தான்வந்து தொடரும்; இத்தால் வளரும் துன்பச்
சாகரத்தின் பெருமைஎவர் சாற்ற வல்லார்!
ஊனென்றும், உடல்என்றும், கரணம் என்றும்,
உள்என்றும், புறம்என்றும், மொழியா நின்ற
வானென்றும், கால்என்றும், தீநீர் என்றும்,
மண்என்றும், மலைஎன்றும், வனம தென்றும், (15)

147 மலைஅலையாங் காட்சி,கண்கா ணுமை யாதி
மறப்பென்றும், நினைப்பென்றும், மாயா வாரி
அலை அலையாய் அடிக்கும் இன்பத் துன்பம் என்றும்
அவைவிளைக்கும் வினைகள்என்றும், அதனைத்
தலைபலவாம்சமயம்என்றும்,தெய்வமென்றும், [தீர்க்கத்
சாதகர்என் றும்.அவர்க்குச் சாட்சியாகக்
கலைபலவாம் நெறிஎன்றும் தர்க்கம் என்றும்
கடலுறுநுண்மணல்எண்ணிக்காணும்போது.(16)

## துன்பங்கள் தொலைந்தவாறு

148 காணரிய அல்லலெல்லாந் தானே கட்டுக்
கட்டாக விளையும்;அதைக் கட்டோ டேதான்
வீணினிற்கர்ப் பூரமலை படுதீப் பட்ட
விந்தைஎனக் காணஒரு விவேகம் காட்ட
ஊனுறக்கம் இன்பதுன்பம் பேர்ஊர் ஆதி
ஒவ்விடவும் எனைப்போல உருவங் காட்டிக்
கோணறவோர் 'மான்காட்டி மானை ஈர்க்குங்
கோள்கையென' அருள்மௌன குருவாய்
வந்து. (17)

## குரு உபதேசம்

149 வந்தென் உடல் பொருள் ஆவி மூன்றும் தன்கை
வசமெனவே அத்துவா மார்க்கம் நோக்கி,
ஐந்துபுலன் ஐம்பூதம், கரண மாதி
அடுத்தகுணம் அத்தனையும் அல்லை; அல்லை;
இந்தஉடல் அறிவறியா மையும்நீ அல்லை;
யாதொன்று பற்றின்அதன் இயல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீ. உன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம்;(18)

150 அறிவாகி ஆனந்த மயமாய் என்றும்
அழியாத நிலையாகி, யாதின் பாலும்
பிரியாமல் தண்ணருளே கோயி லான
பெரியபரம் பதி; அதனைப் பெறவே வேண்டின்,
நெறியாகக் கூறுவன கேள்; எந் நாளும்
நிர்க்குணம் நிற் குளம்வாய்த்து நீடு வாழ்க!
செறிவான அறியாமை எல்லாம் நீங்கச்
சிற்சுகம்பெற் றிடுக! பந்தம் தீர்க என்றே, (19)

## மெய்ப்பொருளின் இயல்பு

151 பந்தமறும் மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை அருளி, அந்தப் பண்புக் கேதான்
சிந்தைஇல்லை; நானென்னும் பான்மை இல்லை;
தேகம் இல்லை; காலம்இல்லை; திக்கும் இல்லை;
தொந்தம்இல்லை; நீக்கம்இல்லை; பிறிதும் இல்லை:
சொல்லும்இல்லை; இராப்பகலாம் தோற்றம்இல்லை;
அந்தம்இல்லை; ஆதிஇல்லை; நடுவும் இல்லை;
அகமும் இல்லை; புறமும் இல்லை; அனைத்தும்
இல்லை. (20)

152 'இல்லைஇல்லை' யென்னின் ஒன்றும் இல்லா தல்ல,
இயல்பாகி, என்றுமுள்ள இயற்கை யாகிச்.
சொல்லரிய தன்மையதாய், யான், தான் என்னத்
தோன்றுதெல் லாம்விழுங்கும் சொரூப மாகி,
அல்லைஉண்ட பகல்போல அவித்தை யெல்லாம்
அடையவுண்டு தடையறஉன் அறிவைத் தானே
வெல்லஉண்டிங் குன்னையும்தா னுகக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளக்குந் தானே. (21)

153 தானான தன்மயமே யல்லால் ஒன்றைத்
தலையெடுக்க ஒட்டாது; தலைப்பட் டாங்கே
போனாலும் கர்ப்பூர தீபம் போலப்
போய்ஒளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்;
ஞானாகா ரத்தினொடு ஞேயம் அற்ற
ஞாதிருவும் நழுவாமல் நழுவி நிற்கும்;
ஆனாலும் இதன் பெருமை எவர்க்கார் சொல்வார்?
அதுவானால் அதுவாவார்; அதுவே சொல்லும்.

## அனுபவ நிலை

154 'அதுஎன்றால், 'எது'என ஒன் றடுக்குஞ் சங்கை;
ஆதலினால் அதுஎனலும் அறவே விட்டு,
மதுவுண்ட வண்டெனவும்;சனக னாதி
மன்னவர்கள், சுகர்முதலோர் வாழ்ந்தார் என்றும்,
பதிஇந்த நிலைஎனவும் என்னை ஆண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமா னந்தக்
கதிகண்டு கொள்ளவும்நின் அருள்கூர்; இந்தக்
கதியன்றி உறங்கேன்; மேற் கருமம் பாரேன்.(23)

## பேரின்பப் பித்து

155 பாராதி விண்அணைத்து நீயாச், சிந்தை
பரியமட லாஎழுதிப் பார்த்துப் பார்த்து,
'வாராயோ என்ப்ராண நாதா!' என்பேன்;
வளைத்துவளைத் தெனைநீயா வைத்துக்கொண்டு
பூராய மாமேல்ஒன் றறியா வண்ணம்
புண்ணாளர் போல்நெஞ்சம் புலம்பி உள்ளே
நீராள மாய்உருகிக் கண்ணீர் சோர
நெட்டுயிர்த்து மெய்ம்மறந்தோர் நிலையாய்
நிற்பேன். (24)

156 ஆயும்அறி வாகிஉன்னைப் பிரியா வண்ணம்
அணைந்துசுகம் பெற்றஅன்பர் ஐயோ என்னத்,
தீயகொலைச் சமயத்துஞ் செல்லச் சிந்தை
தெளிந்திடவும், சமாதானம் செய்வேன்; வாழ்வான்
காயிலைபுன் சருகாதி அருந்தக் கானம்
கடல்மலைஎங் கேளனவுங் கவலை யாவேன் ;
வாயில்கும்பம் போற்கிடந்து புரள்வேன், வானின்
மதிகதிரை முன்னிலையா வைத்து நேரே. (25)

157 'நேரேதான் இரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வர உங்களை இந் நிலைக்கே வைத்தார்
ஆரே? அங் கவர்பெருமை யென்னே? என்பேன் ;
'அடிக்கின்ற காற்றேநீ ஆரா லேதான்
பேராதே சுழல்கின்ருய்?' என்பேன் ; 'வந்து
பெய்கின்ற முகில்காள்; எம் பெருமான் உம்போல்
தாராள மாக்கருணை பொழியச் செய்யும்
சாதகம்என் னே?கருதிச் சாற்றும்' என்பேன்.(26)

158 'கருதரிய விண்ணே நீ எங்கு மாகிக்
கலந்தனையே; உன்முடிவின் காட்சி யாக
வருபொருள்எப் படிஇருக்கும்? சொல்லாய்' என்பேன்;
'மண்ணே;உன் முடிவில்எது வயங்கும்? ஆங்கே
துரிய அறி வுடைச்சேடன் ஈற்றின் உண்மை
சொல்லானே? சொல்' என்பேன் ; 'சுருதி யே,நீ
ஒருவரைப்போல் அனைவருக்கும் உண்மை யாம்உன்
உரையன்றே? உன்முடிவை உரை! நீ' என்பேன்.

159 'உரைஇறந்து, பெருமைபெற்றுத், திரைக்கை நீட்டி
ஒலிக்கின்ற கடலேஇவ் வுலகம் சூழக்
கரையின்றி உன்னைவைத்தாரி யாரே?' என்பேன்:
'கானகத்திற் பைங்கிளிகாள் கமலம் மேவும்

வரிசிறைவண் டினங்காள்,ஓ திமங்காள், தூது
மார்க்கமன்றே நீங்கள்இது வரையி லேயும்
பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
பேசியதுண் டோ? ஒருகாற் பேசும்' என்பேன்,

160 ஒருவனவன் யானைகெடக் குடத்துட் செங்கை
ஓட்டுதல்போல், நான்பேதை உப்போ டப்பை
மருவஇட்டும் கர்ப்பூர மதனில் தீபம்
வயங்கவிட்டும் ஐக்கியம்உன் னி வருந்தி நிற்பேன்;
அருளுடைய பரம்என்றே அன்று தானே
யான்உளன்என் றும்,எனக்கே ஆண வாதி
பெருகுவினைக் கட்டென்றும் என்னுற் கட்டிப்
பேசியதன் றே;அருள்நூல் பேசிற் றன்றே. (29)

161 அன்றுமுதல் இன்றைவரைச் சனன கோடி
அடைந்தடைந்திங்கியாதனையால்அழிந்ததல்லால்
இன்றைவரை முத்திஇன்றே; எடுத்த தேகம்
எப்போதோ தெரியாதே; இப்போ தேதான்
துன்றுமனக் கவலைகெடப் புலைநா யேனைத்
தொழும்புகொளச் சீகாழித் துரையே! தூது
சென்றிடவே பொருளைவைத்த நாவ லோய்! நம்
சிவன்அப்பா என்றஅருட் செல்வத் தேவே! (30)

162 'தேவர்தொழும் வாதவூர்த் தேவே!' என்பேன்;
'திருமூலத் தேவே!' இச் செகத்தோர் முத்திக்
காவலுறச் சிவஎன்வாக் குடனே வந்த
அரசே! சும் மாஇருந்துன் அருளைச் சாரப்
பூவுலகில் வளர்அருண கிரியே! மற்றைப்
புண்ணியர்கா ளோ' என்பேன்; புரைஒன் றில்லா
ஓவியம்போல் அசைவறவுந் தானே நிற்பேன்;
ஓதரிய துயர்கெடவே உரைக்கும் முன்னே (31)

163 'ஓதரிய சுகர்போல என்என் என்ன
ஒருவர் இலேயோ' எனவும் உரைப்பேன்; 'தானே
பேதம்அபே தம்கெடவும் ஒருபே சாமை
பிறவாதோ? ஆலடியிற் பெரிய மோன
நாதன்ஒரு தரம்உலகம் பார்க்க இச்சை
நண்ணுஞே' என்றென்றே நாணு வாகிக்
காதல்மிகும் அணியிழையார் எனவா டுற்றேன்;
கருத்தறிந்து புரப்ப துன்மேற் கடன்முக் காலும்!

வாழ்த்து

164 காலமொடு தேசவர்த்த மான மாதி
கலந்து நின்ற நிலேவாழி! கருணேவாழி!
மாலறவுஞ் சைவமுதல் மதங்க ளாகி
மதாதீத மானஅருள் மரபு வாழி!
சாலமிகும் எளியேன்இவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தஅருட் டன்மை வாழி!
ஆலடியிற் பரமகுரு வாழி! வாழி!
அகண்டிதா கார அருள் அடியார் வாழி! (33)

---

## 14. தேன் முகம்



அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

### உலகம் இல்பொருளன்று

165 தேன்முகம் பிலிற்றும் பைந்தாள்
செய்யபங் கயத்தின் மேவும்
நான்முகத் தேவே! நின்னால்
நாட்டிய அகில மாயை
கான்முயற் கொம்பே என்கோ!
கானலம் புனலே என்கோ!
வான்முக முளரி என்கோ!
மற்றென்கோ! விளம்பல் வேண்டும். (1)

### மும்மூர்த்திகளுள் முதல்வன் யாவன்?

166 வேண்டுவ படைத்தாய்; நுந்தை
விதிப்படி புரந்தான்; அத்தைக்,
காண்டக அழித்தான் முக்கட்
கடவுள்தான்; இனைய வாற்றால்
ஆண்டவன் எவனோ என்ன
அறிகிலா தகிலம்; நீயே
ஈண்டிய அல்லல் தீர
எம்மனோர்க் கியம்பு கண்டாய்! (2)

## படைத்தலும், காத்தலும் மாயைக்கு உட்பட்டவை.

167 கண்டன அல்ல என்றே
கழித்திடும் இறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக்
கோதிலா முத்தி ; அத்தால்
பண்டையிற் படைப்பும் காப்பும்
பறந்தன மாயை யோடே ;
வெண்டலை விழிகை காலில்
விளங்கிட நின்ருன் யாவன் ? (3)

168 விளங்கவெண் ணீறு பூசி,
விரிசடைக் கங்கை தாங்கித்,
துளங்குநன் னுதற்கண் தோன்றச்,
சுழல்வளி நெடுமூச் சாகக்.
களங்கமில் உருவந் தானே
ககனமாய்ப் பொலியப், பூமி
வளர்ந்ததாள் என்ன உள்ளம்
மன்றென மறையொன் றின்றி, (4)

## கூத்தப் பெருமானே முதல்வன்

169 மறைமுழக் கொலிப்பத் தானே,
வரதமோ டபயக் கைகள்
முறைமையின் ஓங்க, நாதம்
முரசெனக் கறங்க, எங்கும்
குறைவிலா வணம்நி றைந்து
கோதிலா நடனம் செய்வான்
இறையவன் எனலாம் ; யார்க்கும்
இதயசம் மதம்;ஈ தல்லால், (5)

பிறப்பவரைக் கடவுள் என்பார்க்குப் பிறவி நீங்காது;
மயக்கமே உளதாம்.

170 அல்லலாந் தொழில்ப டைத்தே,
அடிக்கடி உருவெ டுத்தே,
மல்லல்மா ஞாலங் காக்க
வருபவர் கடவுள் என்னில்,
தொல்லையாம் பிறவி வேலை
தொலைந்திடா; திருள் நீங் காது;
நல்லது மாயை தானும்
நான்என வந்து நிற்கும். (6)

மயக்கம் உள்ளவரையில் ஞானம் பிறவாது;
ஞானம் இல்லையேல், பேரின்பம் இல்லை.

171 நானென நிற்கும் ஞானம்
ஞானமன்; றந்த ஞானம்
மோனமா இருக்க வொட்டா;
மோனம்இன் றுக வேதான்
தேனென ருசிக்கும் அன்பாற்
சிந்தைநைந் துருகும் வண்ணம்
வானென நிறைந்தா னந்த
மாகடல் வளைவ தின்றே, (7)

பேரின்பம் இல்லாதபொழுது, உள்ளது பந்தமே.

172 இன்றென இருப்போம் என்னின்
என்றும்சூ னியமாம் முத்தி;
நன்றொடு தீதும் அன்றி
நாம்முன்னே பெறும்அ வித்தை

நின்றது ; பெத்தந் தானே
நிரந்தர முத்தி யென்னின்,
ஒன்றொரு வரைநான் கேட்க
உணர்வில்லை ; குருவு மில்லை. (8)

**பந்தந்தான் இன்பம் எனில், அது உலகாயதர் மதமாம்.**

173 இல்லையென் றிடின்இப் பூமி
இருந்தவா றிருப்போ மென்னில்,
நல்லவன் சாரு வாகன் ;
' நான்சொலும் நெறிக்கு வீணில்
தொல்லைஏன் ? ஆக மாதி
தொடுப்பதேன் ? மயக்க மேதிங்
கொல்லைவந் திருமின் ! ' என்ன
உறவுசெய் திடுவன் அந்தோ ! (9)

தென்முகக் கடவுளே முதற்குரு.

174 அந்தணர் நால்வர் காண
அருட்குரு வாகி வந்த
எந்தையே ! எல்லாம் தானென்
றியம்பினன், எமைப் படைத்த
தந்தைநீ ; எம்மைக் காக்குந்
தலைவனே நுந்தை யன்றோ ?
பந்தமில் சித்தி முத்தி
படைக்கநின் அருள்பா லிப்பாய் ! (10)

———

# 15. பன்மாலை

---

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

## பாமாலைச் சிறப்பு

175 பன்மாலைத் திரள் இருக்கத் தமைஉ ணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பட்சம் என்று
நன்மாலை யாஎடுத்துச் சொன்னர் நல்லோர் ;
நலம்அறிந்து கல்லாத நானும் சொன்னேன்
சொன்மாலை ; மாலையாக் கண்ணீர் சோரத்
தொண்டனேன் எந்நாளும் துதித்து நிற்பேன் ;
என்மாலை அறிந்'திங்கே வாவா !' என்றே
எனைக்கலப்பாய், திருக்கருணை எம்பி ரானே ! (1)

## அன்பில்லா உடம்பு

176 கருணைமொழி சிறிதில்லேன், ஈதல் இல்லேன் ;
கண்ணீர்கம் பலைஎன்றன் கருத்துக் கேற்க
ஒருபொழுதும் பெற்றறியேன் ; என்னை ஆளும்
ஒருவா ! உன் அடிமைநான் ஒருத்த னுக்கோ
இருவினையும், முக்குணமும், கரணம் நான்கும்,
இடர்செயும்ஐம் புலனும்,கா மாதி ஆறும்,
வரவரவும் ஏழைக்கோர் எட்ட தான
மதத்தொடும்வந் தெதிர்த்தநவ வடிவமன்றே !(2)

## திருவடி சூட்டியருள்.

177 வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்த
வான்பொருளே ! எளியனேன் மனமாம் மாயைக்
குடிகெடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மோன
குருவே !என் தெய்வமே ! கோதி லாத
படியெனக்கா னந்தவெள்ளம் வந்து தேக்கும்
படிஎனக்குன் அருட்கருணை பற்று மாறே
அடியெடுத்தென் முடியில்இன்னம் வைக்க வேண்டும் ;
அடிமுடிஒன் றில்லாத அகண்ட வாழ்வே ! (3)

## அவதிப்பட முடியாது.

178 · வாழ்வனைத்தும் மயக்கம்எனத் தேர்ந்தேன் ; தேர்ந்த
வாறேநான் அப்பால்ஓர் வழிபா ராமல்
தாழ்வுபெற்றிங் கிருந்தேன் ; ஈதென்ன மாயம் !
தடையுற்றால் மேற்கதியுந் தடைய தாமே ;
ஊழ்வலியோ ? அல்லதுன்றன் திருக்கூத்தோ ? இங்
கொருதமியேன் மேற்குறையோ? உணர்த்தாய்
பாழ்அவதிப் படஎனக்கு முடியா ; தெல்லாம் [இன்னம்
படைத்தளித்துத் துடைக்கவல்ல பரிசி னனே !'(4)

## நீ எனக்குத் தீமையை ஏன் வைத்தாய் ?

179 நானென் இங் கெனும்அகந்தை எனக்கேன் வைத்தாய்?
நல்வினைதீ வினைஎனவே நடுவே நாட்டி
ஊனாரும் உடற்சுமைஎன் மீதேன் வைத்தாய் ?
உயிர்எனவும் என்னைஒன்று உள்ஏன் வைத்தாய் ?
ஆனமை யாய் அகில நிகில பேதம்
அனைத்தினுள்ளும் தானாகி, அறிவா னந்தத்
தேனாகிப், பாலாகிக், கனியாய்க், கன்னற்
செழும்பாகாய்க் கற்கண்டாய்த், திகழ்ந்த ஒன்றே !

## நிவிர்த்தி வேண்டும்.

180 ஒன்றிஒன்றி நின்றும்நின்றும் என்னே? என்னே?
உன்னிஉன்னும்பொருளலை நீ; உன்பால்அன்பால்
நின்றதன்மைக் கிரங்கும்வயி ராக்கியன் அல்லேன்:
நிவர்த்தியவை வேண்டும்இந்த நீல னுக்கே;
என்றும்என்றும் இந்நெறிஓர் குணமும் இல்லை;
இடுக்குவார் கைப்பிள்ளை; ஏதோ ஏதோ,
கன்றுமனத் துடன்ஆடு தழைதின் றூற்போற்
கல்வியுங்கேள் வியுமாகிக் கலக்குற் றேனே. (6)

## நீயே துணை.

181 உற்றதுணை நீயல்லால் பற்று வேறொன்
றுன்னேன்;பன் னுள்உலகத் தோடி ஆடிக்
கற்றதும்கேட் டதும்இதனுக் கேது வாகும்;
கற்பதும்கேட் பதும்அமையும், காணு நீத
நற்றுணையே! அருள்தாயே! இன்ப மான
நாதாந்த பரம்பொருளே! நார ணாதி
சுற்றமுமாய், நல்லன்பர் தமைச்சே யாகத்
தொழும்புகொள்ளுங் கனகனமே! சோதிக் குன்றே!

## மாயைத் திரை

182 குன்றாத மூவுருவாய் அருவாய், ஞானக்
கொழுந்தாகி, அறுசமயக் கூத்தும் ஆடி
நின்றாயே; மாயையெனுந் திரையை நீக்கி
நின்னையார் அறியவல்லார்? நினைப்போர்
மன்றாக இன்பக்கூத் தாட வல்ல [நெஞ்சம்
மணியே! என் கண்ணே!மா மருந்தே! நால்வர்க்
கன்றாலின் கீழ்இருந்து மோன ஞானம்
அமைத்தசின்முத் திரைக்கடலே! அமரர்ஏறே!

## சலனம் தீர்க்க.

183 திரையில்லாக் கடல்போலச் சலனந் தீர்ந்து
தெளிந்துருகும் பொன்போலச் செகத்தை யெல்
கரையவே கனிந்துருக்கும் முகத்தி லேநீ [லாம்
கனிந்தபர மானந்தக் கட்டி இந்நாள்
வரையிலே வரக்காணேன்; என்றுற் கட்டி,
வார்த்தைசொன்றுற் சுகம்வருமோ வஞ்சனேனை
இரையிலே இருத்தி,நிரு விகற்ப மான
இன்பநிட்டை கொடுப்பதையா; எந்த நாளோ!(9)

## எந்த நாள் கதி வருமோ!

184 எந்தநாள் உனக்கடிமை யாகும் நாளோ?
எந்நாளோ கதிவரும்நாள்? எளிய னேன்றன்
சிந்தைநா ளிதுவரைக்கும் மயங்கிற் றல்லால்
தெளிந்ததுண்டோ? மௌனியாய்த் தெளியஓர் [சொல்
தந்தநாள் முதல்இன்பக் கால்சற் றல்லால்
தடையறஆ னந்தவெள்ளம் தானே பொங்கி
வந்தநாள் இல்லை;மெத்த அலைந்தேன்; உன்னை
மறவாஇன் பத்தாலே வாழ்கின் றேனே. (10)

# 16. நினைவொன்று

## நெஞ்சிற்கு அறிவுறுத்தல் - ஆசைஒழி

185 நினைவொன்று நினையாமல் நிற்கின் அகம் என்பார்;
நிற்கும் இடமே அருளாம்; நிட்டையருள் ஓட்டும்;
தனைஎன்றும் மறந்திருப்ப அருள்வடிவா னதுமேல்
தட்டிஎழுந் திருக்கும்; இன்பம் தன்மயமே அது
பினைஒன்றும் இலை; அந்த இன்பமெனும் நிலையம்[வாம்
பெற்றாரே பிறவாமை பெற்றார்; மற்றுந்தான்
மனைஎன்றும், மகவென்றுஞ், சுற்றம்என்றும் அசுத்த
வாதனையாம் ஆசையொழி; மன்ஒருசொற்
கொண்டே. (1)

## ஒருமொழியை உணர்

186 'ஒருமொழியே பலமொழிக்கும் இடங்கொடுக்கும்; அந்த
ஒருமொழியே மலம்ஒழிக்கும் ஒழிக்கும் எனமொ
[ழிந்த
குருமொழியே மலைஇலக்கு; மற்றைமொழி எல்லாம்
கோடின்றி வட்டாடல்கொள் வதொக்குங்கண்டாய்!
கருமொழிஇங் குனக்கில்லை; மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவும்
கண்டனை;மேல்
தருமொழிஇங் குனக்கில்லை; உன்னைவிட்டு நீங்காத்
தற்பரமாய் ஆனந்தப் பொற்பொதுவாய் நில்லே!

## கற்றறி மூடம்

187 நில்லாத ஆக்கைநிலை யன்றெனவே கண்டாய்;
நேயஅருள் மெய்யன்றோ? நிலயமதா நிற்கக்
கல்லாதே ஏன்படித்தாய் ; கற்றதெல்லாம் மூடம்;
கற்றதெல்லாம் மூடம்என்றே கண்டனையும்அல்லை;
சொல்லாலே பயனில்லை ; சொல்முடிவைத் தானே
தொடர்ந்துபிடி ; மர்க்கடம்போல் தொட்டதுபற்
றுநில் ;
எல்லாரும் அறிந்திடவே வாய்ப்பறைகொண் டடிநீ,
இராப்பகல்இல் லாஇடமே எமக்கிடம்என்
றறிந்தே. (3)

## நிராசையின் சிறப்பு

188 இடம்பொருள்ஏ வலைக்குறித்து மடம்புகும்நாய்எனவே.
எங்கேநீ அகப்பட்டாய்? இங்கே நீ வாடா!
மடம்பெறுபாழ் நெஞ்சாலே அஞ்சாதே! நிராசை
மன்இடமே இடம் ; அந்த மாநிலத்தேபொருளும்;
திடம்பெறவே நிற்கின்எல்லா உலகமும்வந் தேவல்
செய்யும்;இந்த நிலைநின்றோர் செனகன்முதல்
கடம்பெறுமா மதயானை யென்னவும்நீ பாசக் [முனிவர்;
கட்டான நிகளபந்தக் கட்டவிழப் பாரே! (4)

## மாயையைக் கடந்து நில்

189 பாராதி அண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே; முடிவில்நின் றுபார்எதுதான் நின்ற
தாராலும் அறியாத சத்தன்றோ? அதுவாய்
அங்கிருநீ ; எங்கிருந்தும் அதுவாவை கண்டாய்

பூராய மாகவும்நீ மற்ருென்றை விரித்துப்
புலம்பாதே ; சஞ்சலமாப் புத்தியைநாட் டாதே;
ஓராதே யொன்றையும்நீ ; முன்னிலைவை யாதே;
உள்ளபடி முடியும்எலாம்; உள்ளபடி காணே, (5)

## சகம் பொய்

190 உள்ளபடி என்னவும்நீ மற்ருென்றைத் தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டா;நிட் களங்கமதி யாகிக்,
கள்ளமனத் துறவைவிட், டெல் லாந்துறந்த துறவோர்
கற்பித்த மொழிப்படியே கங்குல்பகல் அற்ற
வெள்ளவெளிக் கடல்மூழ்கி, இன்பமயப் பொருளாய்
விரவி,எடுத் தெடுத்தெடுத்து விள்ளவும்வாய் இன்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீரும் கம்பலையு மாகிக்
கும்பிட்டுச் சகம்பொய்யெனத் தம்பட்டம் அடியே!

## பரவெளி இருப்பு

191 அடிமுடியும் நடுவும்அற்ற பரவெளிமேற் கொண்டால்
அத்துவித ஆனந்த சித்தமுண்டாம்; நமது
குடிமுழுதும் பிழைக்கும்ஒரு குறையும் இல்லை; எடுத்த
கோலம்எல்லாம் நன்ருகும்; குறைவுநிறை வறவே
விடியும்உதயம்போல அருள்உதயம் பெற்ற
வித்தகரோ டுங்கூடி விளையாட லாகும்;
படிமுழுதும் விண்முழுதும் தந்தாலும் களியாப்
பாலருடன் உன்மத்தர் பசாசர்குணம் வருமே. (7)

## பக்குவரும் அபக்குவரும்

192 வரும் போம்என் பனவும்இன்றி. என்றும்ஒருபடித்தாய்,
வானுதி தத்துவத்தை வளைந்தருந்தி, வெளியாம்
இரும்போ?கல் லோ?மரமோ? என்னும்நெஞ்சைக் கனல்மேல்
இட்டமெழு காஉருக்கும் இன்பவெள்ள மாகிக்

கரும்போ,கண் டோ,சீனி சருக்கரையோ, தேனே,
கனிஅமிர்தோ, எனருசிக்கும்; கருத்தவிழ்ந்தோர்
உணர்வார்;
அரும்போ நன் மணங்காட்டும்? காமரசங் கன்னி
அறிவாளோ? அபக்குவர்க்கோ அந்நலந்தான்
விளங்கும்! (8)

குருவருளன்றி இல்லை

193 தானேயும் இவ்வுலகம் ஒருமுதலு மாகாத்
தன்மையினால் படைத்தளிக்குந் தலைமையது வான
கோனாக ஒருமுதல்இங் குண்டெனவும் யூகங்
கூட்டியதும் சகமுடிவிற் குலவுறுமெய்ஞ் ஞான
வானாக அம்முதலே நிற்கும்நிலை நம்மால்
மதிப்பரிதாம் எனமோனம் வைத்ததும்உன் மனமே
ஆனாலும் மனம்சடம்என் றழுங்காதே உண்மை
அறிவித்த இடம்குருவாம் அருள்அலதொன்
றிலையே. (9)

# 17. பொன்னை மாதரை

கலி விருத்தம்

## மூவாசை அற்றமை

194 பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்;
என்னை நாடிய என்னுயிர் நாதனே!
உன்னை நாடுவன்; உன்னருள் தூவெளி
தன்னை நாடுவன்; தன்னந் தனியனே. (1)

## யாவும் அர்ப்பணம்

195 தன்ன தென்றுரை சாற்று வனஎலாம்
நின்ன தென்றனை; நின்னிடத் தேதந்தேன்;
இன்னம் என்னை இடருற கூட்டினுல்
பின்னை உய்கிலன் பேதையன் ஆவியே, (2)

## அறிவு வழிபாடு

196 ஆவி யே! உனை யான் அறி வாய் நின்று
சேவி யேன்; கள்ளச் சிந்தை திறைகொடேன்;
பாவி யேன் உளப் பான்மையைக் கண்டு நீ
கூவி ஆள்! எனை ஆட்கொண்ட கோலமே! (3)

## நலம் இன்மை

197 கோலம் இன்றிக், குணம் இன்றி, நின் அருட்
சீல மின்றிச், சிறியன் பிழைப்பனே?
ஆலம் உண்டும் அமிர்துரு வாய்வந்த
காலம் எந்தை! கதி நிலை காண்பதே. (4)

## அகக் காட்சி

198 காணுங் கண்ணிற் கலந்தகண் ணே! உனைச்
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ ?
ஆணும், பெண்ணும், அதுஎனும் பான்மையும்,
பூணுங் கோலம் பொருந்தியுள் நிற்கவே. (5)

## மனிதரில் தேவர்

199 நிற்கும் நன்னிலை நிற்கப்பெற் றோர்,அருள்
வர்க்க மன்றி மனிதர் அன் றே! ஐயா!
துர்க்கு ணக்கடற் சோங்கன்ன பாவியேற்
கெக்கு ணங்கள் கண் டென்பெயர் சொல்வதே? (6)

## அனுபவம் இன்மை

200 சொல்லை உன்னித் துடித்ததல் லால்,அருள்
எல்லை உன்னி எனை அங்கு வைத்திலேன் ;
வல்லை நீஎன்னை வாஎன் றிடாவிடின் ;
கல்லை யாம்இக் கருமி நடக்கையே. (7)

## நிறை இன்ப வேட்கை

201 கையும் மெய்யும் கருத்துக் கிசையவே
ஐய! தந்ததற் கையம் இனிஉண் டோ ?
பொய்யன் என்சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்ய தாம்இன்பம் என்று விளைவதே? (8)

## இதய வெளிக்குள்

202 என்றும் உன்னை இதய வெளிக்குளே
துன்ற வைத்தன னே: அருட் சோதிநீ

நின்ற தன்மை நிலைக்கென்னை நேர்மையாம் ?
நன்று தீதற வைத்த நடுவதே ! (9)

## திடம் இன்மை

203 வைத்த தேகம் வருந்த வருந்திடும்
பித்தன் நான்அருள் பெற்றும் திடமிலேன் ;
சித்த மோன ! சிவ!சின்ம யானந்தம்
வைத்த ஐய் ! அருட்செம்பொற் சோதியே ! (10)

## வலிந்து ஆட்கொள்ளல்

204 செம்பொன் மேனிச் செழுஞ்சுட ரே!முழு
வம்ப னேன்உனை வாழ்த்தும் மதியின்றி,
இம்பர் வாழ்வினுக் கிச்சைவைத் தேன்மனம் ;
'நம்பி! வா'எனில் நான்என்கொல் செய்வதே ? (11)

## இக்குற்றம்

205 செய்யும் செய்கையும், சிந்திக்கும் சிந்தையும்,
ஐய ! நின்னஎன் றெண்ணும் அறிவின்றி,
வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யி லேசுழன் றேன்;என்ன புன்மையே ! (12)

## உடலின்மேல் அருவருப்பு

206 புன்பு லால்நரம் பென்புடைப் பொய்யுடல்
அன்பர் யார்க்கும் அருவருப் பல்லவோ ?
என்பொ லாமணி யே! இறை யே! இத்தால்
துன்ப மன்றிச் சுகம்ஒன்றும் இல்லையே ? (13)

## வாதிடேன்

207 இல்லை உண்டென் றெவர்பக்க மாயினும்
சொல்ல வோஅறி யாத தொழும்பன்யான்,
செல்ல வேறொரு திக்கறி யேன்;எலாம்
வல்ல நீஎனை வாழ்விக்க வேண்டுமே. (14)

## அன்பர்பால் அன்பு

208 வேண்டும் சீர்அருள் மெய்யன்பர்க் கேஅன்பு
பூண்ட நான்என் புலம்அறி யாததோ !
ஆண்ட நீஉன் அடியவன் நான்என்று
தூண்டு வேனன்றித் தொண்டன்என் சொல்வதே?

## மனக்கிலேசத்தை மாற்றுக.

209 எனக்கு ளேஉயிர் என்ன இருந்தநீ,
மனக்கி லேசத்தை மாற்றல் வழக்கன்றோ ?
கனத்த சீரருட் காட்சிஅ லால்ஒன்றை
நினைக்க வோஅறி யாதென் றன் நெஞ்சமே. (16)

## தஞ்சம்

210 நெஞ்சு கந்துனை நேசித்த மார்க்கண்டர்க்
கஞ்சல் என்ற அருளறிந் தே,ஐயா !
தஞ்சம் என்றுன் சரணடைந் தேன் ;எங்கும்
செஞ்செ வேநின்ற சிற்சுக வாரியே ! (17)

## சின்மய வெளி

211 வாரி ஏழும் மலையும், பிறவுந்தான்
சீரி தானநின் சின்மயத் தேயென்றால்,

ஆரி லேஉள தாவித் திரள்?அதை
ஓரி லேன்;எனை ஆண்ட ஒருவனே! (18)

வேறொருவர் அருளார்.

212 ஒருவர் என்உளத் துள்குங் குறிப்பறிந்
தருள்வ ரோ?எனை ஆளுடை அண்ணலே!
மருள னேன்பட்ட வாதை விரிக்கின்றே
பெருகும் நாள்;இனிப் பேச விதியின்றே. (19)

அரற்றுகின்றேன்

213 இன்று எக்கன் பிழைத்திலன் நான்என்றே
அன்று தொட்டெனை ஆள்அர சே!என்று
நின்ற ரற்றிய நீலனைக் கைவிட்டால்,
மன்றம் எப்படி நின்னருள் வாழ்த்துமே? (20)

உன் அருளாலன்றி உய்யேன்.

214 வாழ்த்தும் நின்னருள் வாரம்வைத் தாலன்றிப்
பாழ்த்த சிந்தைப் பதகனும் உய்வனோ?
சூழ்த்து நின்ற தொழும்பரை ஆனந்தத்
தாழ்த்தும் முக்கண் அருட்செம்பொற் சோதியே! (21)

மன வாதனை தீர்.

215 சோதி யே!சுட ரே!சுக மே!துணை
நீதி யே!நிச மே!நிறை வே!நிலை
ஆதி யே!உனை யான்அடைந் தேன்;அகம்
வாதி யாதருள் வாய்!அருள் வானையே. (22)

## மெய்ஞ்ஞான தெய்வம்

216 வானைப் போல வளைந்துகொண் டானந்தத்
தேனைத் தந்தெனைச் சேர்ந்துக லந்தமெய்ஞ்
ஞானத் தெய்வத்தை நாடுவ(ன்); நான்என்னும்
ஈனப் பாழ்கெட என்றும் இருப்பனே. (23)

## ஈர்த்து அருள்செய்

217 இரும்பைக் காந்த மிழுக்கின்ற வாறெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமல் திருவடிக்
கரும்பைத் தந்து,கண் ணீர்கம் பலையெலாம்
அரும்பச் செய்;என தன்னையொப் பாமனே! (24)

## ஞானச் சுடர்

218 அன்னை அப்பன்என் ஆவித் துணையெனுந்
தன்னை ஒப்பற்ற சற்குரு என்பதென்?
என்னைப் பூரண இன்ப வெளிக்குளே
துன்ன வைத்த சுடரெனத் தக்கதே. (25)

## முதற் பொருள் ஒன்றே

219 தக்க வேள்வியிற் சார்ந்தநற் பூமியின்
மிக்க தாக விளங்கு முதல் ஒன்றே,
எக்க ணுந்தொழ யாவையும் பூத்துக்காய்த்
தொக்க நின்றும்ஒன் றுய்நிறை வானதே. (26)

## சமயங்கட்கெல்லாம் முதல்

220 ஆன மான சமயங்கள் ஆறுக்கும்
தான மாய்நின்று தன்மயங் காட்டிய

ஞான பூரண நாதனை நாடியே
தீன னேன் இன்பந் தேக்கித் திளைப்பனே. (27)

## தன்மயம்

221 தேக்கி இன்பந் திளைக்கத் திளைக்கவே
ஆக்க மாய்எனக் கானந்த மாகியே
போக்கி ளேடு வரவற்ற பூரணம்
தாக்கி நின்றவா தன்மய மாமதே. (28)

## மோனப் பொருள்

222 அதுஎன் றுன்னும் அதுவும் அறநின்ற
முதிய ஞானிகள் மோனப் பொருளது
எதுஎன் றெண்ணி இறைஞ்சுவன் ஏழையேன்;
மதியுள் நின்றின்ப வாரி வழங்குமே. (29)

## ஊமை கண்ட கனவு

223 வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப்
பாரிற் கண்டவை யாவும் பருகினை;
ஓரிற் கண்டிடும் ஊமன் கனவென
யாருக் கும்சொல வாய்இலை ஐயனே! (30)

## வேறு புகலிடம் இல்லை

224 ஐயம் அற்ற அதிவரு ணர்க்கெலாங்
கையில் ஆமல கக்கனி ஆகிய
மெய்ய னே! இந்த மேதினி மீதுழல்
பொய்ய னேற்குப் புகலிடம் எங்ஙனே? (31)

## யான் எனது

225 எங்ங னேஉய்ய? யான்என தென்பதற்
றங்ங னேஉன் அருள்மய மாகிலேன் ;
திங்கள் பாதி திகழப். பணிஅணி
கங்கை வார்சடைக் கண்ணுதல் எந்தையே ! (32)

## தொண்டு

226 கண்ணிற் காண்பதுன் காட்சி; கை யால்தொழில்
பண்ணல் பூசை ; பகர்வது மந்திரம் ;
மண்ணெ டைந்தும் வழங்குயிர் யாவுமே
அண்ண லே! உன் அருள்வடி வாகுமே. (33)

## காரணம் காணல்

227 வடிவெ லாம் நின் வடிவென வாழ்த்திடாக்
கடிய னேனும்உன் காரணங் காண்பனே?
நெடிய வான்என எங்கும் நிறைந்தொளிர்
அடிக ளே! அர சே! அருள் அத்தனே ! (34)

## கற்கத் தகும் கல்வி

228 அத்த னே! அகண் டானந்த னே! அருட்
சுத்த னே! என உன்னைத் தொடர்ந்திலேன் ;
மத்த னேன்பெறு மாமலம் மாயவான்
கத்த னே! கல்வி யாதது கற்கவே. (35)

## கற்றதன் பயன்

229 கற்றும் என்பலன்? கற்றிடும் நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்ப மோ? நெறி

நிற்றல் வேண்டும் ; நிருவிகற் பச்சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே ! (36)

## விண் பெருமை

230 பெருமைக் கேஇறுமா ந்து பிதற்றிய
கருமிக் கைய ! கதியும்உண் டாங்கொலோ ?
அருமைச் சீர் அன்பர்க் கன்னைஒப் பாகவே
வரும்அப் பேரொளி யே!உன்ம ருந்தமே. (37)

## கல் மனத்தைக் கரை

231 உன்ம னிக்கு ளொளிர்பரஞ் சோதியாம்
சின்ம யப்பொரு ளே!பழஞ் செல்வமே !
'புன்ம லத்துப் புழுவன்ன' பாவியேன்
கன்ம னத்தைக் கரைக்கக் கடவையே. (38)

## நடிப்பு

232 கரையில் இன்பக் கடல்அமு தே! இது
வரையில் நான்உனை வந்து கலந்திலேன்;
உரைஇ லாஇன்பம் உள்ளவர் போலஇத்
தரையி லேநடித் தேன்என்ன தன்மையே ! (39)

## போதும்

233 மையு லாம்விழி மாதர்கள் தோதகப்
பொய்யில் ஆழும் புலையினிப் பூரைகாண் ;
'கையில் ஆமல கக்கனி' போன்ற, என்
ஐய னே!எனை ஆளுடை அண்ணலே ! (40)

## உய்தி வாய்க்கும்

234 அண்ண லே! உன் அடியவர் போல்அருட்
கண்ணி னல்உனைக் காணவும் வானனப்
பண்ணி னல்என் பசுத்துவம் போய்உய்யும்;
வண்ண மாக மனேலயம் வாய்க்குமே. (41)

## வெறும் பேச்சு

235 வாய்க்கும் கைக்கும் மௌனம் மௌனம்என்
றேய்க்குஞ் சொற்கொண் டிராப்பகல் அற்றிடா
நாய்க்கும் இன்பம்உண் டோ? நல் லடியரைத்
தோய்க்கும் ஆனந்தத் தூவெளி வெள்ளமே! (42)

## உலகிற்குத் தாயும் தந்தையும்

236 தூய தான துரிய அறிவெனும்
தாயும்நீ இன்பத் தந்தையு நீயென்ருல்,
சேயதாம் இந்தச் சீவத் திரளன்றே ?
ஆயும் பேரொளி யான அகண்டமே! (43)

## நூலும் அனுபவமும்

237 அகண்ட மென்ன அருமறை ஆகமம்
புகன்ற நின் தன்மை போதத் தடங்குமோ ?
செகங்கள் எங்குந் திரிந்துநன் மோனத்தை
உகந்த பேர்உனை ஒன்றுவர் ஐயனே! (44)

## மற்ஞெரு தெய்வத்தை மனத்தாலும் நினையேன்.

238 ஐய னே! உனை யன்றி ஒருதெய்வம்
கையி னல்தொழ வுங்கரு தேன்கண்டாய்!

பொய்ய னாகிலும் பொய்யுரை யேன்;சுத்த
மெய்ய னும்உனக் கேவெளி யாகுமே. (45)

## கல்லால் நிழற் கடவுள்

239 வெளியில் நின்ற வெளியாய் விளங்கிய
ஒளியில் நின்ற ஒளியாம்உன் றன்னை நான்
தெளிவு தந்தகல் லாலடித் தேவென்று
களிபொ ருந்தஅன் றோ?கற்ற கல்வியே, (46)

## இதற்கோ பிறந்தேன்!

240 கல்லை யுற்ற கருத்தினர் கார்நிறத்
தல்லை யொத்த குழலினர் ஆசையால்
எல்லை யற்ற மயல்கொள வோ? எழில்
தில்லை யில்திக ழுந்திருப் பாதனே! (47)

## கன்மம் நீங்கும் வழி

241 திருவ ருள்தெய்வச் செல்வி மலைமகள்
உருவி ருக்கின்ற மேனி ஒருபரங்
குருவை. முக்கண்எம் கோவைப் பணி;நெஞ்சே!
கருவி ருக்கின்ற கன்மம்இங் கில்லையே. (48)

## நாதன் இருக்க நமக்கேன் பயம்?

242 கன்மம்ஏ து? கடுநர கேது?மேற்
சென்ம மே?தெனைத் தீண்டக் கடவதோ?
என்ம னோரதம் எய்தும் படிக்கருள்
நன்மை கூர்முக்கண் நாதன் இருக்கவே. (49

## சிவன்பாதமே கதி.

243 நாத கீதன், என் நாதன்,முக் கட்பிரான்,
வேத வேதியன், வெள்விடை யூர்திமெய்ப்
போத மாய்நின்ற புண்ணியன், பூந்திருப்
பாத மேகதி; மற்றிலை; பாழ்நெஞ்சே! (50)

## சிவனருள் பெற்றவரே பெரியோர்.

244 மற்று னக்கு மயக்கம்என்? வன்னெஞ்சே!
கற்றை வார்சடைக் கண்ணுத லோன்அருள்
பெற்ற பேரவ ரேபெரி யோர்;எலாம்
முற்றும் ஓர்ந்தவர், மூதுரை அத்தமே. (51)

## அங்கே சென்று கலப்பேன்.

245 உரைஇ றந்துளத் துள்ள விகாரமாம்
திரைக டந்தவர் தேடுமுக் கட்பிரான்,
பரைநி றைந்த பரப்பெங்ஙன் அங்ஙனே
கரைக டந்தின்ப மாகக் கலப்பனே. (52)

## எதனாலும் எட்ட இயலவில்லை.

246 கலந்த முத்தி கருதினும் கேட்பினும்
நிலங்க ளாதியும் நின்றெமைப் போலவே
அலந்து போயினம் என்னும் அருமறை
மலர்ந்த வாய்முக்கண் மாணிக்கச் சோதியே! (53)

## என்ன தவம் செய்தேன்!

247 சோதி யாதெனைத், தொண்டருட் கூட்டியே,
போதி யாதஎல் லாமெள்ளப் போதிக்க,

ஆதி காலத்தில் உன்னடிக் காம்தவம்
ஏது நான்முயன் றேன்?முக்கண் எந்தையே! (54)

## திருவருள் வாழ்க!

248 எந்த நாளைக்கும் ஈன்றருள் தாய்என
வந்த சீரருள் வாழ்கஎன் றுன்னுவேன்;
சிந்தை நோக்கந் தெரிந்து, குறிப்பெலாம்
தந்து காக்குந் தயாமுக்கண் ஆதியே! (55)

## எண்ணவோ அரிது.

249 கண்ண கன்றஇக் காசினி யூடெங்கும்
பெண்ணெ டாண்முத லாம்என் பிறவியை
எண்ண வோஅரி தேழை கதிபெறும்
வண்ணம் முக்கண் மணிவந்து காக்குமே. (56)

## உன் பாரம்

250 காக்கும் நின்னருட் காட்சியல் லால்ஒரு
போக்கும் இல்லை;என் புந்திக் கிலேசத்தை
நீக்கி ஆளுகை நின்பரம்; அன்பினர்
ஆக்க மே!முக்கண் ஆனந்த மூர்த்தியே! (57)

## சீவச்செயல் சிவச்செயலாதல்

251 ஆனம் தங்கதி என்னஎன் ஆனந்த
மோனம் சொன்ன முறைபெற முக்கண்எம்
கோனிங் கீந்த குறிப்பத னுல்வெறுந்
தீனன் செய்கை திருவருட் செய்கையே. (58)

## கண்ணுற் காண விரும்பினேன்.

252 கையி னுல்தொழு தேத்திக் கசிந்துய்ய
மெய்யி னுல்உனைக் காண விரும்பினேன் ;
ஐய னே! அர சே! அரு ளே! அருள்
தையல் ஓர்புறம் வாழ்சக நாதனே ! (59)

## சுகம் பெறுவது எக்காலம் !

253 சகத்தின் வாழ்வைச் சதமென எண்ணியே
மிகுத்த தீமை வினைய விளைக்கின்றேன் ;
அகத்துள் ஆரமுதாம் ஐய ! நின்முத்திச்
சுகத்தில் நான்வந்து தோய்வதெக் காலமே ! (60)

## இறை நாட்டம்

254 காலமூன்றும் கடந்தொளி ராநின்ற
சீல மே! நின் திருவரு ளால்இந்த்ர
சால மாம்இச் சகம்என எண்ணி, நின்
கோலம் நாடுதல் என்று, கொடியனே. (61)

## அன்பன்றிக் கதியில்லை

255 கொடிய வெவ்வினைக் கூற்றைத் துரந்திடும்
அடிக ளாம்பொரு ளே! நினக் கன்பின்றிப்
பதியில் ஏழைமை பற்றுகின் றேன்வெறும்
மிடிய னேன்கதி மேவும் விதி இன்றே. (62)

## எல்லாவற்றையும் வைத்தவன் நீ.

256 விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையில்

பதிய வைத்த பசுபதி! நின் அருட்
கதியை எப்படிக் கண்டு களிப்பதே? (63)

## உனக்குப் பதினுயிரம் தெண்டன்;
## என் பொய்ம்மையை நீக்கு.

257 கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப்
பண்டும் இன்றும்என் பால்நின் றுணர்த்திடும்
அண்ட னே!உனக் கோர்பதி னுயிரம்
தெண்டன்; என்பொய்ம்மை தீர்த்திடல் வேண்டுமே.

## அன்பர் பணியின் சிறப்பு

258 வேண்டும் யாவும் இருந்து, வெளியிடைத்
தூண்டு வார்அற்ற சோதிப் பிரான்! நின்பால்
பூண்ட அன்பர்தம் பொற்பணி வாய்க்குமேல்,
ஈண்டு கன்மம்எடுப்பன் அனந்தமே. (65)

## உடம்பு நீங்குமுன் கூடவேண்டும்.

259 எடுத்த தேகம் இறக்கும்முன் னேஎனைக்
கொடுத்து, நின்னையும் கூடவுங் காண்பனே?
அடுத்த பேரறி வாய்,அறி யாமையைக்
கெடுத்த இன்பக் கிளர்மணிக் குன்றமே! (66)

## என்று அருள்செய்வது?

260 குன்றி டாத கொழுஞ்சுட ரே!மணி
மன்று ளாடிய மாணிக்க மே!உனை
அன்றி யார்துணை? யார்உற? வார்கதி?
என்று நீஎனக் கின்னருள் செய்வதே? (67)

## இருளெலாம் நீங்கிற்று.

261 அருளெ லாந்திரண் டோர்வடி வாகிய
பொருளெ லாம்வல்ல பொற்பொது நாத!என்
மருளெ லாங்கெடுத் தேஉளம் மன்னலால்
இருளெ லாம்இரிந் தெங்கொளித் திட்டதே? (68)

## அடியிணையே ஆதாரம்.

262 எங்கும் என்னை இகலுற வாட்டியே
பங்கஞ் செய்த பழவினை பற்றறால்,
அங்க ணாஉன் அடியிணை யன்றியே
தங்க வேறிடம் உண்டோ சகத்திலே? (69)

## அனுபவமே வேண்டும்.

263 உண்ட வர்க்கன்றி உட்பசி ஓயுமோ?
கண்ட வர்க்கன்றிக் காதல் அடங்குமோ?
தொண்ட ருக்கெளி யான்என்று தோன்றுவான்
வண்ட மிழ்க்கிசை வாக மதிக்கவே. (70)

## உறக்கம் வரவில்லை!

264 மதியும், கங்கையும், கொன்றையும், மத்தமும்
பொதியும் சென்னிப் புனிதநின் பொன்னடிக்
கதியை விட்டிந்தக் காமத்தில் ஆழ்ந்தஎன்
விதியை எண்ணி விழிதுயி லாதன்றே. (71)

## ஒன்று சொன்னவன்

265 அன்றெ னச்சொல, ஆம்என, அற்புதம்
நன்றெ னச்சொல நண்ணியந ன்மையை,

ஒன்றெ னச்சொன்ன ஒண்பொரு ளே! ஒளி
இன்றெ னக்கருள் வாய்! இருள் ஏகவே. (72)

## அவர் ஒருவரே துணை.

266 இருவ ரேபுகழ்ந் தேத்தற் கினியராம்
ஒருவ ரே துணை என்றுண ராய்! நெஞ்சே!
வருவ ரேகொடுங் காலர்கள்; வந்தெதிர்
பொருவ ரே; அவர்க் கென்கொல் புகல்வதே? (73)

## கண்ணின் பயன்

267 புகழும், கல்வியும், போதமும், பொய்யிலா
அகமும், வாய்மையும், அன்பும், அளித்தவே;
சுகவி லாசத் துணைப்பொருள் தோற்றமாங்
ககன மேனியைக் கண்டன கண்களே. (74)

## நான் தொழும் தெய்வம்

268 கண்ணுள் நின்ற ஒளியைக், கருத்தினை,
விண்ணுள் நின்று விளங்கிய மெய்யினை,
எண்ணி எண்ணி இரவும் பகலுமே
நண்ணு கின்றவர் நான்தொழும் தெய்வமே. (75)

## சிவனைச் சேர்ந்தவர் உய்வர்.

269 தெய்வம் வேறுள தென்பவர் சிந்தனை
நைவர் என்பதும், நற்பர தற்பர!
சைவ சிற்சிவ னே! உனைச் சார்ந்தவர்
உய்வர் என்பதும், யான்உணர்ந் தேன்உற்றே. (76)

## சுற்றம் துணையோ !

270 உற்ற வேளைக் குறுதுணை யாய்இந்தச்
சுற்றமோ நமைக்காக்கும் சொலாய்? நெஞ்சே !
கற்றை வார்சடைக் கண்ணுதல் பாதமே
பற்ற தாயிற் பரசுகம் பற்றுமே. (77)

## இதுவே பொருள்

271 பற்ற லாம்பொரு ளேபரம்; பற்றினல்
உற்ற மாதவர்க் குண்மையை நல்குமே;
மற்றும் வேறுள மார்க்க மெலாமெடுத்
தெற்று வாய்மன மே! கதி எய்தவே. (78)

---

# 18. ஆரணம்

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்

## வேதாகமப் பொருள்

272 ஆரண மார்க்கத் தாகம வாசி
அற்புத மாய்நடந் தருளும்
காரண முணர்த்தும் கையும், நின் மெய்யும்;
கண்கள்மூன் றுடையஎன் கண்ணே !
பூரண அறிவிற் கண்டிலம்; அதனல்
போற்றிஇப் புந்தியோ டிருந்து,
தாரணி உள்ள மட்டுமே வணங்கத்
தமியனேன் வேண்டிடத் தகுமே. (1)

## ஈருருவும் ஒருருவும்

273 இடம்ஒரு மடவாள் உலகனைக் கீந்திட்
டெவ்வுல கத்தையு மீன்றும்,
தடம்உறும் அகிலம் அடங்குநாள் அம்மை
தன்னையும் ஒழித்து,விண் ணெனவே
படருறு சோதிக் கருணையங் கடலே !
பாய்இருட் படுகரிற் கிடக்கக்
கடவனே? நினைப்பு மறப்பெனுந் திரையைக்
கவர்ந்தெனை வளர்ப்பதுன் கடனே. (2)

## ஆனந்த ஆர்வம்

274 வளம்பெறு ஞான வாரிவாய் மடுத்து,
மண்ணையும் விண்ணையுந் தெரியா
தளம்பெறுந் துரும்பொத் தாவியோ டாக்கை
ஆனந்த மாகவே அலந்தேன்;
களம்பெறு வஞ்ச நெஞ்சினர் காணுக்
காட்சியே! சாட்சியே! அறிஞர்
உளம்பெறுந் துணையே! பொதுவினில் நடிக்கும்
உண்மையே! உள்ளவா றிதுவே. (3)

## என்னைக் கரையேற்றுக.

275 உள்ளமே நீங்கா என்னை 'வா! வா' என்
றுலப்பிலா ஆனந்த மான
வெள்ளமே பொழியுங் கருணைவான் முகிலே!
வெப்பிலாத் தண்ணருள் விளக்கே!
கள்ளமே துரக்குந் தூவெளிப் பரப்பே!
கருவெனக் கிடந்தபாழ் மாயப்
பள்ளமே வீழா தெனைக்கரை யேற்றிப்
பாலிப்ப துன்னருட் பரமே! (4)

## என் கருத்து இது:

276 பரம்பர மாகிப் பக்குவம் பழுத்த
பழஅடி யார்க்கருள் பழுத்துச்
சுரந்தினி திரங்கும் தானகற் பகமே!
சோதியே! தொண்டனேன் நின்னை
இரந்துநெஞ் சுடைந்து கண்துயில் பெறமல்
இருந்ததும் என்கணில் இருட்டைக்
கரந்துநின் கண்ணால் துயில்பெறல் வேண்டிக்
கருதினேன்; கருத்திது தானே. (5)

## உலகத்தார் நெறிதான் எனக்குமோ?

277 கருத்தினுட் கருத்தாய் இருந்தும்நீ உணர்த்துங்
காரணங் கண்டுசும் மாதான்
வருத்தமற் றிருந்து சுகம்பெறு வண்ணம்
வருந்தினேன்; மதியின்மை தீர்ப்பார்
ஒருத்தர்ஆர்? உளப்பா டுணர்பவர் யாவர்?
உலகவர் பன்னெறி எனக்குப்
பொருத்தமோ? சொல்லாய்! மௌனசற் குருவே!
போற்றிநின் பொன்னடிப் போதே. (6)

## பணியற நிற்கை

278 "அடியெனும் அதுவும், அருளெனும் அதுவும்,
அறிந்திடில் நிர்க்குண நிறைவும்
முடியெனும் அதுவும், பொருளெனும் அதுவும்
மொழிந்திடிற் சுகமன மாயைக்
குடிகெட வேண்டிற் பணியற நிற்றல்
குணம்" எனப் புன்னகை காட்டிப்,
படிமிசை மௌனி யாகிநீ ஆளப்
பாக்கியம் என்செய்தேன்! பரனே! (7)

## வேலைக்கொரு குணம்

279 'என்செய லின்றி யாவும்நின் செயல்'என்
றெண்ணுவேன் ஒவ்வொரு காலம்;
புன்செயல் மாயை மயக்கின்என் செயலாப்
பொருந்துவேன் அஃதொரு காலம்;
பின்செயல் யாதும் நினைவின்றிக் கிடப்பேன்;
பித்தனேன் நன்னிலை பெறல்நின்
றன்செய லாக முடித்திடல் வேண்டும்;
சச்சிதா னந்தசற் குருவே! (8)

## ஆவலோ மெத்த.

280 குருவுரு வாகி, மௌனியாய், மௌனக்
கொள்கையை யுணர்த்தினை ; அதனால்
கருவுரு வாவ தெணக்கிலை ; இந்தக்
காயமோ பொய்யெனக் கண்ட
திருவுரு வாளர் அனுபவ நிலையும்
சேருமோ ? ஆவலோ மெத்த ;
அருவுரு வாகி, அல்லவாய்ச் ; சமயம்
அளவிடா ஆனந்த வடிவே ! (9)

## மோனமே வழி

281 வடிவிலா வடிவாய், மன நினை வணுகா
மார்க்கமாய், நீக்கருஞ் சுகமாய்,
முடிவிலா வீட்டின் வாழ்க்கைவேண் டினர்க்குன்
மோனமல் லால்வழி யுண்டோ ?
படிஇருள் அகலச் சின்மயம் பூத்த
பசுங்கொம்பை அடக்கி,ஓர் கல்லா
லடியிலே இருந்த ஆனந்த அரசே !
அன்பரைப் பருகும் ஆ ரமுதே ! (10)

## 19. சொல்லற்கரிய

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

### என்னை விட்டு எங்கொளித்தாய்?

282 சொல்லற் கரிய பரம்பொருளே!
சுகவா ரிதியே! சுடர்க்கொழுந்தே!
வெல்லற் கரிய மயலில்எனை
விட்டெங் கொளித்தாய்? ஆகெட்டேன்!
கல்லிற் பசிய நார்உரித்துக்
கடுகிற் பெரிய கடலடைக்கும்
அல்லிற் கரிய அந்தகனுர்க்
காளாக் கினையோ? அறியேனே. (1)

### சுத்தாத்துவித முத்திநிலை

283 'அறிவிற் கறிவு தாரகம்' என்
றறிந்தே, அறிவோ டறியாமை
நெறியிற் புகுதா தோர்படித்தாய்
நின்ற நிலையும் தெரியாது
குறியற் றகண்டா தீதமயக்
கோதில் அமுதே! நினைக்குறுகிப்
பிறிவற் றிருக்க வேண்டாவோ?
பேயேற் கினிநீ பேசாயே? (2)

### பேசா அனுபூதி பிறக்க அருள்

284 பேசா அனுபூ தியை அடியேன்
பெற்றுப் பிழைக்கப் பேரருளால்
தேசோ மயம்தந் தினிஒருகால்
சித்தத் திருளுந் தீர்ப்பாயோ?
பாசா டவியைக் கடந்த அன்பர்
பற்றும் அகண்டப் பரப்பான
ஈசா! பொதுவில் நடமாடும்
இறைவா! குறையா இன்னமுதே! (3)

### அன்பு வருமோ!

285 இன்பக் கடலிற் புகுந்திடுவான்
இரவும் பகலும் தோற்றுமல்,
அன்பிற் கரைந்து கரைந்துருகி,
அண்ணு! அரசே! எனக்கூவிப்,
பின்புற் றழுஞ்சேய் எனவிழிநீர்
பெருக்கிப் பெருக்கிப் பித்தாகித்
துன்பக் கடல்விட் டகல்வேனே?
சொரூபா னந்தச் சுடர்க்கொழுந்தே! (4)

### யாவும் நீ

286 கொழுந்து திகழ்வெண் பிறைச்சடிலக்
கோவே! மன்றிற் கூத்தாடற்
கெழுந்த சுடரே! இமயவரை
என்தாய் கண்ணுக் கினியானே!
தொழுந்தெய் வமும்நீ; குருவும்நீ;
துணை நீ; தந்தை தாயும்நீ;
அழுந்தும் பவம்நீ; நன்மையும்நீ;
ஆவி யாக்கை நீதானே. (5)

## கேளாதது ஏனோ ?

287 தானே அகண்டா காரமயந்
தன்னில் எழுந்து பொதுநடஞ்செய்
வானே ! மாயப் பிறப்பறுப்பான்
வந்துன் னடிக்கே கரங்கூப்பித்,
தேனே ! என்னைப் பருகவல்ல
தெள்ளா ரமுதே ! சிவலோகக்
கோனே ! எனுஞ்சொல் நினதுசெவி
கொள்ளா தென்னோ ? கூருயே. (6)

## குடும்பக் கூத்து

288 கூறு நின்ற இடர்க்கவலைக்
குடும்பக் கூத்துள் துளைந்துதடு
மாறு நின்ற பாவியைநீ
வாஎன் றழைத்தால் ஆகாதே ?
நீருர் மேனி முக்கணுடை
நிமலா ! அடியார் நினைவினிடை
ஆருய்ப் பெருகும் பெருங்கருணை
அரசே ! என்னை ஆள்வானே ? (7)

## என்னைப் படைத்துப் பெற்ற பயன் யாது ?

289 வானே முதலாம் பெரும்பூதம்
வகுத்துப், புரந்து, மாற்றவல்ல
கோனே ! என்னைப் புரக்குநெறி
குறித்தா யிலையே ! கொடியேனைத்
தானே படைத்திங் கென்னபலன்
றன்னைப் படைத்தாய் ? உன்கருத்தை
நானே தென்றிங் கறியேனே ;
நம்பி னேன்,கண் டருள்வாயே. (8)

## பணி, செய்வதும் கொள்வதும் எவ்வாறு ?

290 கண்டார் கண்ட காட்சியும்நீ ;
காணார் காணக் கள்வனும்நீ ;
பண்டா ருயிர்நீ ; யாக்கையும்நீ ;
பலவாஞ் சமயப் பகுதியும்நீ ;
எண்டோள் முக்கண் செம்மேனி
எந்தாய் ! நினக்கே எவ்வாறு
தொண்டாய்ப் பணிவர் ? அவர்பணிநீ
சூட்டிக் கொள்வ தெவ்வாறே ? (9)

## உலக வியப்பு

291 சூட்டி எனதென் றிடுஞ்சுமையைச்
சுமத்தி, எனையுஞ் சுமையாளாக்
கூட்டிப் பிடித்து, வினைவழியே
கூத்தாட் டினையே ; நினதருளால்
வீட்டைக் கருதும் அப்போது
வெளியாம் உலக வியப்பனைத்தும்
ஏட்டுக் கடங்காச் சொப்பனம்போல்
எந்தாய் ! இருந்த தென்சொல்வேன் ! (10)

## 20. வம்பனேன்

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

### கைம்மாறு காணேன் !

292 வம்பனேன் கள்ளங் கண்டும்
'மன்னருள் வெள்ள ராய
உம்பர்பால் ஏவல் செய்' யென்
றுணர்த்தினை; ஓகோ! வானோர்
தம்பிரா னே! நீ செய்த
தயவுக்கும் கைம்மாறுண்டோ?
எம்பிரான் உய்ந்தேன் உய்ந்தேன்;
இனியொன்றுங் குறைவி லேனே. (1)

### பிரிந்திரேன்

293 குறைவிலா நிறைவாய் ஞானக்
கோதில்ஆ னந்த வெள்ளத்
துறையிலே படிந்து மூழ்கித்
துளைந்துநான் தோன்று வாறுள்
ளுறையிலே யுணர்த்தி. மோன
ஒண்சுடர் வைவாள் தந்த
இறைவனே! உனைப் பிரிந்திங்
கிருக்கிலேன் இருக்கி லேனே. (2)

## எனக்கு வாழ்வுண்டோ ?

294 இருநில மாதி நாதம்
ஈறதாம் இவை கடந்த
பெருநில மாய தூய
பேரொளிப் பிழம்பாய் நின்றும்,
கருதரும் அகண்டா னந்தக்
கடவுள்! நின் காட்சி காண
'வருக'என் றழைத்தா லன்றி
வாழ்வுண்டோ ? வஞ்ச னேற்கே ! (3)

## உனக்கே பரம்

295 வஞ்சனை அழுக்கா றுதி
வைத்திடும் பாண்ட மான
நெஞ்சனை, வலிதின் மேன்மேல்
நெக்குநெக் குருகப் பண்ணி,
அஞ்சலி செய்யுங் கையும்
அருவிநீர் விழியு மாகத்
தஞ்சம்என் றிரங்கிக் காக்கத்
தற்பரா! பரம்உ னக்கே. (4)

## 'அஞ்சேல்' என்னும் நாள் எந்த நாள் ?

296 உனக்குநான் அடித்தொண் டாகி
உன்னடிக் கன்பு செய்ய,
எனக்குநீ தோற்றி அஞ்சேல்
என்னும்நாள் எந்த நாளோ ?
மனக்கிலே சங்கள் தீர்ந்த
மாதவர்க் கிரண்டற் றேங்கும்
தனக்குநேர் இல்லா ஒன்றே !
சச்சிதா னந்த வாழ்வே ! (5)

## ஊழ்வினை நீங்குமோ ?

297 வாழ்வென வயங்கி என்னை
வசஞ்செய்து மருட்டும் பாழ்த்த
ஊழ்வினைப் பகுதி கெட்டிங்
குன்னையும் கிட்டு வேனே ?
தாழ்வெனுஞ் சமயம் நீங்கித்,
தமையுணர்ந் தோர்கட் கெல்லாம்
சூழ்வெளிப் பொருளே ! முக்கட்
சோதியே ! அமரர் ஏறே ! (6)

## தாபம் நீங்க வழி

298 ஏறுவாம் பரியா, ஆடை
இருங்கலை யுரியா. என்றும்
நாறுநற் சாந்தம் நீரு,
நஞ்சமே அமுதாக் கொண்ட
கூறருங் குணத்தோய் ! உன்றன்
குரைகழல் குறுகின் அல்லால்,
ஆறுமோ தாப சோபம் ?
அகலுமோ அல்லல் தானே ? (7)

## எனக்கும் ஞானம் நல்குவாயோ ?

299 தானமும், தவமும், யோகத்
தன்மையும் உணரா என்பால்,
ஞானமும், தெவிட்டா இன்ப
நன்மையும் நல்கு வாயோ ?
பானலங் கவர்ந்த தீஞ்சொற்
பச்சிளங் கிள்ளை காண,
வானவர் இறைஞ்ச, மன்றுள்
வயங்கிய நடத்தி னனே ! (8)

## தமியேன் தளரவோ ?

300 நடத்திஇவ் வுலகை எல்லாம்
நாத! நீ நிறைந்த தன்மை
திடத்துடன் அறிந்தா னந்தத்
தெள்ளமு தருந்தி டாதே,
விடத்திர ளனைய காம
வேட்கையில் அழுந்தி, மாயைச்
சடத்தினை மெய்யென் றெண்ணித்
தள ரவோ தனிய னேனே ? (9)

## வனிதையர் மயக்கத்தில் ஆழ்ந்து வருந்தவோ ?

301 தனிவளர் பொருளே ! மாறுத்
தண்ணருங் கருணை பூத்த
இனியகற் பகமே ! முக்கண்
எந்தையே ! நினக்கன் பின்றி.
நனிபெருங் குடிலங் காட்டும்
நயனவேற் கரிய கூந்தல்
வனிதையர் மயக்கில் ஆழ்ந்து
வருந்தவோ வம்ப னேனே ? (10)

## 21. சிவன் செயல்

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

### தெளிவின்மை

302 சிவன்செய லாலே யாதும்
வருமெனத் தேறேன் ; நாளும்
அவந்தரும் நினைவை யெல்லாம்
அகற்றிலேன் ; ஆசை வெள்ளம்
கவர்ந்துகொண் டிழுப்ப, அந்தக்
கட்டிலே அகப்பட் டையோ !
பவந்தனை ஈட்டி ஈட்டிப்
பதைக்கின்றேன் பாவி யேனே. (1)

### சாவிபோம் சமயம்

303 பாவியேன் இனிஎன் செய்கேன் ?
பரமனே ! பணிந்துன் பாதம்
சேவியேன் ; விழிநீர் மல்கச்
'சிவசிவ' என்று தேம்பி,
ஆவியே ! நிறைய வந்த
அமுதமே ! என்னேன் ; அந்தோ !
சாவிபோம் சமயத் தாழ்ந்து
சகத்திடைத் தவிக்கின் றேனே. (2)

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### என்னைக் கைவிடேல்.

304 இடைந்திடைந் தேங்கி, மெய்புள கிப்ப,
எழுந்தெழுந் தைய! நின் சரணம்
அடைந்தனன் இனிநீ கைவிடேல் உனக்கே
அபயம்என் றஞ்சலி செய்துள்
உடைந்துடைந் தெழுது சித்திரப் பாவை
ஒத்துநான் அசைவற நிற்பத்
தொடர்ந்துநீ எனையாட் கொள்ளும்நாள் என்றோ?
சோதியே! ஆதிநா யகனே! (3)

### ஐம்புலக் கொடுமை

305 ஆதியாய், நடுவாய், அந்தமாய்ப், பந்தம்
யாவுமற் றகம்புறம் நிறைந்த
சோதியாய்ச், சுகமாய் இருந்தஎம் பெருமான்!
தொண்டனேன் சுகத்திலே யிருக்கப்
போதியா வண்ணம் கைவிடல் முறையோ?
புன்மையேன் எனசெய்கேன்? மனமோ
வாதியா நின்ற; தன்றியும் புலன்சேர்
வாயிலோ தீயினுங் கொடிதே. (4)

306 வாயில்ஓர் ஐந்திற் புலன்எனும் வேடர்
வந்தெனை ஈர்த்து, வெங் காமத்
தீயிலே வெதுப்பி உயிரொடுந் தின்னச்,
சிந்தைநைந் துருகி, மெய்ம் மறந்து,
தாயிலாச் சேய்போல் அலைந்தலைப் பட்டேன்?
தாயினுங் கருணையாய்! மன்றுள்
நாயக மாகி ஒளிவிடு மணியே!
நாதனே! ஞானவா ரிதியே! (5)

## என்னை மறக்க உன்னை நினைந்தேன்

307 ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடும்
நாட்டமே! நாட்டத்துள் நிறைந்த
வானமே! எனக்கு வந்துவந் தோங்கும்
மார்க்கமே! மருளர்தாம் அறியா
மோனமே! முதலே! முத்திநல் வித்தே!
முடிவிலா இன்பமே! செய்யும்
தானமே! தவமே! நின்னை நான் நினைந்தேன்,
தமியனேன் றனைமறப் பதற்கே. (6)

## பிறவியும் நன்று

308 மறமலி உலக வாழ்க்கையை வேண்டும்,
வந்துநின் அன்பர்தம் பணியாம்
அறமது கிடைக்கின்; அன்றிஆ னந்த
அற்புத நிட்டையின் நிமித்தம்
துறவது வேண்டும்; மௌனியாய் எனக்குத்
தூயநல் லருள்தரின் இன்னம்
பிறவியும் வேண்டும்: யான்என திறக்கப்
பெற்றவர் பெற்றிடும் பேறே! (7)

## கல்வி கேள்விகளின் பயன்

309 பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே!
பெருகிய கருணைவா ரிதியே!
நற்றவத் துணையே! ஆனந்தக் கடலே!
ஞாதிரு ஞானஞே யங்கள்
அற்றவர்க் கருத நட்புடைக் கலப்பே!
அனேகமாய் நின்னடிக் கன்பு
கற்றதும் கேள்வி கேட்டதும் நின்னைக்
கண்டிடும் பொருட்டன்றோ? காணே. (8)

## யான் நின் பரம்

310 அன்றுநால் வருக்கும் ஒளிநெறி காட்டும்
அன்புடைச் சோதியே! செம்பொன்
மன்றுள்முக் கண்ணுங் காளகண் டமுமாய்
வயங்கிய வானமே! என்னுள்
துன்றுகூர் இருளைத் துரந்திடும் மதியே!
துன்பமும் இன்பமும் ஆகி
நின்ற வா தனையைக் கடந்தவர் நினைவே
நேசமே! நின்பரம் யானே. (9)

## பரிபூரண நிலை

311 யானெனல் காணேன் பூரண நிறைவில்;
யாதினும் இருந்தபே ரொளிநீ
தானென நிற்குஞ் சமத்துற என்னைத்
தன்னவ ளாக்கவும் தகுங்காண்!
வானென வயங்கி, ஒன்றிரண் டென்று
மார்க்கமாம் நெறிதந்து, மாறுத்
தேனென ருசித்துள் அன்பரைக் கலந்த
செல்வமே! சிற்பர சிவமே! (10)

## 22. தன்னை யொருவர்

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

### இனியேனும் நினையாயோ!

312 தன்னை ஒருவர்க் கறிவரிதாய்த்,
தானே தானுய். எங்கும் நிறைந்
துன்னற் கரிய பரவெளியாய்,
உலவா அமுதாய், ஒளிவிளக்காய்
என்னுட் கலந்தாய்; யான் அறியா
திருந்தாய்; இறைவா! இனியேனும்
நின்னைப் பெறுமா றெனக்கருளாம்
நிலையைக் கொடுக்க நினையாயோ? (1)

### உனைமறவாத் தன்மை வருமோ!

313 நினையும் நினைவுக் கெட்டாத
நெறிபெற் றுணர்ந்த நெறியாளர்
வினையைக் கரைக்கும் பரமஇன்ப
வெள்ளப் பெருக்கே! நினதருளால்
மனைவி புதல்வர் அன்னைபிதா
மாடு வீடென் றிடும்மயக்கந்
தனையும் மறந்திங் குனைமறவாத்
தன்மை வருமோ? தமியேற்கே. (2)

## என் இதயம் யாதோ ?

314 வரும்போம் என்னும் இருநிலைமை
மன்னு தொருதன் மைத்தாகிக்,
கரும்போ, தேனே, முக்கனியோ,
என்ன என்னுட் கலந்துநலம்
தரும்பே ரின்பப் பொருளே! நின்
றன்னை நினைந்து நெக்குருகேன் ;
இரும்போ, கல்லோ, மரமோஎன்
இதயம் யாதென் றறியேனே ! (3)

## நீயும் நானும்

315 அறியுந் தரமோ ? நான்உன்னை
அறிவுக் கறிவாய் நிற்கையினல் ;
பிறியுந் தரமோ ? நீயென்னைப்
பெம்மா னே!பே ரின்பமதாய்ச்
செறியும் பொருள்நீ ; நின்னையன்றிச்
செறியாப் பொருள்நான் ; பெரும்பேற்றை
நெறிநின் றெழுக விசாரித்தால்
நினக்கோ இல்லை, எனக்காமே. (4)

## நான் விரும்புவது

316 எனதென் பதும்பொய் ; யான்எனல் பொய் ;
எல்லாம் இறந்த இடங்காட்டும்
நினதென் பதும்பொய்; நீஎனல்பொய்;
நிற்கும் நிலைக்கே நேசித்தேன்;
மனதென் பதுமோ என்வசமாய்
வாரா தைய! நின் அருளோ
தனதென் பதுக்கும் இடங்காணேன் !
தமியேன் எவ்வா றுய்வேனே ! (5)

## ஒன்றைக் கொடுத்தால் போதும்

317 உய்யும் படிக்குன் திருக்கருணை
ஒன்றைக் கொடுத்தால், உடையாய்! பாழ்ம்
பொய்யும், அவாவும், அழுக்காறும்
புடைபட் டோடும்; நன்னெறியாம்
மெய்யும், அறிவு பெறும்பேறும்
விளங்கும்; எனக்குன் அடியார்பாற்
செய்யும் பணியும் கைகூடும்;
சிந்தைத் துயரந் தீர்ந்திடுமே. (6)

## மனத் துயர்

318 சிந்தைத் துயர்என் றொருபாவி
சினந்து சினந்து போர்முயங்க,
நிந்தைக் கிடமாய்ச், சகவாழ்வை
நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன்;
எந்தப் படிஉன் அருள் வாய்க்கும்?
எனக்கெப் படிநீ அருள்செய்வாய்?
பந்தத் துயரற் றவர்க்கெளிய
பரமா னந்தப் பழம்பொருளே! (7)

## ஆசை யறல்

319 பொருளைப், பூவைப், பூவையரைப்
பொருளென் றெண்ணும் ஒருபாவி,
இருளைத் துரந்திட் டொளிநெறியை
என்னுட் பதிப்ப தென்றுகொலோ?
தெருளத் தெருள அன்பர் நெஞ்சந்
தித்தித் துருகத் தெவிட்டாத
அருளைப் பொழியுங் குணமுகிலே!
அறிவா னந்தத் தாரமுதே! (8)

## கட்டொழியும் வகை

320 ஆரா அமிர்தம் விரும்பினர்கள்
அறிய விடத்தை யமிர்தாக்கும்
பேரா னந்தச் சித்தன் எனும்
பெரியோய்! ஆவிக் குரியோய்! கேள்
காரார் கிரக வலையினிடைக்
கட்டுண் டிருந்த கலைகளெல்லாம்
ஊரால் ஒருநாள் கையுணவேற்
றுண்டால் எனக்கிங் கொழிந்திடுமே. (9)

## மதிக்குட் களங்கம்

321 எனக்கென் றிருந்த உடல்பொருளும்
யானும் நினஎன் றீந்தவண்ணம்
அனைத்தும் இருந்தும் இலவாகா
அருளாய் நில்லா தழிவழக்காய்
மனத்துட் புகுந்து மயங்கவும் என்
மதிக்குட் களங்கம் வந்ததென்னே?
தனக்கொன் றுவமை யறநிறைந்த
தனியே! தன்னந் தனிமுதலே! (10)

---

## 23. ஆசையெனும்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### ஆசையெனும் பெருங்காற்று

322 ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமனம்
அலையுங் காலம்
மோசம்வரும்; இதனாலே கற்றதும்கேட் டதும்தூர்ந்து
முத்திக் கான
நேசமும்நல் வாசமும்போய்ப், புலனாயிற் கொடுமைபற்றி
நிற்பர் அந்தோ!
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே! நிராசைஇன்றேல்
தெய்வ முண்டோ? (1)

### எது சகச நிட்டை?

323 இரப்பானங் கொருவனவன் வேண்டுவகேட் டருள்
ஏசற் றேதான் [செய்என
புரப்பான்றன் அருள் நாடி யிருப்பதுபோல்;
பொருளே! கேளாய்! [எங்கும்நிறை
மரப்பான்மை நெஞ்சினன்யான், வேண்டுவகேட்டி
மௌனத் தோடந் [ரங்கெனவே
தரப்பான்மை அருள்நிறைவில் இருப்பதுவோ பரா
சகச நிட்டை. [பரமே! (2)

கலி விருத்தம்

## மெய்யறம்

324 சாட்டையிற் பம்பர சாலம் போல்எலாம்
ஆட்டுவான் இறையென அறிந்து, நெஞ்சமே!
தேட்டமொன் றறஅருட் செயல் நிற்றியேல்
வீட்டறந் துறவறம் இரண்டும் மேன்மையே. (3)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

## என் நெஞ்சம், என்ன நெஞ்சம்?

325 தன்னெஞ்சம் நினைப்பொழியா தறிவிலிநான் ஞான
தன்மை பேச [மெனுந்
உன்னெஞ்சம் மகிழ்ந்தொருசொல் லுரைத்தனையே;
உருகேன்; ஐயா! [அதனைஉன்னி
வன்னெஞ்சோ? இரங்காத மரநெஞ்சோ? இரும்பு
வயிர மான [நெஞ்சோ?
கன்னெஞ்சோ? அலதுமண்ணுங் கட்டிநெஞ்சோ?
கருதிற் றுனே. [எனது நெஞ்சம் (4)

கலி விருத்தம்

## சோபனம்

326 வாழி சோபனம்! வாழிநல் லன்பர்கள்!
சூழ வந்தருள் தோற்றமும் சோபனம்!
ஆழி போல்அருள் ஐயன் மவுனத்தால்
ஏழை யேன்பெற்ற இன்பமும் சோபனம்! (5)

கலித்துறை

## அதுவே பரம்

327 கொடுக்கின் றோர்கள்பாற் குறைவையா
தியானெனுங் குதர்க்கம்
விடுக்கின் றோர்கள்பாற் பிரிகிலா
துள்ளன்பு விடாதே
அடுக்கின் றோர் களுக் கிரங்கிடும்;
தண்டமிழ் அலங்கல்
தொடுக்கின் றோர்களைச் சோதியா
ததுபரஞ் சோதி. (6)

கட்டளைக் கலிப்பா

## வீட்டினில் வைப்பது எக்காலம்

328 உலக மாயையி லேஎளி யேன்றனை
உழல விட்டனை யே;உடை யாய்! அருள்
இலகு பேரின்ப வீட்டினில் என்னையும்
இருத்தி வைப்பதெக் காலம்? சொ லாய்: எழில்
திலக வாணுதற் பைந்தொடி கண்ணிணை
தேக்க நாடகஞ் செய்தடி யார்க்கெலாம்
அலகி லாவினை தீர்க்கத் துசங்கட்டும்
அப்ப னே! அரு ளானந்தச் சோதியே! (7)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

## நன்னிலை இதுவே

329 'முன்னிலைச்சுட் டொழிதி' யெனப் பல்காலும்
மொழிந்தே னே; நின் [நெஞ்சே! நான்
றன்னிலையைக் காட்டாதே, என்னை ஒன்றுச் சுட்டாதே
சரண் நான் போந்த

அந்நிலையே நிலை ; அந்த நிலையிலே சித்திமுத்தி
அனைத்தும் தோன்றும் ;
நன்னிலை ஈதன்றி இல்லை ; சுகம் என்றே சுகர்முதலோர்
நாடி னாரே. (8)

## பெறும் பேறு

330 அத்துவிதம் பெறும்பேறென் றறியாமல், யான்எனும்
அகந்தை யோடு [பேய்
மத்தமதி யினர்போல மனங்கிடப்ப இன்னம்இன்னம்
வருந்து வேனோ?
சுத்தபரி பூரணமாய், நின்மலமாய் ; அகண்டிதமாய்ச்.
சொரூபா னந்தச்
சத்திகள் நீங் காதவணம் தன்மயமாய், அருள்பழுத்துத்
தழைத்த ஒன்றே ! (9)

வேறு

## மற்றொரு துணை இல்லை

331 தந்தை தாயும்நீ ; என்னுயிர்த் துணையும்நீ ;
சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவும்நீ ; உனையலால்
மற்றொரு துணைகாணேன் ;
அந்தம் ஆதியும் அளப்பெருஞ் சோதியே !
ஆதியே ! அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவன்எனும்
சிரகிரிப் பெருமானே ! (10)

## மயங்காதே நெஞ்சே!

332 காதில் ஓலையை வரைந்துமேற் குமிழையுங்
கறுவிவேள் கருநீலப்
போது போன்றிடுங் கண்ணியர் மயக்கில்எப்
போதுமே தளராமல்,

மாது காதலி பங்கனை, அபங்கனை,
மாடமா ளிகைசூழுஞ்
சேது மேவிய இராமநா யகன்றனைச்,
சிந்தைசெய் ! மடநெஞ்சே ! (11)

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

## கண்டவர் ஆர் ? கேட்டவர் ஆர் ?

333 அண்டமுமாய்ப், பிண்டமுமாய், அளவி லாத
ஆருயிருக் கோருயிராய் அமர்ந்தா யானுல்,
கண்டவர் ஆர் ? கேட்டவர் ஆர் ? உன்ஞல் உன்னைக்
காண்பதல்லால், என்ன றிவாற் காணப் போமோ?
வண்டுளப மணிமார்பன் புதல்வ னேடும்
மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப் போற்றும்
புண்டரிக புரத்தினில்நா தாந்த மௌன
போதாந்த நடம்புரியும் புனித வாழ்வே ! (12)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

## மனக் குரங்கின் தொழில்

334 பொறியிற் செறிஐம் புலக்கனியைப்
புந்திக் கவரால் புகுந்திழுத்து
மறுகிச் சுழலும் மனக்குரங்கு
மாள வாளா இருப்பேனே !
அறிவுக் கறிவாய்ப், பூரணமாய்,
அகண்டா னந்த மயமாகிப்,
பிறிவற் றிருக்கும் பெருங்கருணைப்
பெம்மா னே! எம் பெருமானே ! (13)

வேறு

## சித்தந் தெளிவேனே!

335 உரையுணர் விறந்து, தம்மை உணர்பவர் உணர்வி
னூடே
கரையிலா இன்ப வெள்ளம் காட்டிடு முகிலே! மாருப்
பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே! நின்னைப்
பற்றித்
திரையிலா நீர்போற் சித்தந் தெளிவனே? சிறிய
னேனே. (14)

## குரு செய்த அருள்

336 கேவல சகலம் இன்றிக், கீழொடு மேலாய், எங்கும்
மேவிய அருளின் கண்ணய் மேவிட, மேலாய் இன்பம்
தாவிட இன்பா தீதத் தனியிடை இருத்தி வைத்த
தேவெனும் மௌனி செம்பொற் சேவடி சிந்தை
செய்வாம். (15)

## யாக்கை நிலையாமை

337 நேற்றுளர் இன்று மாளா நின்றனர்; அதனைக் கண்டும்
போற்றிலேன் நின்னை; அந்தோ! போக்கினேன்
வீணே காலம்;
ஆற்றிலேன்; அகண்டா னந்த அண்ணலே! அளவில்
மாயைச்
சேற்றிலே இன்னம் வீழ்ந்து திளைக்கவோ?
சிறியனேனே! (16)

கலிநிலைத்துறை

## அறிவும் அறியாமையும்

338 போத மென்பதே விளக்கொவ்வும்; அவித்தைபொய்
தீதி லாவிளக் கெடுத்திருள் தேடவும் சிக்கா [யிருளாம்
தாத லால், " அறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லை " என் றெம்பிரான் சுருதியே யியம்பும். (17

## நூல்களே சொன்மின்

339 சுருதி யே! சிவா கமங்களே! உங்களாற் சொல்லும்
ஒருத னிப்பொருள் அளவைஈ தென்னவாய்உண்டோ?
பொருதி ரைக்கடல் நுண்மணல் எண்ணினும், புகலக்
கருத எட்டிடா நிறைபொருள் அளவையார்
காண்பார்? (18)

## என்னைப்போலும் ஏழையர் யாவர்?

340 மின்னைப் போன்றன அகிலம்என் றறிந்து,மெய்ப்
பொருளாம்
உன்னைப் போன்றநற் பரம்பொருள் இல்லைஎன்
றோர்ந்து,
பொன்னைப் போன்றநின் போதங்கொண் டுன்பணி
பொருந்தா
என்னைப் போன்றுள ஏழையர் ஐய! இங் கெவரே? (19)

## உண்மைச் சுற்றம்

341 தாயும் தந்தையும் எனக்குற வாவதும் சாற்றின்,
ஆயும் நீயும்நின் அருளும்நின் அடியரும் அன்றோ?
பேய னேன்திரு வடியிணைத் தாமரை பிடித்தேன்;
நாய னே!எனை ஆளுடை முக்கண்நா யகனே! (20)

## அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

### அசையா நிலை

342 காந்தமதை எதிர்காணிற் கருந்தாது செல்லும்; அந்தக் காந்தத் தொன்ரு
தேய்ந்தவிடம் எங்கேதான் அங்கேதான் சலிப்பறவும் இருக்கு மாபோல்,
சாந்தபதப் பரம்பொருளே பற்றுபொருள் இருக்கும் சலிக்கும் சித்தம் ; [அத்தால்
வாய்ந்தபொருள் இல்லையெனிற் பேசாமை நின்றநிலை வாய்க்கும் அன்றே. (21)

## கலிநிலைத்துறை

### இந்த வினை வந்தது எவ்வாறு ?

343 பொற்பு றுங்கருத் தேசுக மாய் அதிற் பொருந்தக்,
கற்பின் மங்கைய ரென. விழி கதவுபோற் கவினச்,
சொற்ப னத்தினுஞ் சோர்வின்றி இருந்தநான் சோர்ந்து
நிற்ப தற்கிந்த வினைவந்த வாறென்கொல்? நிமலா!

### இனி எவ்வாறு உய்வேன் ?

344 வந்தவா றிந்த வினை.வழி இதுஎன மதிக்கத்
தந்தவா றுண்டோ? உள்ளுணர் விலை ; அன்றித் தமியேன்
நொந்த வாறுகண் டிரங்கவும் இலை ;கற்ற நூலால்
எந்த வாறினித் தற்பரா! உய்குவேன் ஏழை! (23)

## எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

### அருள்நெறிச் சிறப்பு

345 சொல்லாலும், பொருளாலும், அளவை யாலும்
தொடரவொண்ணு அருள்நெறியைத் தொடர்ந்து
நல்லார்கள் அவையகத்தே இருக்க வைத்தாய்; [நாடி
நன்னர்நெஞ்சந் தன்னலமும் நணுகு வேனே?
இல்லாளி யாய்உலகோ டுயிரை யீன்றிட்
டெண்ணரிய யோகினுக்கும் இவனே யென்னக்,
கல்லாலின் கீழிருந்த செக்கர் மேனிக்
கற்பகமே! பராபரமே! கயிலை வாழ்வே! (24)

### அஞ்சவத்தை

346 சாக்கிரமாம் நுதலினில்இந் திரியம் பத்தும்,
சத்தாதி, வசனுதி, வாயு பத்தும்,
நீக்கமில்அந் தக்கரணம், புருட னேடு
நின்றமுப் பானைந்தும்; நிலவும்; கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயுப் பத்தும்;
அடுத்தனசத் தாதிவச னுதி யாக
நோக்குகர ணம்புருட னுடனேகூட
நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணி யோரே. (25)

347 சுழுத்திஇத யந்தனிற்பி ராணன், சித்தம்,
சொல்லரிய புருடனுடன் மூன்ற தாகும்;
வழுத்தியாநா பியில்துரியம்; பிராண னேடு
மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்;
அழுத்திடுமூ லந்தன்னில் துரியா தீதம்;
அதனிடையே புருடன்ஒன்றி அமரும் ஞானம்
பழுத்திடும்பக் குவரறிவர் அவத்தை ஐந்திற்
பாங்குபெறக் கருவி நிற்கும் பரிசுதானே. (26)

## கலிநிலைத்துறை

### அன்பர் மடத்தின் சேடத்திற்கு ஆசை

348 'இடத்தைக் காத்திட்ட சுவாஎனப்' புன்புலால் இறைச்சிச்
சடத்தைக்காத்திட்ட நாயினேன், உன் அன்பர்தயங்கும்
மடத்தைக் காத்திட்ட சேடத்தால் விசேடமாய் வாழ,
விடத்தைக்காத்திட்ட கண்டத்தோய் ! நின்னருள் வேண்டும். (27)

### காரண காரியம்

349 வாதனைப்பழக் கத்தினுன் மனம்; அந்த மனத்தால்
ஓத வந்திடும் உரை;உரைப் படிதொழில் உளவாம் ;
ஏதம் அம்மன மாயைஎன் றிடிற், கண்ட எல்லாம்
ஆத ரஞ்செயாப் பொய் ; அதற் கையம்உண் டாமோ?

### பெரியோர் துணை

350 ஐய! வாதனைப் பழக்கமே மனநினை வதுதான் ;
வைய மீதினிற் பரம்பரை யாதினும் மருவும் ;
மெய்யில் நின்றொளிர் பெரியவர் சார்வுற்று விளங்கிப்,
பொய்ய தென்பதை ஒருவி, மெய் உணருதல் போதம்.

### சிவன் எனத் தகுவோன்

351 குலம்இ லான்,குணம் குறிஇலான், குறைவிலான், கொடிதாம்
புலம்இ லான்,தனக் கென்னஓர் பற்றிலான் பொருந்தும்
இலம்இ லான்மைந்தர் மனைவி இல் லான்,எவன்? அவன்சஞ்
சலம்இ லான், முத்தி தரும்பர சிவன்எனத் தகுமே.

பொய், எப்பொழுதும் பொய்யே.

352 கடத்தை மண்ணெனல் உடைந்தபோதோ? இந்தக் கருமச்
சடத்தைப் பொய்யெனல் இறந்தபோதோ? சொலத் தருமம்;
விடத்தை நல்லமிர் தாஉண்டு, பொற்பொது வெளிக்கே
நடத்தைக் காட்டி,எவ் வுயிரையும் நடிப்பிக்கும் நலத்தோய்! (31)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

மீட்டும் அதுவே

353 நானெனவும் நீஎனவும் இருதன்மை நாடாமல், நடுவே சும்மா
தானமரும் நிலைஇதுவே சத்தியம்சத் தியம்எனநீ தமிய னேற்கு
மோனகுரு வாகியும்கை காட்டினையே! திரும்பவும்நான் முளைத்துத் தோன்றி,
மானதமார்க் கம்புரிந்திங் கலைந்தேனே! பரந்தேனே! வஞ்ச னேனே. (32)

வேறு

தென்முகக்கடவுள் சிறப்பு

354 தன்மயஞ் சுபாவம், சுத்தம் தண்ணருள் வடிவம் சாந்
மின்மய மான ஆண்ட வெளியுரு வான பூர்த்தி. [தம்.
என்மயம் எனக்குக் காட்டா தெனை அப கரிக்கவந்த
சின்மயம் அகண்டா காரம்; தெட்சிண திக்க மூர்த்தம்.

கலிநிலைத் துறை

## வரன் என்னும் வைப்பிற்கு வித்தாவான்

355 சிற்ற ரும்பன சிற்றறி வாளனே தெளிந்தால்,
மற்ற ரும்பென மலரெனப் பேரறி வாகிக்,
கற்ற ரும்பிய கேள்வியான் மதித்திடக் கதிச்சீர்
முற்ற ரும்பிய மௌனியாய்ப் பரத்திடை முளைப்பான்.

356 மயக்கு சிந்தனை தெளிவென இருநெறி வகுப்பால்
நயக்கும் ஒன்றன்பால் ஒன்றிலை எனல்நல வழக்கே
இயக்க முற்றிடு மயக்கத்தில் தெளிவுறல் இனிதாம்;
பயக்க வல்லதோர் தெளிவுடை யவர்க்கெய்தல்
பண்போ! (35)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

## தொழும் தெய்வம் எல்லாம் ஒன்றே.

357 அருள்வடி வேமு மூர்த்தம்;
அவைகள்சோ பான மென்றே
சுருதிசொல் லியவாற் றுலே
தொழுந்தெய்வம் எல்லாம் ஒன்றே;
மருளெனக் கில்லை முன்பின்
வருநெறிக் கிவ்வ ழக்குத்
தெருளின்முன் னிலையாம் உன்னைச்
சேர்ந்தியான் தெளிகின் றேனே. (36)

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

## இனி ஆற்றேன்

358 எத்தனைப் பிறப்போ? எத்தனை இறப்போ?
எளியனேற் கிதுவரை அமைத்த
தத்தனை யெல்லம் அறிந்தநீ அறிவை;
அறிவிலி அறிகிலேன்; அந்தோ!

சித்தமும் வாக்கும் தேகமும் நினவே ;
சென்மமும் இனியெனல் ஆற்ரு ;
வைத்திடிங் கென்னை நின்னடிக் குடியா ;
மறைமுடி இருந்தவான் பொருளே ! (37)

## இருவினை வாதனை

359 வான்பொரு ளாகி எங்கும்நீ இருப்ப,
வந்தெனைக் கொடுத்துநீ யாகா
தேன்பொருள் போலக் கிடக்கின்றேன் ? முன்னை
இருவினை வாதனை யன்ரு ?
தின்பொரு ளான அமிர்தமே ! நின்னைச்
சிந்தையிற் பாவனை.செய்யும்
நான்பொரு ளானேன் அல்லன் நல் லரசே !
நானிறந் திருப்பது நாட்டம். (38)

## உண்டும் உறங்கேன்

360 நாட்டம்மூன் றுடைய செந்நிற மணியே !
நடுவுறு நாயக விளக்கே !
கோட்டம்இல் குணத்தோர்க் கெளியநிர்க் குணமே !
கோதிலா அமிர்தமே! நின்னை
வாட்டமில் நெஞ்சம் கிண்ணமாச் சேர்த்து
வாய்மடுத் தருந்தினன் ஆங்கே ;
பாட்டளி நறவம் உண்டயர்ந் ததுபோற்
பற்றயர்ந் திருப்பதெந் நாளோ ! (39)

## வேண்டும் வரம்

361 என்னுடை உயிரே ! என்னுளத் தறிவே !
என்னுடை அன்பெனும் நெறியாய் !
கன்னல்முக் கனிதேன் கண்டமிர் தென்னக்
கலந்தெனை மேவிடக் கருணை

மன்னிய உறவே! உன்னை நான் பிரியா
வண்ணம்என் மனமெனுங் கருவி
தன்னது வழிஅற் றென்னுழைக் கிடப்பத்
தண்ணருள் வரமது வேண்டும். (40)

---

# 24. எனக்கெனச் செயல்

கலிநிலைத் துறை

நீ நினைத்தபடி செய்

362 எனக்கெ னச்செயல் வேறிலை; யாவும்இங் கொருநின்
தனக்கெ னத்தகும்; உடல்பொருள் ஆவியும் தந்தேன்;
மனத்த கத்துள அழுக்கெலாம் மாற்றி,எம் பிரான்நீ
நினைத்த தெப்படி அப்படி யருளுதல் நீதம். (1)

யாரிடம் சொல்வேன்!

363 உளவ றிந்தெலாம் நின்செய லாம்என உணர்ந்தோர்க்
களவில் ஆனந்தம் அளித்தனை; அறிவிலாப் புன்மைக்
களவு நாயினேற் கிவ்வண்ணம் அமைத்தனை; கருத்துத்
தளருந் தன்மைஇங் காரொடும் புகலுவேன்? தக்கோய்!

ஏழைக்கு இரங்கு

364 என்னைத் தான்இன்ன வண்ணமென் றறிகிலா ஏழை
தன்னைத் தான்அறிந் திடஅருள் புரிதியேல் தக்கோய்!
பின்னைத் தான்நின்றன் அருள்பெற்ற மாதவப் பெரியோர்
நின்னைத் தான்நிகர் ஆர்என வாழ்த்துவர் நெறியால்.

அன்பே வழி

365 ஏதம் இன்றித்தன் அடியிணைக் கன்புதான் ஈட்டும்
காதல் அன்பர்க்குக் கதிநிலை ஈதெனக் காட்டும்

போத! நித்திய! புண்ணிய! எண்ணரும் புவன
நாத! தற்பர! நான்எவ்வா றுய்குவேன்? நவிலாய்! (4)

## உன்னையன்றி ஒன்றையும் நினையேன்

366 வேதம் எத்தனை அத்தனை சிரத்தினும் விளங்கும்
பாத! நித்திய! பரம்பர! நிரந்தர! பரம!
நாத! தற்பர! சிற்பர வடிவமாய் நடிக்கும்
நீத! நிர்க்குண! நினையன்றி ஒன்றும்நான் நினையேன்.

## சமயத் தடைகள்

367 நெறிகள் தாம்பல பலவுமாய், அந்தந்த நெறிக்காம்
செறியும் தெய்வமும் பலபல வாகவும் செறிந்தால்,
அறியுந் தன்மைஇங் கார்உனை? அறிவினால்அறிந்தோர்
பிறியுந் தன்மைஇல் லாவகை கலக்கின்ற பெரியோய்!

## எனக்கு அமைத்தது இதுவோ !

368 பெரிய அண்டங்கள் எத்தனை அமைத்து, அதிற் பிறங்கும்
உரிய பல்லுயிர் எத்தனை அமைத்து, அவைக் குறுதி
வருவ தெத்தனை அமைத்தனை? அமைத்தருள்வளர்க்கும்
அரிய தத்துவ! எனக்கிந்த வண்ணம்ஏன் அமைத்தாய்? (7)

## உன்னைத் தடுப்பவர் இல்லை.

369 கணம தேனும்நின் காரணந் தன்னையே கருத்தில்
உணரு மாதவர்க் கானந்தம் உதவினை; ஒன்றும்
குணம்இலாதபொய்வஞ்சனுக்கெந்தை! நிர்க்குண! மாம்
மணம் உலாமலர்ப் பதந்தரின் உன்னையார் மறுப்பார்?

## கைம்மாறு காணேன்

370 கன்னல், முக்கனி, கண்டு, தேன், சருக்கரை கலந்த
தென்ன, முத்தியிற் கலந்தவர்க் கின்பமாய் இருக்கும்
நன்ன லத்தநின் நற்பதந் துணையென நம்பச்
சொன்ன வர்க்கென்னால் ஆம்கைம்மா றில்லை;என்
சொல்வேன்! (9)

## உலக பந்தம்

371 "தந்தை தாய்தமர் மகவெனும் அவையெலாம் சகத்தில்
பந்த மாம்''என்றே அருமறை வாயினாற் பகர்ந்த;
எந்தை நீஎனை இன்னம்அவ் அல்லலில் இருத்தின்,
சிந்தை தான்தெளிந் தெவ்வணம் உய்வணம்?
செப்பாய்! (10)

## அடைந்த என்னைப் புறம்விடல் ஆகாது.

372 துய்யன், தண்ணருள் வடிவினன், பொறுமையால்
துலங்கும்
மெய்யன் என்றுனை ஐயனே! அடைந்தனன்; மெத்த
நொய்யன், நுண்ணிய அறிவிலன், ஒன்றைநூ றாக்கும்
பொய்யன் என்றெனைப் புறம்விடின் என்செய்வேன்?
புகலாய்! (11)

## மனம் மன்ற மாருக.

373 ஒன்ற தாய்ப், பல வாய், உயிர்த் திரட்கெலாம் உறுதி
என்ற தாய், என்று முள்ளதாய், எவற்றினும் இசைய
நின்ற தாய் நிலை நின்றிடும் அறிஞ! என் நெஞ்சம்
மன்ற தாய்இன்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்.

## இனி இரங்குதல் கடன்

374 தனிஇருந்தருட் சகசமே பொருந்திடத் தமியேற்
கினிஇரங்குதல் கடன்; இது சமயம்; என் இதயக்
கனிவும் அப்படி யாயின; தாதலாற் கருணைப்
புனித! நீஅறி யாததொன் றுள்ளதோ? புகலாய்! (13)

## நல்ல நாளும் தீய நாளும்

375 திருந்து சீரடித் தாமரைக் கன்புதான் செய்யப்
பொருந்து நாள் நல்ல புண்ணியம் செய்யுநாள் ; பொருந்தா
திருந்த நாள்வெகு தீவினை இழைத்தநாள் என்றால்
அருந்த வா!உனைப் பொருந்தும்நாள் எந்தநாள், அடிமை? (14)

## இன்னும் இந்த நிலை ஏன் ?

376 பின்னும் முன்னுமாய், நடுவுமாய், யாவினும் பெரிய
தென்னுந் தன்மையாய், எவ்வுயிர்த் திரளையும் இயக்கி
மன்னும் தண்ணருள் வடிவமே! உனக்கன்பு வைத்தும்
துன்னும் இன்னல்ஏன்? யான்எனும் அகந்தைஏன்? சொல்லாய். (15)

## உன்னை மறந்தால் உய்தல் கூடுமோ ?

377 'மின்னை அன்னபொய் வாழ்க்கை'யே நிலையென. மெய்யாம்
உன்னை நான்மறந்தெவ்வணம்உய்வணம்?உரையாய்!
முன்னை வல்வினை வேரற முடித்தென்றும் முடியாத்
தன்னைத் தன்அடி யார்க்கருள் புரிந்திடும் தக்கோய்!

## உன் பாதத்தையே நம்பினேன்

378 எம்ப ராபர! எம்உயிர்த் துணைவ! என் றிறைஞ்சும்
உம்பர் இம்பர்க்கும் உளக்கணே நடிக்கின்றாய்: உன்றன்
அம்பொன் மாமலர்ப் பதத்தையே துணை என அடிமை
நம்பி னேன் இனிப் புரப்பதெக் காலமோ ? நவிலாய்!

## இனி என் செய்வேன் ?

379 பாடி, ஆடி, நின் றிரங்கி, நின் பதமலர் முடிமேல்
சூடி வாழ்ந்தனர், அமல! நின் அடியர்; யான்
தொழும்பன்
நாடி யே இந்த உலகத்தை மெய்யென நம்பித்
தேடி னேன் வெறுந் தீமையே; என்னினிச் செய்வேன்?

## உளவு சொல்லின், வாழ்வேன்.

380 களவு, வஞ்சனை, காமம் என் றிவையெலாங் காட்டும்
அளவு மாயை இங் காரெனக் கமைத்தனர் ? ஐயா !
உளவி லேஎனக் குள்ளவா றுணர்த்தின், உன் னடிமை
வளரும் மாமதி போல்மதி தளர்வின்றி வாழ்வேன். (19)

## மனம் வாடவோ ?

381 வான நாயக! வானவர் நாயக! வளங்கூர்
ஞான நாயக! நான்மறை நாயக! நலஞ்சேர்
மோன நாயக! நின்னடிக் கன்பின்றி முற்றும்
தீன ளுய் அகம் வாடவோ? என்செய்வேன்? செப்பாய்!

## மனம் கோயிலாகுமோ !

382 ஏதம் அற்றவர்க் கின்பமே பொழிகின்ற இறையே!
பாத கக்கருங் கல்மனம் கோயிலாப் பரிந்து,

சூத கத்தனுய் யாதினும் இச்சைமேல் தோன்றும்
வாத ஊக்கிடம் ஆயினேன்; எவ்வணம் வாழ்வேன்?

## திருவருட்கு அயலான்

383 தெளிவோ டைகையோ அறிகிலான், அறிவிலான், சிறிதும்
அளியி லான்; இவன் திருவருட் கயலென அறிந்தோ
எளியன் ஆக்கினை? என்செய்வேன்! என்செய்வேன்!
எல்லா
ஒளியு மாய், நிறை வெளியுமாய் யாவுமாம் உரவோய்!

## அருள் வரும் நாள் எந்த நாள்?

384 'கண்ணி னுள்மணி' என்னவே தொழும்அன்பர்
கருத்துள்
நண்ணு கின்றநின் அருள்எனக் கெந்தநாள் நணுகும்?
மண்ணும், விண்ணும், மற் றுள்ளன பூதமும், மாருப்
பெண்ணும் ஆணுமாய், அல்லவாய் நிற்கின்ற
பெரியோய்! (23)

## என்னைப் பிறப்பித்தது ஏன்?

385 சகமெ லாந்தனி புரந்தனே; தகவுடைத் தக்கோர்
அகமெலாம் நிறைந் தானந்த மாயினை; அளவில்
மகமெ லாம்புரிந் தோரைவாழ் வித்தனே; மாரு
இகமெ லாம்எனைப் பிறந்திடச் செய்ததேன்? எந்தாய்!

## அருள் பெற்றவர்க்கு ஏவல் செய்ய அருள்.

386 ஏய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலாய், எளியேன்
வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணை நீ வளர்ப்பாய்!

ஆய்ந்த மாமறை எத்தனை அத்தனை அறிவால்
தோய்ந்த பேர்கட்கும் தோன்றிலாத் தோன்றலாந்
தூயோய்! (25)

## குடும்பக் கட்டு

387 தக்க நின்னருட் கேள்வியோ சிறிதின்றித், தமியேன்
மிக்க தெய்வமே! நின் இன்ப வெள்ளத்தில் வீழேன்;
ஒக்கல் தாய்தந்தை மகவெனும் பாசக்கட் டுடனே
துக்க வெள்ளத்தில் ஆழ்கின்றேன்; என்செய்வான்
துணிந்தேன்? (26)

## அருள்நிலை பதிய அருள்.

388 பவம்பு ரிந்திடும் பாவியேற் கருள் நிலை பதியத்
தவம்செ யும்படி தயவுசெய் தருள்வதே தருமம்;
அவம்பு ரிந்திடார்க் கானந்த அமிர்தத்தை அளிக்க
நவங்கொள் தத்துவத் திரையெறி கடலெனும்
நலத்தோய்! (27)

## முதலுக்கே மோசம்.

389 உற்று ணர்ந்தெலாம் நீஅல தில்லைஎன் றுனையே
பற்று கின்றனர்; எந்தை! நின் அன்பர், யான் பாவி
முற்று மாயமாஞ் சுகத்தையே மெய்யென 'முதல்தான்
அற்றி ருந்திடத் தொழில்செய்வான் றனை' நிக
ரானேன். (28)

---

# 25 மண்டலத்தின்

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

## பரம் பொருள் இயல்பு

390 மண்டலத்தின் மிசைஒருவன் செய்தவித்தை அகோ
வார ஞதி [எனவும்,
அண்டமவை அடுக்கடுக்காய் அந்தரத்தில் நிறுத்தும்
தானம் போல, [அவ
எண்டருநல் லகிலாண்ட கோடியைத்தன் அருள்
இலக வைத்துக் [வெளியில்
கொண்டுநின்ற அற்புதத்தை, எவராலும் நிச்சயிக்கக்
கூடா வொன்றை, (1)

391 ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந்தேழாம்
யோக பூமி
நின்று தெளிந் தவர்பேசா மௌனநியா யத்தை, நிறை
நிறைவைத், தன்னை
யன்றிஒரு பொருளிலதா எப்பொருட்கும்தான்முதலாய்,
அசல மாகி,
என்றுமுள இன்பத்தைத், தண்ணென்ற சாந்தபத
இயற்கை தன்னை, (2)

392 பதமூன்றுங் கடந்தவர்க்கு மேலான ஞானபதப்
பரிசு காட்டிச்,
சதமாகி, நிராலம்ப சாட்சியதாய், ஆரம்பத்
தன்மை யாகி,

விதம்யாவுங் கடந்தவித்தை எனும்இருளைக் கீண்
விமல மாகி, [டெழுந்து
மதம்ஆறும் காணாத ஆனந்த சாகரத்தை,
மௌன வாழ்வை, (3)

393 வாழ்வனைத்துந் தந்தஇன்ப மாகடலை, நல்லமிர்தை,
மணியைப், பொன்னைத்,
தாழ்வறஎன் உளத்திருந்த தத்துவத்தை, அத்துவித
சாரந் தன்னைச்,
சூழ்பெரும்பே ரொளியை,ஒளி பரந்தபர வெளியை,
சுகத்தை, மாறு [இன்பச்
தேழுலகுங் கலந்தின்றாய், நாளையாய், என்றுமாம்
இயற்கை தன்னை, (4)

394 தன்னை அறிந் தவர்தம்மைத் தானகச் செய்தருளுஞ்
சமத்தை, லோகம்
மின்னை நிகர்த் திடஅழியாச் சொருபானந் தச்சுடரை,
வேத மாதி
என்னையறி வரிதென்னச் சமயகோ டிகளிடைய
இடைய ருத
பொன்னை,விரித் திடும்உலகத் தும்பரும்இம் பரும்
புனித மெய்யை, [பரவும்

395 பரவரிய பரசிவமாய், அதுஎனலாய், நான்எனலாய்ப்,
பாச சாலம்
விரவி நின்ற விசித்திரத்தை, ஐக்யபதத் தினிதிருந்த
விவேகந் தன்னை,
இரவுபகல் நினைப்புமறப் பெனுந்தொ ந்தம் அறியார்கள்
இதயம் வேதச்
சிரமெனவாழ் பராபரத்தை, ஆனந்தம் நீங்காத
சிதாகா சத்தை, (6)

396 அத்துவித அனுபவத்தை, அனந்தமறை இன்னம்
அறியேம் என்னும் [இன்னம்
நித்தியத்தை, நிராமயத்தை, நிர்க்குணத்தைத்
நினைவுக் குள்ளே [தன்னருளால்
வைத்துவைத்துப் பார்ப்பவரைத் தானாக எந்நாளும்
வளர்த்துக் காக்கும்
சித்தினை,மாத் தூவெளியைத், தன்மயமாம் ஆனந்தத்
தெய்வந் தன்னை, (7)

## துன்மனம், நன்மனமானால்....

397 தன்னிலே தானாக நினைந்துகனிந் தமிழ்ந்துசுக
சமாதி யாகப்
பொன்னிலே பணிபோலும் மாயைதரு மனமே! உன்
புரைகள் தீர்ந்தாய்
என்னிலோ யான்பிழைப்பேன் : எனக்கினியார் உன்
இல்லை யில்லை! [போல்வார்
உன்னிலோ திருவருளுக் கொப்பாவாய்; என்உயிர்க்
உறவு மாவாய். [கோர்

398 உறவுடலை எடுத்தவரிற் பிரமாதி யேனும்உனை
ஒழிந்து தள்ளற்
கறவும்அரி தரிதன்றோ! இகபரமும் உன்னையன்றி
ஆவது துண்டோ!
வறிதிலுன்னை அசத்தென்னல் வழக்கன்று; சத்தெனவும்
வாழ்த்து வேன்;என்
சிறுமைகெடப் பெருமையின்நின் சென்மதே யத்தினிநீ
செல்லல் வேண்டும். (9)

## மனம் இறந்தால் வரும் நன்மை

399 வேண்டியநாள் என்னோடும் பழகியநீ எனைப்பிரிந்த
விசாரத் தாலே
மாண்டுகிடக் கினும்அந்த எல்லையையும் பூரணமா
வணக்கஞ் செய்வேன்;
ஆண்டகுரு மௌனிதன்னால் யான்எனதற்
றவேன் பூவிற் [றவனருள்நா
காண்டகஎண் சித்திமுத்தி எனக்குண்டாம்; உன்னால்
கவலை தீர்வேன், [என்

400 தீராத என்செனன வழக்கெல்லாந் தீரும்இந்தச்
செனனத் தோடே;
யாரேனும் அறிவரிய சீவன்முத்தி உண்டாகும்;
ஐய! ஐயோ!
காரேனும் கற்பகப்பூங் காவேனும் உனக்குவமை
காட்டப் போமோ!
பாராதி யாகஎழு மண்டலத்தில் நின்மகிமை
பகர லாமோ! (11)

---

## 26. பாயப் புலி

கட்டளைக் கலித்துறை

401 பாயப் புலிமுனம் மான்கன்றைக்
காட்டும் படி, அகில
மாயைப் பெரும்படைக் கேஇலக்
காளனை வைத்தனையோ?
நீயெப் படிவகுத் தாலும் நன்
றே; நின் பெருங்கருணை
தாயொத் தடியர்க் கருள்சச்சி
தானந்தத் தற்பரமே! (1)

402 தற்பர மாம்சிற் பரமாகி
மன்றந் தனில்நடித்து
நிற்பர், அம் போருகன் மால்பணி
நீதர்; என்நெஞ்சகமாங்
கற்பரந் தாங்குக் கரைந்திட
வாஞெத்த காட்சிநல்கும்
பொற்பர மாய்என் வினைக்கருந்
தாதைப் பொடிசெய்ததே. (2)

403 செய்யும் தவஞ்சற்றும் இல்லாத
நான், உன் திருவடிக்கே
கொய்யும் புதுமலர் இட்டு, மெய்
யன்பர் குழாத்துடனே

கையும் சிரமிசைக் கூப்பி, நின்
ருடிக் கசிந்துருகி
உய்யும் படிக்கருள் செய்வதென்
ரே? புலியூர்அத்தனே! (3)

404 அத்தனைச், சிற்றம் பலவனை,
என்னுயி ராகிநின்ற
சுத்தனைச், சுத்த வெளியா
னவனைச், சுகவடிவாம்
நித்தனை, நித்த நிராதார
மாகிய நின்மலனை,
எத்தனை நாள்செல்லு மோ? மன
மே!கண் டிறைஞ்சுதற்கே. (4)

405 கண்டார் உளத்தினிற் கால்ஊன்றிப்
பெய்யுங் கருணைமுகில்
அண்டார் புரத்துக்கும் அன்பர்
வினைக்கும் அசனிதன்னைக்
கொண்டாடி னர்முனங் கூத்தாடும்
அத்தன்றன் கோலமெல்லாம்
விண்டால்அம் மா!ஒன்றுங் காணது;
வெட்ட வெறுவெளியே. (5)

406 வெளியான நீயென் மனவெளி
யூடு விரவின்.ஐயா!
ஒளியாருங் கண்ணும் இரவியும்
போல்நின் றுலாவுவன்காண்;
அளியாருங் கொன்றைச் சடைஆட,
அம்புலி ஆடக்.கங்கைத்
துளிஆட, மன்றுள் நடமாடும்
முக்கட் சுடர்க்கொழுந்தே! (6)

407 கொழுந்தா துறைமலர்க் கோதையர்
மோகக் குரைகடலில்
அழுந்தாத வண்ணம் நின் பாதப்
புணைதந் தருள்வதென்றோ?
எழுந்தா தரவுசெய் எம்பெருமான்! என்
றிறைஞ்சி விண்ணோர்
தொழுந்தாதை யே!வெண் பொடிபூத்த
மேனிச் சுகப்பொருளே! (7)

408 சுகமாகும் ஞானம் திருமேனி
யா நல்ல தொண்டர்தங்கள்
அகமேபோற் கோயில் எனமகிழ்ந்
தேமன்று ளாடியகற்
பகமே!உன் பொன்னடி நீழல்கண்
டாலன்றிப் பாவிக்கிந்தச்
செகமாயை யானஅ ருங்கோடை
நீங்கும் திறமிலையே. (8)

409 நீங்கா துயிருக் குயிராகி
நின்ற நினை அறிந்தே
தூங்காமல் தூங்கின் அல் லாதே
எனக்குச் சுகமும்உண்டோ?
ஓங்கார மாம்ஐந் தெழுத்தாற்
புவனத்தை உண்டுபண்ணிப்,
பாங்கா நடத்தும் பொருளே!
அகண்ட பரசிவமே.! (9)

410 சிவமாதி நான்முகக் கோஅந்த
மாமறை செப்புகின்ற
நவமாய் இலங்கிய ஒன்றே!
இரண்டற்ற நன்மைபெரு

தவமே தரும்ஐம் புலப்பொறிக்
கேஎன் அறிவுபொல்லாப்
பவமே விளைக்கஎன் றேவெளி
மான்எனப் பாய்ந்ததுவே. (10)

411 ஆறெத் திலங்கு சமயங்கள்
ஆறுக்கும் ஆழ்கடலாய்
வீறிப் பரந்த பரமான
ஆனந்த வெள்ளம்ஒன்று
தேறித் தெளிந்து நிலைபெற்ற
மாதவர் சித்தத்திலே
ஊறிப் பரந்தண்ட கோடிஎல்
லாம்நின் றுலாவியதே. (11)

412 நடக்கினும், ஓடினும், நிற்கினும்,
வேறொரு நாட்டமின்றிக்
கிடக்கினும், செவ்வி திருக்கினும்,
நல்லருட் கேள்வியிலே
தொடக்கும்என் நெஞ்சம்; மனமற்ற
பூரணத் தொட்டிற்குளே
முடக்குவன் யான்;பர
மானந்த நித்திரை மூடிடுமே. (12)

413 எண்ணாத தெண்ணிய நெஞ்சே!
துயர் ஒழி; என் இரண்டு
கண்ணே! உறங்குக என் ஆணை;
முக்கட் கருணைப்பிரான்
தண்ணார் கருணை மௌனத்தி
னான்முத்தி சாதிக்கலாம்;
நண்ணாத தொன்றில்லை; எல்லா
நலமும் நமக்குளவே. (13)

414 நானென் றொருமுதல் உண்டென்ற
நான்தலை நாண, என்னுள்
தானென் றொருமுதல் பூரண
மாகத் தலைப்பட்டொப்பில்
ஆனந்தந் தந்தென் அறிவையெல்
லாம்உண் டவசம்நல்கி,
மோனந் தனைவிளைத் தால்இனி
யாது மொழிகுவதே? (14)

415 தானம் தவம்சற்றும் இல்லாத
நான்உண்மை தான்அறிந்து,
மோனம் பொருள்எனக் கண்டிடச்
சற்குரு மோனனுமாய்த்
தீனன் றனக்கிங் கிரங்கினை
யே! இனிச் சிந்தைக்கென்றும்
ஆனந்தந் தான்அல்லவோ? பர
மே!சச்சி தானந்தமே! (15)

416 எனக்கோர் சுதந்திரம் இல்லை அப்
பா!எனக் கெய்ப்பில்வைப்பாய்
மனக்கோ தகற்றும் பரம்பொரு
ளே! என்னைவாழ்வித்திட
நினக்கே பரம்; நின்னை நீங்காத
பூரண நீள்கருணை
தனக்கே பரம்; இனிச் சும்மா
இருக்கத் தகும்என்றுமே. (16)

உடன் வருமோ!

417 இடம்பெறு வீடு, மின்னார், சேய்,
சமுகம், இருநிதியும்
உடம்பைவிட் டாருயிர் போம்போது
கூடி, உடன்வருமோ?

மடம்பெறு மாயை மனமே!
இனி இங்கு வாத்;மௌனி
திடம்பெற வைத்த மௌனம் சகாயம்;
தெரிந்து கொள்ளே. (17)

## எனக்கும் கதி உண்டோ!

418 நாற்றச் சடலத்தை, ஒன்பது
வாசல் நடைமனையைச்,
சோற்றுப் பசையினை, மும்மல
பாண்டத் தொடக்கறையை,
ஆற்றுப் பெருக்கன்ன கன்மப்
பெருக்கை, அடர்கிருமிச்
சேற்றைத் துணைஎன்ற நாய்க்கும்உண்
டோகதி சேர்வதுவே! (18)

## உலகம் விடப்படுமோ!

419 பொய்யார் உலகம் நிலையல்ல;
கானற் புனல்எனவே
மெய்யா அறிந்தென்ன?, என்னால்
இதனை, விடப்போகுமோ?
கையால் மௌனந் தெரித்தே,
கல் லால்நிழற் கண்ணிருந்த
ஐயா! அப் பா?என் அரசே! முக்
கண்ணுடை ஆரமுதே! (19)

## அருளாவிடில் ஆவி விடுவேன்.

420 ஆரா அமுதென் மோனம்
வகித்துக்,கல் லால்நிழற்கீழ்ப்
பேராது, நால்வ ருடன்வாழ்முக்
கண்ணுடைப் பேரரசே

நீராய் உருகவுள் ளன்புதந்
தே,சுக நிட்டையை நீ
தாரா விடின்என் பெருமூச்சுத்
தானத் தனஞ்சயனே. (20)

## நெஞ்சம் உருகுதல் ஒன்றே வேண்டும்.

421 வாயுண்டு வாழ்த்த; மௌனஞ்செய்
போது மௌன அருள்
தாயுண்டு; செய்என்ன என்னைப்
புரக்கச் சதானந்தமாம்
நீயுண்டு; நின்னைச் சரண்புக
நான்உண்;டென் நெஞ்சம்ஐயா!
'தீயுண் டிருந்த மெழுகலவோ?
கதி சேர்வதற்கே. (21)

## அன்பில்லாதபொழுது எதைச் செய்வது?

422 கல்லால் எறிந்தும்,கை வில்லால்
அடித்தும், கனிமதுரச்
சொல்லால் துதித்தும்,நற் பச்சிலை
தூவியும் தொண்டர் இனம்
எல்லாம் பிழைத்தன ; அன்பற்ற
நான் இனி ஏதுசெய்வேன்!
கொல்லா விரதியர் நேர் நின்ற
முக்கட் குருமணியே! (22)

## சுட்டொழி.

423 முன்னிலைச் சுட்டொழி நெஞ்சே! நின்
போதம் முளைக்கில்லையோ!
பின்னிலைச் சன்மம் பிறக்குங்கண்
டாய்! இந்தப் பேய்த்தனம்ஏன்

தன்னிலே யேநில்லு! தானே
தனிச்சச்சி தானந்தமாம்
நன்னிலே வாய்க்கும்; எண் சித்தியுங்
காணும் நமதல்லவே. (23)

## சொல்லன்றிச் செயல் இல்லை.

424 சொல்லால் மவுனம் மனம்என்
றேசொல்லிச் சொல்லிக்கொண்ட
தல்லால் மனம்அறப் பூரண
நிட்டையில் ஆழ்ந்ததுண்டோ?
கல்லாத மூடன் இனிஎன்செய்
வேன்? சகற் காரணமாம்
வல்லாள ஞன மவுன
சதானந்த மாகடலே! (24)

## மனம் இறக்க வழி

425 ஆரணம் ஆகமம் எல்லாம்
உரைத்த அருள்மௌன
காரண மூலம்கல் லாலடிக்
கேஉண்டு; காணப்பெற்றால்
பாரணங் கோடு சுழல்நெஞ்ச
மாகிய பாதரசம்
மாரண மாய்விடும்; எண்சித்தி
முத்தியும் வாய்த்திடுமே. (25)

## குருமார்கள்.

426 சித்த மவுனி; வடபால்
மவுனி, நம் தீபகுண்ட
சுத்த மவுனி, எனுமூவ
ருக்குந் தொழும்புசெய்து.

சத்த மவுன முதல்மூன்று
மௌனமுந் தான்படைத்தேன் ;
நித்த மவுனமல் லால்அறி
யேன்மற்றை நிட்டைகளே. (26)

## ஏதும் குறைவில்லை.

427 கண்டேன் நினதருள்; அவ்வரு
ளாய்நின்று காண்பதெல்லாம்
உண்டே; அதுவும் நினதாக்கி
னேன்;உவட் டாதஇன்பம்
மொண்டே அருந்தி இளைப்பாற்றினேன்;
நல்ல முத்திபெற்றுக்.
கொண்டேன்; பராபர மே! எனக்
கேதுங் குறைவில்லையே. (27)

## நானே கண்டது அன்று.

428 மேற்கொண்ட வாயுவுங் கீழ்ப்பட
மூலத்து வெந்தழலைச்
'சூற்கொண்ட மேக மென' ஊமை
நின்று சொரிவதைஎன்
றுற்கண்ட தன்று; மௌனுப
தேசி அளிக்கையின் இப்
பாற்கண்டு கொண்டனன் மேலே
அமிர்தம் பருகுவனே. (28)

## இரண்டும் இல்லை.

429 சொல்லால் தொடர்பொரு ளால்தொட
ராப்பரஞ் சோதிநின்னை
வல்லாளர் கண்ட வழிகண்டி
லேன்?; சகமார்க்கத்திலும்

செல்லாதென் சிந்தை; நடுவே
கிடந்து திகைத்துவிம்மி
அல்லான தும்பக லானதும்
வாய்விட் டரற்றுவனே. (29)

## கல்லால் நிழலில் உள்ளது எப்பொருள் ?

430 அறியாத என்னை அறிவாயும்
நீஎன் றகம்புறமும்
பிறியா தறிவித்த பேரறி
வாம்சுத்தப் பேரொளியோ ?
குறியாத ஆனந்தக் கோவோ?
அமுதருள் குண்டலியோ ?
சிறியேன் படுந்துயர் கண்டுகல்
லால் நிழல் சேர்ந்ததுவே. (30)

## எவ்வாறு கதி காண்பது ?

431 எல்லாம் உதவும் உனைஒன்றிற்
பாவனை யேனுஞ்செய்து
புல்லா யினும்ஒரு பச்சிலை
யாயினும் போட்டிறைஞ்சி
நில்லேன் நல் யோக நெறியுஞ்செ
யேன்;அருள் நீதிஒன் றும்
கல்லேன்;எவ் வாறு பரமே!
பரகதி காண்பதுவே ? (31)

## இவை தவிர, ஒன்றும் தெரியவில்லை.

432 ஒன்றும் தெரிந்திட வில்லை;என்
னுள்ளத் தொருவ !எனக்
கென்றும் தெரிந்த இவை; அவை
கேள்! இர வும்பகலும்

குன்றும், குழியும், வனமும்
மலையும், குரைகடலும்,
மன்றும், மனையும், மனமாதி
தத்துவ மாயையுமே. (32)

## எனக்கும் அருள் புரிந்தான்

433 பழுதுண்டு பாவையர் மோக
விகாரப் பரவையிடை
விழுகின்ற பாவிக்கும் தன்தாள்
புணையை வியந்தளித்தான் ;
தொழுகின்ற அன்பர் உளம்களி
கூரத் துலங்கும்மன்றுள்
எழுகின்ற ஆனந்தக் கூத்தன்,
என்கண்மணி, என்னப்பனே. (33)

## இழுக்காகுமோ?

434 அழுக்கார்ந்த நெஞ்சுடை யேனுக்கை
யா! நின் அருள்வழங்கின்
இழுக்காகும் என்றெண்ணி யோ இரங்
காத இயல்புகண்டாய் !
முழுக்காத லாகி விழிநீர்
பெருக்கிய முத்தர்எனும்
குழுக்காண நின்று நடமாடுந்
தில்லைக் கொழுஞ்சுடரே ! (34)

## எல்லாம் செய்து, தவம் செய்யாதது ஏன் ?

435 ஆலம் படைத்த விழியார்கள்
மால்கொண் டவர்செய்இந்த்ர
சாலம் படைத்துத் தளர்ந்தனை
யே; என்றும் தண்ணருள்கூர்

கோலம் படைத்துக்கல் லாலடிக்
கீழ்வைகுங் கோவுக்கன்பால்
காலம் படைக்கத் தவம்படை
யாதென்கொல்! கல்நெஞ்சமே! (35)

## விதி வசம்

436 சும்மா விருக்கச் சுகம்சுகம்
என்று சுருதியெல்லாம்
அம்மா; நிரந்தரம் சொல்லவும்,
கேட்டும், அறிவின்றியே
பெம்மான் மௌனி மொழியையுந்
தப்பிஎன் பேதைமையால்
வெம்மாயக் காட்டில் அலைந்தேன்;
அந்தோ! என் விதிவசமே. (36)

## நம்மைப்போல உண்டோ!

437 தினமே செலச்செல, வாழ்நாளும்
நீங்கச், செகத்திருள்சொற்
பனமே எனவெளி கண்டே
இருக்கவும், பாசபந்த
இனமே துணை என் றிருந்தோம்;
நமன்வரின் என்செய்குவோம்
மனமே! நம் போலஉண் டோசுத்த
மூடர் இவ் வையகத்தே? (37)

## இப்பிறப்பிலேனும் அருள்புரிதல் கூடாதோ?

438 கடல்எத் தனை,மலை எத்தனை
அத்தனை கன்மம்; அதற்
குடல்எத் தனைஅத் தனைகடல்
நுண்மணல் ஒக்கும்; இந்தச்

சடலத்தை நான்விடு முன்னே
உனைவந்து சாரஇருட்
படலத்தை மாற்றப் படாதோ?
நிறைந்த பராபரமே! (38)

## வினை வந்தது எவ்வாறு ?

439 நினையும் நினைவும் நினையன்றி
இல்லை; நினைந்திடுங்கால்
வினைஎன் றொருமுதல் நின்னை அல்
லாது வினைவதுண்டோ ?
தனையும் தெளிந்துன்னைச் சார்ந்தோர்கள்
உள்ளச்செந் தாமரையாம்
மனையும்,பொன் மன்றமும் நின்றாடுஞ்
சோதி மணிவிளக்கே! (39)

## இனியும் வினைத் துன்பம் ஏன் ?

440 உள்ளத் தையும்இங் கெனையும் நின்
கையினில் ஒப்புவித்தும்,
கள்ளத்தைச் செய்யும் வினையால்
வருந்தக் கணக்கும்உண்டோ ?
பள்ளத்தில் வீழும் புனல்போற்
படிந்துன் பரமஇன்ப
வெள்ளத்தின் மூழ்கினர்க் கேளி
தாம்தில்லை வித்தகனே! (40)

## கதி வேறு இல்லை.

441 கள்ளம் பொருந்தும் மடநெஞ்ச
மே!கொடுங் காலர்வந்தால்
உள்ளன் பவர்கட்குண்டோ ? இல்லை
யே;உலகீன்ற அன்னை

வள்ளம் பொருந்து மலரடி
காணமன் ருடும்இன்ப
வெள்ளச் செம் பாதப் புணையேயல்
லாற்கதி வேறில்லையே. (41)

## சொல்லுவார் சொல்லுக.

442 'தன்மய மானசு பாவத்தின்
மெள்ளத் தலைப்படுங்கால்
மின்மய மானச கம்யா
துரைத்தென்? வெளியில்உய்த்த
சின்மய முத்திரைக் கையேமெய்
யாகத் தெளிந்தநெஞ்சே!
நின்மயம் என்மயம் எல்லாம்
நிறைந்த நிராமயமே. (42)

## அறிவு வந்தது.

443 ஆதம் கலையும், சுருதியுங்
காண்டற் கரியஉனைத்,
தோயும், படிக்குக் கருணைசெய்
வாய்!சுக வான்பொருளே!
தாயும், பிதாவும், தமருங்,
குருவுந், தனிமுதலும்,
நீயும் பரையுமென் றேஉணர்ந்
தேன்;இது நிச்சயமே. (43)

## கருணை வருமோ?

444 அல்லும் பகலும் உனக்கே
அபயம் அபயம்என்று
சொல்லுஞ்சொல் இன்னம் தெரிந்ததன்
றோ? துதிப் பார்கள்மனக்

கல்லுங் கரைக்கும் மவுன!
உனது கருணை என்பால்
செல்லும் பொழுதல்ல வோ.செல்லு
வேன்அந்தச் சிற்சுகத்தே. (44)

## எல்லாம் சிவன் செயல்

445 எல்லாம் சிவன்செயல் என்றறிந்
தால்அவன் இன்னருளே
அல்லால் புகலிடம் வேறுமுண்
டோ?அது வே நிலையா:
நில்லாய்!உன் னுல்தமி யேற்குக்
கதியுண்டிந் நீள் நிலத்திற்
பொல்லா மயக்கத்தில் ஆழ்ந்தாவ
தென்ன? புகல்நெஞ்சமே! (45)

## தெளியேன்; என்ன செய்வது!

446 ஒளியே! ஒளியின் உணர்வே!
உணர்வின் உவகைபொங்குங்
களியே! களிக்குங் கருத்தே!
கருத்தைக் கவளங்கொண்ட
வெளியே! வெளியின் விளைசுக
மே!சுகர் வீறுகண்டும்
தெளியேன்; தெளிந்த வரைப்போற்றி
டேன்;என்ன செய்குவனே? (46)

## மறப்பும் நினைப்பும்

447 மறக்கின்ற தன்மை இறத்தல்ஒப்
பாகும்; மனமதொன்றில்
பிறக்கின்ற தன்மை பிறத்தல்ஒப்
பாகும்;இப் பேய்ப்பிறவி

இறக்கின்ற எல்லைக் களவில்லை
யே; இந்தச் சன்மஅல்லல்
துறக்கின்ற நாள்எந்த நாள்? பர
மே! நின் தொழும்பனுக்கே. (47)

## நல்ல கூத்து

448 காட்டிய அந்தக் கரணமும்
மாயைஇக் காயம்என்று
சூட்டிய கோலமும் நாணு இயங்கத்
துறையிதனுள்
நாட்டிய நான்றனக் கென்ருேர்
அறிவற்ற நான்இவற்றைக்
கூட்டிநின் ருட்டினை யே; பர
மே! நல்ல கூத்திதுவே. (48)

## இரு நிலை

449 பொல்லாத மாமற் கடமன
மேஎனைப் போல்அடுத்த
எல்லாவற்றை யும்பற்றிக் கொண்டனையே;
என்னை? நின்மயமா
நில்லாய்! அருள்வெளி நீ! நான்நிற்
பேன்அருள் நிட்டைஒரு
சொல்லால் பதிந்து; பரிபூர
ணனந்தம் தோய்குவனே. (49)

## யாவற்றையும் கட்டி வை.

450 வாராய்! நெஞ்சே! உன்றன் துன்மார்க்கம்
யாவையும் வைத்துக்கட்டிங்
காராய்! அடிக்கடிச் சுற்றுகின்
ருய்! உன் னவலமதிக்

கோரா யிரம்புத்தி சொன்னாலும்
ஓர்கிலை; ஓகெடுவாய் !
பாராய்! உனைக்கொல்லு வேன்;வெல்லு
வேன்;அருட் பாங்குகொண்டே. (50)

## அளவுட் படாத பொருள்

451 மாதத்திலேயொரு திங்கள்உண்
டாகி மடிவதைநின்
போதத்தி லேசற்றும் வைத்திலை
யே!வெறும் புன்மைநெஞ்சே !
வேதத்தி லே,தர்க்க வாதத்தி
லேவிளங் காதுவிந்து
நாதத்தி லேஅடங் காதந்த
வான்பொருள் நாடிக்கொள்ளே ! (51)

## தெரியாதது ஏன் ?

452 எங்கும் வியாபித் துணர்வாய்;
உனக்கென் இதயத்துள்ளே
தங்கும் துயரம் தெரியாத
வண்ணம் தடைசெய்ததார்?
அங்கம் குழைந்துள் ளுருகும்அன்
பாளர்க் கணைகடந்து
பொங்குங் கருணைக் கடலே!சம்
பூரண போதத்தனே ! (52)

## பொய்க் கருத்து

453 வையக மாதர் சுகத்தையும்,
பொன்னையும், மாயைமல
மெய்யையும் மெய்யென்று; நின்அடி
யார்தம் விவேகத்தையும்,

வேதத்தி லே,தர்க்க வாதத்தி
லேவிளங் காது;விந்து
நாதத்தி லேஅடங் காதுஅந்த
வான்பொருள்; நாடிக்கொள்ளே. 51

எங்கும் வியாபித்து உணர்வாய்;
உனக்குஎன் இதயத்துஉள்ளே.
தங்கும் துயரம் தெரியாத
வண்ணம் தடைசெய்ததுஆர்?
அங்கம் குழைந்துஉள் உருகும்அன்
பாளர்க்கு அணைகடந்து
பொங்கும் கருணைக் கடலே!சம்
பூரண போதத்தனே! 52

வையக மாதர் சுகத்தையும்
பொன்னையும் மாயைமல
மெய்யையும் மெய்என்று, நின்அடி
யார்தம் விவேகத்தையும்
ஐயம்இல் வீட்டையும் மெய்ந்நூலை
யும்பொய்ய தாகஎண்ணும்
பொய்யர்தம் நட்பை விடுவதுஎன்
றோ? பரி பூரணமே! 53

அளியும் கனியொத்து, அருவினை
யால்நொந்து அயர்வுறுவேன்;
தெளியும் படிக்குப் பரிபாக
காலமும் சித்திக்குமோ?

---

51. விந்து நாதத்திலே – பீஜ மந்திரத்திலும். அடங்காது அந்த வான்பொருள் - பிறபொருளுக்குக் கட்டுப்படாது.

52. சம்பூரண போதத்தனே – பரிபூரண ஞான சொரூபனே.

53. மெய்யையும் மெய் என்று – உடலையும் நிலை பெற்றதென்று. ஐயம் இல் வீட்டையும் – சந்தேகத்துக்கு இடமில்லாத முக்தியையும்.

54. அளியும் கனி ஒத்து – கனிந்த கனி போன்று. அருவினையால் – கொடிய வினையினால்.

ஒளியும் கருணையும் மாறாத
இன்பமும் ஓர்உருவாய்
வெளிவந்து, அடியர் களிக்கநின்று
ஆடும் விழுப்பொருளே! 54

அடையார் புரம்செற்ற தேவே!நின்
பொன்அடிக்கு அன்புசற்றும்
படையாத என்னைப் படைத்து,இந்தப்
பாரில் படர்ந்தவினைத்
தடையால் தளையிட்டு, நெஞ்சம்புண்
ணாகத் தளரவைத்தாய்;
உடையாய் உடைய படிஅன்றி,
யான்செய்தது ஒன்றுஇலையே. 55

ஆடும் கறங்கும் திரிகையும்
போல அலைந்துஅலைந்து,
காடும் கரையும் திரிவதுஅல்
லால்,நின் கருணைவந்து
கூடும் படிக்குத் தவம்முய
லாத கொடியர்,எமன்
தேடும் பொழுதுஎன்ன செய்வார்?
பரானந்த சிற்சுடரே! 56

கற்றும் பலபல, கேள்விகள்
கேட்டும், கறங்குஎனவே
சுற்றும் தொழில்கற்றுச், சிற்றின்பத்
தூடு சுழலின்என் ஆம்?

---

55. அடையார் புரம் செற்ற தேவே – பகைவர்களுடைய திரிபுரங்களை எரித்த இறைவா. வினைத்தடையால் – கர்மபந்தத்தினால். தளை இட்டு – விலங்கு போட்டு.

56. ஆடும் கறங்கும் திரிகையும் போல – வானத்தில் பறக்கின்ற காற்றாடியையும் குயவனது சக்கரத்தையும் போல.

57. கறங்கு எனவே – காற்றாடியைப் போலவே.

குற்றம் குறைந்து குணம்மே
 விடும்அன்பர் கூட்டத்தையே
முற்றும் துணைஎன நம்புகண்
 டாய்;சுத்த மூடநெஞ்சே! 57

நீஎன நான்என வேறுஇல்லை
 என்னும் நினைவுஅருளத்,
தாய்என மோன குருஆகி
 வந்து, தடுத்து,அடிமைச்
சேய்எனக் காத்தனை யே;பர
 மே!நின் திருவருளுக்
கேஎன செய்யும்கைம் மாறுஉள
 தோ?சுத்த ஏழையனே! 58

ஆத்திரம் வந்தவர் போல்அலை
 யாமல், அரோகதிட
காத்திரம் தந்துஎன்னை யேஅன்னை
 போலும் கருணைவைத்து,இம்
மாத்திரம் முன்நின்று உணர்த்தினை
 யே;மவு னாஇனிநான்
சாத்திரம் சொன்ன படிஇயம
 ஆதியும் சாதிப்பனே. 59

## 28. உடல் பொய்யுறவு

### நேரிசை வெண்பா

உடல்,பொய் உறவுஆயின் உண்மைஉறவு ஆகக்
கடவார்ஆர்? தண்அருளே கண்டாய்; – திடமுடனே
உற்றுப்பார்; மோனன் ஒருசொல்லே உண்மை;நன்றாய்ப்
பற்றிப்பார்; மற்றஎல்லாம் பாழ். 1

---

59. அரோகம் – நோயின்மை. இயம ஆதியும் – இயமம் முதலான யோகசாதனங்களையும்.

1. உறவு ஆகக் கடவர் யார்? – உறவினார் யாவர்?

பார்ஆதி பூதம்எல்லாம் பார்க்குங்கால், அப்பரத்தின்
சீர்ஆக நிற்கும் திறம்கண்டாய்; — நேர்ஆக
நிற்கும் திருவருளில் நெஞ்சே!யாம் நிற்பதுஅல்லால்
கற்கும்நெறி யாதுஇனிமேல்? காண். 2

மெய்ஆன தன்மை விளங்கினால் யார்க்கேனும்
பொய்ஆன தன்மை பொருந்துமோ? — ஐயாவே!
மன்னும்நி ராசைஇன்னம் வந்ததுஅல்ல; உன்அடிமை
என்னும்நிலை எய்தும்ஆறு என்? 3

அறியாமை மேலிட்டு அறிவுஇன்றி நிற்கும்
குறியேற்கு, அறிவுஎன்ற கோலம் — வறிதேஆம்;
நீஉணர்த்த நான்உணரும் நேசத்தா லோ,அறிவுஎன்
றேஎனக்குஓர் நாமம்இட்ட தே. 4

ஏதுக்குச் சும்மா இரு,மனமே! என்றுஉனக்குப்
போதித்த உண்மைஎங்கே போகவிட்டாய்? — வாதுக்கு
வந்துஎதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னாயே,உன்
புந்திஎன்ன? போதம்என்ன? போ. 5

ஜகம்அனைத்தும் பொய்எனவே தான்உணர்ந்தால், துக்க
சுகம்அனைத்தும் பொய்அன்றோ? சோராது — இகபரத்தும்
விட்டுப் பிரியாத மேலான அத்வைதக்
கட்டுக்குள் ஆவதுஎன்றோ? காண். 6

---

3. மன்னும் நிராசை இன்னம் வந்தது அல்ல — உறுதியான வைராக்கியம் இன்னும் வாய்க்கவில்லை.

4. அறிவு இன்றி நிற்கும் குறியேற்கு — அறிவின்றி வாழ்தலைக் குறிக்கோளாகக் கொண்டுள்ள எனக்கு. அறிவு என்ற கோலம் வறிதேஆம் — அறிவுடையன் என்ற மனித வடிவம் பொருளற்றதாகும்.

6. அத்வைத கட்டுக்குள் ஆவது என்றோ? இரண்டற்றது என்னும் ஆணையில் அடங்கியிருத்தல் எக்காலமோ?

கற்கண்டோ, தேனோ, கனிரசமோ, பாலோ,என்
சொற்குஅண்டாது ஏதுஎனநான் சொல்லுவேன்? —
வில்கண்ட
வானமதி காண மவுனிமவு னத்துஅளித்த
தானம்அதில் ஊறும்அமிர் தம். 7

கேட்டலுடன், சிந்தித்தல், கேடுஇலா மெய்த்தெளிவால்,
வாட்டமறா உற்பவநோய் மாறுமோ? — நாட்டமுற்று
மெய்ஆன நிஷ்டையினை மேவினர்கட்கு அன்றோதான்
பொய்ஆம் பிறப்புஇறப்புப் போம். 8

மாயா ஜகத்தை மதியாதார், மண்முதலா
யேஆன தத்துவத்தில் எய்துவரோ? — நேயானு
பூதிநிலை நிற்கப் பொருந்துவர்கள்; அன்னவர்தம்
நீதியையே ஓர்;மனமே நீ. 9

இகம்முழுதும் பொய்எனவே ஏய்ந்துஉணர்ந்தால், ஆங்கே
மிகவளர வந்தஅருள் மெய்யே; — அகம் நெகிழப்
பாரீர்; ஒருசொல் படியே அனுபவத்தைச்
சேரீர்; அதுவே திறம். 10

ஆரணங்கள், ஆகமங்கள் யாவுமே ஆனந்த
பூரணமே உண்மைப் பொருள்என்னும் — காரணத்தை
ஓராயோ? உள்உள்ளே உற்றுஉணர்ந்துஅவ்
உண்மையினைப்
பாராயோ? நெஞ்சே! பகர். 11

---

7. என் சொற்கு அண்டாது — என் வார்த்தைக்கு எட்டாது. வில்கண்ட — ஒளி பொருந்திய. வானமதி காண — உயர்ந்த சந்திரமண்டலத்தைத் தரிசிக்க. 8. வாட்டம் அறா உற்பவ நோய் — தளர்ச்சி நீங்காத பிறவிப்பிணி. மேவினர்கட்கு அன்றோ — அடைந்தவர்களுக்கு அன்றோ. 9. நேயானுபூதி நிலை நிற்க — அன்பான சிவானுபூதியில் நிலைத்திருக்க. 10. ஏய்ந்து உணர்ந்தால் — பொருந்தி அறிந்தால். மிக வளர வந்த அருள் — யாண்டும் பெருகுகிற திருவருள். 11. ஆரணங்கள் — வேதங்கள். உள்உள்ளே — உள்ளத்தினுள்ளே.

நேராய்அம் மௌனநிலை நில்லாமல், வாய்பேசி
ஆராய் அலைந்தீர்நீர்; ஆகெடுவீர்; — தேரீர்;
திரைஉந்து இரையும்நதிச் சென்னியனை நாவால்
கரையும்; கரையும்மனக் கல். 12

அற்ப மனமே! அகிலவாழ்வு அத்தனையும்
சொற்பனம்கண் டாய்;உண்மை சொன்னேன்நான்; — கற்பனைஒன்று
இல்லா இடத்தே, எனைச்சும்மா வைத்திருக்கக்
கல்லாய்நீ தான்ஓர் கவி. 13

ஏதும் திருவருளின் இச்சைஆம் என்றுஎன்றுஎப்
போதும் பொருந்தும் புனிதர்பால் — தீதுநெறி
செல்லுமோ? செல்லாதே; செல்லும்இடம் இன்பம்அலால்
சொல்லுமோ வேதத் தொனி. 14

கல்லேறும் சில்லேறும் கட்டியே றும்போலச்
சொல்ஏறப் பாழ்த்த துளைச்செவிகொண்டு — அல்ஏறு
நெஞ்சன்என நிற்கவைத்தாய்; நீதியோ? தற்பரமே!
வஞ்சன்அல்லேன்; நீயே மதி. 15

---

12. ஆராய் அலைந்தீர் நீர் — உங்களை யாரென்று கருதித் திண்டாடினீர்கள். தேரீர் — ஆராயுங்கள். திரைஉந்து இரையும் நதி — அலைவீசி ஒலிக்கின்ற கங்கை ஆறு. சென்னியனை — தலையையுடையவனை. கரையும் மனக்கல் — கல்போன்ற நெஞ்சம் உருகும்.

14. இச்சைஆம் என்றுஎன்று — திருவுளப்பாங்கு என்று எண்ணி எண்ணி. வேதத்தொனி — வேத வாக்கு.

15. கல்லேறும் — கல் எறிதலையும். சில்லேறும் — ஓடு எறிதலையும். கட்டியேறும் — மண்ணாங்கட்டி எறிதலையும். சொல் ஏற — சொல்வதையெல்லாம் கேட்டுக்கொள்ளுகிற. அல்ஏறுநெஞ்சன் — அஞ்ஞானத்தை வாங்கிக்கொள்ளும் மனத்தையுடையவன். வஞ்சன் அல்லேன் — அடியேன் மோசமானவன் அல்லேன்.

அப்பொருளும் ஆன்மாவும் ஆரணநூல் சொன்னபடி
தப்புஇல்லாச் சித்துஒன்றுஆம் ஜாதியினால்; – எப்படியும்
தேரில் துவைதம்; சிவாகமமே சொல்லும்நிஷ்டை
ஆரும்இடத்து அத்வைதம் ஆம். 16

வேதம் முதலாய் விளங்கும் சிவவடிவுஆம்
போத நிலையில் பொருந்தாமல், – ஏதம்மிகு
மோகாதி அல்லலிலே மூழ்கினையே நெஞ்சே!இத்
தேகாதி மெய்யோ? தெளி. 17

நோக்கற்கு அரிதுஆன நுண்ணியவான் மோனநிலை
தாக்கற்கு உபாயம் சமைத்தபிரான்; – காக்கும்உயிர்
அத்தனைக்கும் தான்அடிமை ஆதலினால்,
யான்எனதுஎன்று
இத்தனைக்கும் பேசஇடம் இல். 18

ஒன்றும்அற நில்என்று உணர்த்தியநம் மோனகுரு
தன்துணைத்தாள் நீடூழி தாம்வாழ்க – என்றுஎன்றே
திக்குஅனைத்தும் கைகுவிக்கும் சின்மயர்ஆம்தன்மையர்க்கே
கைக்குவரும் இன்பக் கனி. 19

மனத்தாலும் வாக்காலும் மன்னஒண்ணா மோன
இனத்தாரே நல்ல இனத்தார்; – கனத்தபுகழ்
கொண்டவரும் அன்னவரே; கூறரிய முக்திநெறி
கண்டவரும் அன்னவரே காண். 20

16. அப்பொருளும் – அந்தப்பரமாத்மாவும். ஆன்மாவும் – ஜீவாத்மாவும். சித்து ஒன்று ஆம் – சைதன்யமேயாம். ஜாதியினால் – சொரூப அமைப்பினால். நிஷ்டை ஆரும் இடத்து – சமாதிநிலை கூடும் இடத்து. 17. போதநிலையில் – ஆத்ம போதத்தில். ஏதம்மிகு – குற்றம் நிறைந்திருக்கின்ற. மோகாதி அல்லலிலே – மயக்கம் முதலிய துன்பங்களிலே. 18. வான்மோனநிலை – மேலான மௌன வடிவந் தன்னை. தாக்கற்கு – அடைதற்கு. 19. ஒன்றும் அறநில் – மனத்தைக் காலியிடமாகச் செய். துணைத்தாள் – இரண்டு திருவடிகள். 20. மன்ன ஒண்ணா – அடைய முடியாத.

கண்ஒளியே; மோனக் கரும்பே; கவலை அறப்
பண்ஒளிக்கும் உள்ஒளியாம் பான்மையினை –
நண்ணிட,உன்
சித்தம் இரங்கிலதுஎன்? சித்தம் தெளியாவேறு
இத்தனைக்கும் ஆதரவும் இல். 21

அறியாமை சாரின் அதுவாய்; அறிவுஆம்
நெறிஆன போதுஅதுவாய் நிற்கும்; – குறியால்
சதசத்து அருள்உணர்த்தத், தான்உணரா நின்ற
விதம்உற்று, அறிவுஎனும்பேர் மெய். 22

குரு,லிங்க, ஜங்கமமாக் கொண்டதிரு மேனி,
கருஒன்று மேனிநம்பால் காட்டாது – அருள்என்று
கண்டவர்க்கே ஆனந்தம் கண்டுகொளல் ஆம்;அலது
கொண்டவர்க்குஇங்கு என்னகிடைக் கும். 23

புலியின் அதள்உடையான்; பூதப் படையான்;
பலிஇரந்தும் எல்லாம் பரிப்பான்; – மலிபுனல்சேர்
பொன்முடியான்; முக்கண் புனிதன் சரண்புகுந்தோர்க்கு
என்முடியாது? ஏதும்உள தே. 24

சொல்லுக்கு அடங்காச் சுகப்பொருளை நாம்எனவே
அல்லும் பகலும் அரற்றுவதுஎன்? – நல்லசிவ
ஞானமயம் பெற்றோர்கள் நாம்இல்லை என்பர்;அந்தோ
மோனமயம் ஆன முறை. 25

21. கவலை அறப்பண் – சஞ்சலத்தை நீக்குகின்ற. ஒளிக்கும் உள் ஒளியாம் பான்மையினை – மனசாட்சியாய் அமைந்திருக்கும் பேரறிவுப் பொருளின் சொரூபத்தை. ஆதரவும் இல் – ஆதாரம் இல்லை. 22. அறியாமை சாரின் – அறியாமையோடு கூடினால். சதசத்து (சத்து + அசத்து)– சேதனத்தையும், ஜடத்தையும். 23. ஜங்கமமா – சிவனடியார் களாகவும். கரு ஒன்று மேனி – அஞ்ஞானத்தில் பிறந்த வடிவம். அலது – உண்மையுணராமல். 24. புலியின் அதள் உடையான் – புலியினுடைய தோலை ஆடையாக உடைய வன். பலி இரந்தும் எல்லாம் பரிப்பான் – பிச்சை ஏற்றும் உலகனைத்தையும் தாங்குவான். மலிபுனல் சேர் – நிறைந்த கங்கையை அணிந்த.

ஐயா; அருணகிரி அப்பா; உனைப்போல
மெய்ஆக ஓர்சொல் விளம்பினர்யார்? – வையகத்தோர்
சாற்றரிதுஎன்று ஏசற்றார்; தன்அனையாய், முக்கண்எந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டி னான். 26

காதுஅற்றுப் போனமுறி கட்டிவைத்தால் ஆவதுஉண்டோ?
தீதுஅற்ற காயமும்அச் செய்கையே; – போதமாய்
நிற்பர்அல்லால் இச்சகத்தில் நேரார்கள்; நேர்ந்திடினும்
தற்பரமாக் கண்டிருப்பார் தாம். 27

வெள்ளம் குலாவுசடை வெள்ளக் கருணையினான்
கள்ளம் குலாவுவஞ்சக் கள்ளனேன் – உள்ளத்தில்
இல்லன்என்றால், அன்னவன்தான் எங்கும் வியாபகத்தான்
அல்லன்என்றும் சொல்லவழக்கு ஆம். 28

தத்துவப்பே யோடே தலைஅடித்துக் கொள்ளாமல்
வைத்த அருள்மோன வள்ளலையே – நித்தம்அன்பு
பூணக் கருதும்நெஞ்சு; போற்றக் கரம்எழுப்பும்;
காணத் துடிக்கும்இரு கண். 29

தொல்லைவினைக்கு ஈடாய்ச் சுழல்கின்ற நான்ஒருவன்
எல்லைஇலா நின்கருணை எய்துவனோ? – வல்லவன்ஆம்
மோன குருவே! முழுதினையும் தான்உணர்ந்த
ஞான குருவே! நவில். 30

---

26. சாற்றரிது என்று ஏசற்றார் – சொல்ல முடியாது என்று இளைத்துப் போனார்கள். தன் அனையாய் – தனக்கு ஒப்பாக இருப்பவனே. கை காட்டினான் – சின் முத்திரையைக் காட்டினான்.

27. காது அற்றுப்போன – துளை கெட்டுப் போன. முறி – எழுதுதற்கு உரிய ஓலை. போதமாய் – ஞான வடிவமாய். இச்சகத்தில் நேரார்கள் – இவ்வுலகத்தில் ஒட்ட மாட்டார்கள். தற்பரமாக் கண்டிருப்பார்தாம் – பரபோதத்திலே திளைத்திருப்பார்.

28. வெள்ளக் கருணையினான் – கருணைக் கடலாய் இருப்பவன். வியாபகத்தான் அல்லன் – நிறைபொருள் அல்லன்.

மூன்றுகண்ணா, முத்தொழிலா, மும்முதலா, மூவுலகும்
தோன்றக் கருணைபொழி தோன்றலே, – ஈன்றஅன்னை
தன்னைப்போல் அன்பு தழைத்தோய், ஒருதெய்வம்
உன்னைப்போல் உண்டோ? உரை. 31

நேசிக்கும் சிந்தை நினைவுக்குள் உன்னைவைத்துப்
பூசிக்கும்; தான்நிறைந்து பூரணமாய் – யோசித்து
நின்றதுஅல்லால், மோனா! நிருவிகற்ப நிஷ்டைநிலை
என்றுவரு மோ? அறியே னே. 32

அறிவில் அறியாமை அற்று,அறிவாய் நின்று,
பிறிவுஅறஆ னந்தமயம் பெற்றுக், – குறிஅவிழ்ந்தால்
அன்றைக்கு உடல்வேண்டேன்; ஐயா!இவ் ஆக்கையையே
என்றைக்கும் வேண்டுவனே யான். 33

உடலைப் பழித்து,இங்கு உணவும் கொடாமல்,
விடவிடவே நாடுவரோ மெய்யைப் – படபடஎன
வேண்டுவேன் இந்தஉடல் மெய்உணராப் பொய்யன்நான்;
ஆண்டநீ தானே அறி. 34

அறியாயோ என்னையும்நீ, ஆண்டநீ சுத்த
வெறியாய் மயங்கவும்ஏன் விட்டாய்? – நெறிமயங்கிக்
குன்றும் செடியும் குறுகுமோ? ஐயாவே!
கன்றுகெட்டால் தாய்அருகே காண். 35

---

31. மும்முதலா – மும்மூர்த்திகளைத் தன்னிடத்தில் வைத்திருப்பவனே.

33. குறி அவிழ்ந்தால் – எண்ணம் ஒடுங்கினால். இவ் ஆக்கையையே – இந்த ஞானசொரூபத்தையே.

34. விடவிடவே நாடுவரோ – ஒதுக்கித்தள்ள விரும்புவரோ? படபடஎன – விரைவாக.

35. நெறி மயங்கிக் குன்றும் செடியும் குறுகுமோ – வழிதவறிக் குன்றுகளையும் செடிகளையும் நோக்கிப் போய்க் கன்றைக் கண்டுபிடிக்குமோ. கன்று கெட்டால் – கன்றானது காணாமல் போய்விட்டால்.

ஏதுக்கு உடல்சுமைகொண்டு ஏன்இருந்தேன்? ஐயனே!
ஆதிக்கம் மோனம் அருள்தாயே! – ஜோதிஆம்
மன்ன! நிருவிகற்ப ஆனந்த நிஷ்டையிலே
பின்னம்அற நில்லாத பின். 36

பின்னும் உடல்சுமையாப் பேசும் வழக்குஅதனால்;
என்னபலன்? நாம்உற்று இருந்தோமே – அன்னதனால்;
ஆனந்தம் தானேதான் ஆகும்;எம் ஐயனே!
ஏன் இந்தத் துன்பம் இனி? 37

துன்பக் கடலில் துளைந்ததுஎலாம் தீர்ந்ததே,
இன்பக் கடலில் இரும்என்ன, – அன்பில்
கரைந்து கரைந்துஉருகிக் கண்அருவி காட்ட,
விரைந்துவரும் ஆனந்த மே. 38

கரைந்து கரைந்துஉருகிக் கண்ணீர்ஆ றாக,
விரைந்தே நிருவிகற்பம் எய்த, – நிரந்தரமும்
நின்னையே சிந்திக்க நீகொடுத்தாய்; மோனா!நான்
என்னைமுழு தும்கொடுத்தே னே. 39

அல்லும் பகலும்பே ரன்புடனே தான்இருந்தால்
கல்லும் உருகாதோ? கல்நெஞ்சே! – பொல்லாத்
தப்புவழி ஏன்நினைத்தாய்? சந்ததமும் நீ இறந்த
எய்ப்பிலே ஆனந்த மே. 40

கொடுத்தேனே என்னைக் கொடுத்தவுடன் இன்பம்
மடுத்தேனே; நீடூழி வாழ்ந்தே – அடுத்தேனே;
பெற்றேனே; பெற்றுப் பிழைத்தேனே; ஜன்மஅல்லல்
இற்றேனே ஏழைஅடி யேன். 41

---

36. பின்னம் அற – பிரிவு அற.

38. துளைந்தது எலாம் – திளைத்தது எல்லாம்.

40. சந்ததமும் – எக்காலமும். எய்ப்பிலே – நிலையிலே.

41. ஜன்மஅல்லல் இற்றேனே – பிறவித் துன்பத்தை ஒழித்தேனே.

பெற்றோம் பிறவாமை; பேசாமை யாய்இருக்கக்
கற்றோம் எனஉரைக்கக் காரியம்ஏன்? — சற்றேனும்
நீக்குஅற்ற இன்ப நிலைபொருந்தி, ஏசற்று,
வாக்குஅற்றால் பேசுமோ வாய். 42

காலன் தனைஉதைத்தான்; காமன் தனைஎரித்தான்;
பாலன் பசிக்குஇரங்கிப் பால்கடலை — ஞாலம்மெச்சப்
பின்னே நடக்கவிட்டான் பேரருளை நாடாதார்க்கு
என்னே நடக்கை இனி? 43

விண்அருவி மேன்மேல் விளங்குவபோ லேஇரண்டு
கண்அருவி வெள்ளமொடு, கைகூப்பித் — தண்அமிர்த
வெள்ளமே; ஆனந்த வெற்பே எனத்தொழுவோர்
உள்ளமே ஞான ஒளி. 44

பிள்ளைமதிச் செஞ்சடையான்; பேசாப் பெருமையினான்;
கள்அவிழும் பூங்கொன்றைக் கண்ணியான் — உள்ளபடி
கல்ஆலின் கீழ்இருந்து கற்பித்தான் ஓர்வசனம்
எல்லாரும் ஈடேற வே. 45

புலன்ஐந்தும் தானே பொர,மயங்கிச், சிந்தை
அலமந்து, உழலும் அடிமை — நலம்மிகுந்த
சித்துஆன மோன சிவனே!நின் சேவடிக்கே
பித்துஆனால் உண்டோ பிறப்பு? 46

நிறைகுடம்தான் நீர்கொளுமோ? நிச்சயமா மோன
முறைஉணர்ந்தார் யாதை முயல்வார்? — பிறைஅணிந்த
மிக்ககயி லாயமலை வித்தகனே; வேதியனே;
செக்கர்அணி மேனியனே! செப்பு. 47

---

42. ஏசற்று — பழியற்று.

44. ஆனந்த வெற்பே — ஆனந்த மலையே.

45. பிள்ளைமதி — இளம்பிறை. பேசாப் பெருமையினான் — வாக்குக்கு எட்டாத மகத்துவத்தை உடையவன். ஓர் வசனம் — மகா வாக்கியத்தை.

46. தானே பொர — வலியவந்து தாக்குதலால்.

47. நிச்சயமா மோனமுறை — யாண்டும் இருக்கின்ற மௌன நிலையினை.

துங்கம்மழு மான்உடையாய்; சூலப் படைஉடையாய்;
திங்கள்அணி செஞ்சடையாய்; சேஉடையாய்; – மங்கைஒரு
பால்உடையாய்; செங்கண் பணியாய்;என்
சென்னியின்மேல்
கால்உடையாய்; நீயே கதி. 48

இனிய கருணைமுகில் எம்பிரான்; முக்கண்
கனி;அமிர்த வாரி;இன்பக் கட்டி;.– தனிமுதல்வன்;
நித்தன்; பரமன்; நிமலன்;நிறை வாய்நிறைந்த
சுத்தன்;நமக்கு என்றும் துணை. 49

நீதியாய்க், கல்ஆலின் நீழலின்கீ ழேஇருந்து,
போதியா உண்மைஎல்லாம் போதித்தான்; – ஏதில்
சனகாதி ஆய தவத்தோர்க்கு ஞான
தினகரன்ஆம் மௌன சிவன். 50

தேகச் செயல்தானும் சிந்தையுட னேகுழையில்,
யோகநிலை ஞானிகளுக்கு ஒப்புவதோ? – மோகநிலை
அல்லலிலே வாழ்வாரோ? அப்பனே! நீஅற்ற
எல்லையிலே சும்மா இரு. 51

சும்மா இருக்கச் சுகம்உதயம் ஆகுமே;
இம்மாயா யோகம்இனி ஏன்அடா? – தம்அறிவின்
சுட்டாலே ஆகுமோ? சொல்லவேண் டாம்;கன்ம
நிஷ்டா; சிறுபிள்ளாய் நீ! 52

---

48. துங்கம்மழு–தூய்மையான மழு. சேஉடையாய்–காளை வாகனத்தை உடையவனே. செங்கண் பணியாய்–செந்நிறமான கண்களைக் கொண்ட பாம்பினை உடையவனே. 49. அமிர்தவாரி – அமிர்தக் கடல். 50. ஏதில்– குற்றமில்லாத. ஞானதினகரன்ஆம்–ஞான சூரியனாம்.
51. சிந்தையுடனே குழையில்–உள்ளத்துடன் கலந்து குழைந்துவிடுமானால். மோகநிலை அல்லலிலே வாழ்வாரோ? – ஆசைக்கு வசப்பட்டுத் துன்பப்படுவாரோ? அப்பனே–மனமாகிய அப்பனே. நீ அற்ற எல்லையிலே–மனமாகிய நீ ஒடுங்கிப்போன இடத்திலே. 52. இம் மாயா யோகம் –மாயாகாரியமாகிய இப்பிரபஞ்சத்தில் சேருதல். தம் அறிவின் சுட்டாலே ஆகுமோ–உலக அறிவைக் கொண்டு அதை அடையமுடியுமோ? கன்ம நிஷ்டா–வினையில் மூழ்கியவனே

நீஅற்ற அந்நிலையே நிஷ்டை;அதில் நீ இலையோ?
வாய்அற் றவனே மயங்காதே; – போய்அற்று
இருந்தாலும் நீபோகாய்; என்றும்உள்ளாய்; சும்மா
வருந்தாதே; இன்பம்உண்டு வா. 53

வாவாஎன்று இன்பம் வரஅழைக்கும் கண்ணீரோடு
ஆஆஎன் றேஅழுத அப்பனே! – நீவாடா;
எல்லாம் நமக்குஎனவே ஈந்தனையே, ஈந்தபடி
நில்லாய்; அதுவே நிலை. 54

நில்லாப் பொருளை நினையாதே; நின்னைஉள்ளோர்
சொல்லாப் பொருள்திரளைச் சொல்லாதே; – கல்லாத
சிந்தை குழைந்து,சுகம் சேரக் குருஅருளால்
வந்தவழி நல்ல வழி. 55

வழிஇதுஎன்றும், அல்லா வழிஇதுஎன்றும், சொல்லில்
பழிபழிஆம்; நல்அருளால் பார்த்துஓர் – மொழிஉனக்கே
ஏற்றிருக்கச் சொன்னஅன்றே எங்கும் பெருவெளிஆம்;
பார்த்தஇடம் எல்லாம்நீ பார். 56

பார்அனைத்தும் பொய்எனவே பட்டினத்துப்
பிள்ளையைப்போல்
ஆரும் துறக்கை அரிதுஅரிது; – நேரே
மனத்துறவும் அப்படியே; மாணா! இவற்றில்
உனக்குஇசைந்த வாறுஒன்றே ஓர். 57

ஓராம லே,ஒருகால் உன்னாமல், உள்ஒளியைப்
பாராமல், உள்ளபடி பார்த்திருந்தால் – வாராதோ?
பத்துத் திசையும் பரந்துஎழுந்துஆ னந்தவெள்ளம்
தத்திக் கரைபுரண்டு தான். 58

53. நீ அற்ற அந்நிலையே நிஷ்டை – மனம் போன இடமே சமாதி. போய் அற்று இருந்தாலும் – யோகநிலையில் போய்ச் செயலற்றிருந்தாலும். நீ போகாய் – மனமாகிய நீ அழிந்துபட்டுப் போகமாட்டாய்.

58. ஓராமலே – நூலாராய்ச்சி பண்ணாமலும். உன்னாமல் – சிந்தனையற்றிருந்தும்.

தான்ஆன தன்மைவந்து தாக்கினால் அவ்இடத்தே
வான்ஆதி மாயை வழங்காதோ? — ஞானாகேள்!
உன்உள்ளே தோன்றா உறவுஆகி நின்றதுஎன
என்உள்ளே என்றும் இரு. 59

என்னைஉன்னை இன்னதுஇது என்னாமல் நிற்கும்நிலை
தன்னை,அருள் என்ற தருணத்தில், — அன்னைபெற்ற
பிள்ளைக்கும் சொல்லாத பெற்றிகண்டாய்; ஐயனே!
உள்ளத்தின் உள்ளே உணர். 60

சொன்னவர்தாம் நிஷ்டை தொகுத்திரார்; நிஷ்டையிலே
மன்னினவர் போதியார்; மாமவுனன் — தன்உள்
விருப்புஆகக் கைகாட்டி மிக்கவடம் நீழல்
இருப்பான் நிருவிகற்பத் தே. 61

இந்த நிருவிகற்பத்து எந்தை இருக்கநிஷ்டை,
சிந்தைநீ தேறாய்; ஜெகம்அனைத்தும் — வந்ததொடர்ப்
பாடுகெட அன்றோஓர் பாத்திரத்துக்கு ஆடல்அல்லால்,
ஆடுவதுஏன்? ஆட்டும் அவன். 62

அவனே பரமும்; அவனே குருவும்;
அவனே அகிலம் அனைத்தும்; — அவனேதாம்
ஆனவரே சொன்னால்; அவரே குருஎனக்கு;
நான்அவனாய் நிற்பதுஎந்த நாள்? 63

நாள்அவங்கள் போகாமல், நாள்தோறும் நம்தமையே
ஆளவந்தார் தாளின்கீழ் ஆள்புகுந்தாய்; — மீளஉன்னைக்
காட்டாமல் நிற்கும் கருத்துஅறிந்தால், நெஞ்சே!உன்
ஆள்தான்நான் ஐயம்இல்லை ஆல். 64

---

60. சொல்லாத பெற்றி — வாக்குக்கு எட்டாத ஆத்ம நிலை.

62. வந்த தொடர்ப்பாடு கெட — விளைந்துள்ள வியவகாரத்தை நீக்குதற்கு. ஓர் பாத்திரத்துக்கு — வெறும் விளையாட்டாக.

64. நாள் அவங்கள் போகாமல் — காலம் வீணில் கழியாமல்.

## இழுக்கடித்தாய்.

524 'யான்தான் எனல்அறவே இன்பநிட்டை' என்றருளைக்
கோன்தான் உரைத்தமொழிகொள்ளாயோ?-தோன்றி,
இழுக்கடித்தாய், நெஞ்சே! நீ என்? கலைகள் சோர
அழுக்கடிக்கும் வண்ணார்போ லாய். (65)

525 எங்கும் சிவமே, இரண்டற்று நிற்கில்நெஞ்சே!
தங்கும் சுகம்; நீ சலியாதே!—அங்கிங்கென்
றெண்ணாதே! பாழில் இறந்து பிறந்துழலப்
பண்ணாதே! யான்உன் பரம். (66)

## மெய் பொய்யாமோ! பொய் மெய்யாமோ!

526 மெய்யைப்பொய் யென்றிடவும், மெய்யலையாப் [பொய்ந்நெஞ்சே
பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ?-ஐயமறத்
தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையேல் ஆனந்தம்
என்மயமும் நின்மயமு மே. (67)

## நான் அற்ற இடத்தின் தன்மை

527 பூங்கா வனநிழலும், புத்தமுதும், சாந்தபதம்
வாங்காத ஆனந்த மாமழையும்—நீங்காவாம்;
சொல்லிறந்து மாண்டவர்போல் தூமௌன பூமியில்
இல்லையென நின்ற இடம். [நான்

528 இடங்கானம்; நல்லபொருள் இன்பம்; எனக்கேவல்
அடங்காக் கருவி; அனைத்தும்—உடன்உதவ
மந்தார தாருவென வந்து, மவுனகுரு
தந்தான்ஓர் சொற்கொண்டு தான். (69)

## இன்னம் மயக்கம் ஏன்?

529 தானம், தவம், ஞானம், சாற்றரிய சித்தி, முத்தி,
ஆனவைஎல் லாம்தாமே ஆகுமே—மோனகுரு
சொன்னஒரு சொல்லால் சுகமாய் இரு; மனமே!
இன்னம் மயக்கம்உனக் கேன்? (70)

## சொன்ன சொல்லை மறவாதே.

530 உன்னை, உடலை, உறுபொருளைத் தா! எனவே
என்னை யடிமைக் கிருத்தினன்—சொன்னஒரு
சொல்லை மறவாமல் தோய்ந்தால்நெஞ் சே! உன்னால்
இல்லை பிறப்பதெனக் கே. (71)

## மனமே. உன்னை மதியேன்.

531 எனக்கும் உனக்கும்உற வில்லை எனத்தேர்ந்து,
நினைக்கஅரி தான இன்ப நிட்டை—தனைக்கொடுத்தே
ஆசான் மவுனி அளித்தான்நெஞ் சே! உனைஓர்
காசா மதியேன்நான் காண். (72)

## எல்லாம் மோனமே.

532 ஆனந்த மோனகுரு வாம்எனவே என் அறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதால்,—தேனுந்து
சொல்லெல்லாம் மோனம்; தொழிலா தியும்மோனம்;
எல்லாம்நன் மோனவடி வே. (73)

## நான் ஏன் அலைந்தேன்?

533 எல்லாமே. மோன நிறை வெய்துதலால், எவ்விடத்தும்
நல்லார்கள் மோனநிலை நாடினர்;—பொல்லாத
நானெனஇங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன்? மோனகுரு வே! (74)

## எல்லாம் அது.

534 மோன குரு அளித்த மோனமே ஆனந்தம் ;
ஞான அருளும்அது ; நானும்அது;—வானுதி
நின்ற நிலையும் அது ; நெஞ்சப் பிறப்பும்அது
என்ற றிந்தேன் ; ஆனந்த மே. (75)

## அறிவன்றி இல்லை

535 அறிந்த அறிவெல்லாம் அறிவன்றி யில்லை ;
மறிந்தமனம் அற்ற மவுனம்—செறிந்திடவே
நாட்டினன் ; ஆனந்தம் நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினன் ; மோன குரு. (76)

## உபதேசம் யாருக்கு ?

536 குருவாகித் தண்ணருளைக் கூறுமுன்னே மோனு !
உருநீ டுயிர்பொருளும் ஒக்கத்—தருதினன
வாங்கினையே ! வேறும்உண்மை வைத்திடவும் கேட்டிட [வும்
ஈங்கொருவர் உண்டோ ? இனி.

## மோனமே கதி.

537 இனிய கருப்புவட்டை என் நாவில் இட்டால்
நனியிரதம் மாருது ; நானும்—தனியிருக்கப்,
பெற்றிலேன் மோனம் ; பிறந்தஅன்றே மோனம் [அல்லாற்
கற்றிலேன் ஏதும் கதி.

## பேசாக் குறி எதற்கு ?

538 'ஏதுக்கும் சும்மா இருநீ' எனஉரைத்த
சூதுக்கோ. தோன்ருத் துணையாகிப் —போதித்து
நின்றதற்கோ, என்ஐயா ! நீங்கிப் பிரியாமற்
கொன்றதற்கோ, பேசாக் குறி. (79)

## இதுவே கைம்மாறு.

539 குறியும் குணமும் அறக், கூடாத கூட்டத்
தறிவறிவாய் நின்றுவிட, ஆங்கே—பிறிவறவும்
சும்மா இருத்திச் சுகங்கொடுத்த மோன! நின்பாற்
கைம்மாறு நானெழிதல் காண். (80)

## என் ஆணை

540 நான்தான் எனும்மயக்கம் நண்ணுங்கால், என் ஆணை
வான்தான் எனநிறைய மாட்டாய்நீ;—ஊன்றாமல்
வைத்தமவு னத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடும் ஞான சுகம். (81)

## குருமூர்த்தி பெருமை

541 ஞானநெறிக் கேற்றகுரு; நண்ணரிய சித்திமுத்தி
தானம், தருமம் தழைத்தகுரு ;—மானமொடு
தாயெனவும் வந்தென்னைத் தந்தகுரு, என்சிந்தை
கோயிலென வாழுங் குரு. (82)

## குருமூர்த்தி செய்த அருள்

542 'சித்தும், சடமும், சிவத்தைவிட இல்லை' என்ற
நித்தன் பரமகுரு நேசத்தால்,—சுத்தநிலை
பெற்றேமே; நெஞ்சே! பெரும்பிறவி சாராமல்,
கற்றேமே மோனக் கரு. (83)

---

# 28. ஏசற்ற அந்நிலை

கொச்சகக் கலிப்பா

### பாசத்திற் செல்லாதே

543 ஏசற்ற அந்நிலையே எந்தைபரி பூரணமாய்,
மாசற்ற ஆனந்த வாரி வழங்கிடுமே:
ஊசற் சுழல்போல் உலகநெறி வாதனையால்
பாசத்துட் செல்லாதே! பல்காலும், பாழ்நெஞ்சே! (1)

### இதைக் கற்றுக்கொள்

544 பாழாகி அண்டப் பரப்பையெல்லாம் வாய்மடுத்தும்
ஆழாழி இன்பத் தழுந்தப் படியாயோ?
தாழாயோ? எந்தைஅருள் தாட்கீழ்; நெஞ்
[சே! எனைப்போல்
வாழாது வாழ்ந்தழியா வண்ணம் இருப்பாயே! (2)

### கூடக் கிடைக்குமோ!

545 இருப்பாய் இருந்திடப்பே ரின்பவெளிக் கேநமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ?
அருட்பாய் நமக்காக ஆளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வா! கண்டாய், வஞ்சநெஞ்சே!

## உன்னைக் குறை சொல்லி என்ன ?

546 வஞ்சகமோ? பண்டையுள வாதனையால் நீஅலைந்து
கொஞ்சம்உற்ருய்; உன்னைக் குறைசொல்ல
[வாயும்உண்டோ?
'அஞ்சல்அஞ்சல்' என்றிரங்கும் ஆனந்த மாகடற்கீழ்
நெஞ்சமே! என்போல நீஅழுந்த வாராயோ? (4)

## ஆல்நிழற்கீழ் அமர்ந்தவனைப் பார்.

547 வாரா வரவாய், வடநிழற்கீழ் வீற்றிருந்த
பூராயம் நம்மைப் புலப்படுத்த வேண்டியன்ரே?
ஓராயோ? நெஞ்சே! உருகாயோ? உற்றிருந்து
பாராயோ? அவ்வுருவைப் பார்க்கநிறை வாய்விடுமே.

## உன்னால் நான் பிழைக்க

548 வாயாதோ இன்பவெள்ளம்! வந்துன் வழியாகப்
பாயாதோ? நானும் பயிராய்ப் பிழையேனே!
ஓயாமல் உன்னி உருகும்நெஞ்சே! அந்நிலைக்கே
தாயான மோனன்அருள் சந்திக்க வந்திடுமே. (6)

## வந்த வேலையை மறந்து பந்தக்காலைப் பிடித்தாய்.

549 வந்த வரவை மறந்துலகாய் வாழ்ந்து, கன்ம
பந்தமுற உன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யார்?
இந்தமதி ஏன்உனக்கிங் கென்மதிகேள்! என்னாலே
சந்ததம்நெஞ் சே!பரத்திற் சாரின்இன்பம்உண்டாமே

## மனமே, நீ தென்புலத்தாரோடு சேர்.

550 இன்பமய மாய்உலகம் எல்லாம் பிழைப்பதற்குன்
அன்பு நிலை என்பார்; அதுவும்நினை அன்றியுண்டோ?
உன்புலத்தையோரின் அருட்கொப்பாவாய்! நெஞ்சே! நீ
தென்புலத்தா ரோடிருந்து செய்பூசை கொண்டருளே.

## முத்தி நிலையில் மனம்

551 அருளேஓர் ஆலயமா ஆனந்த மாய்இருந்த
பொருளோ டியானிருக்கப், போய்ஒளித்த நெஞ்சே! நீ
மருள் நீர் முயற்கோடோ? வான்மலரோ? பேய்த்
[தேரோ?
இருள்தீர நீஉறைந்த தெவ்விடமோ? காணேனே! (9)

## மனமே, மறுபடி பிறவாதே.

552 எவ்விடத்தும்,பூரணமாம்எந்தைபிரான்தண்ணருளே,
அவ்விடத்தே உன்னைநெஞ்சே! ஆராயிற் கண்டிலனே;
அவ்விடத்து மாயையிலே மாண்டனையோ?
[அவ்விடமுஞ்
செவ்விடமே; நீயுஞ் செனனமற்று வாழியவே! (10)

# 29. காடும் கரையும்

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

## மனக் குரங்கு

553 காடும் கரையும் மனக்குரங்கு
காலவிட் டோட, அதன்பிறகே
ஓடும் தொழிலாற் பயன்உளதோ?
ஒன்ருய்ப், பலவாய், உயிர்க்குயிராய்
ஆடுங் கருணைப் பரஞ்சோதி
அருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவம் இதுகண்டீர்;
சேர வாரும் செகத்தீரே! (1)

## சைவ சமயமே சமயம்.

554 சைவ சமய மேசமயம்;
சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளிக்
காட்டும், இந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலும் சமயநெறி
புகுத வேண்டா; முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச்
சேர வாரும்! செகத்தீரே! (2)

### தேகம் விழும்முன் புசிக்க வாரும்.

555 காகம் உறவு கலந்துண்ணக்
கண்டீர்! அகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்குதையோ!
இன்புற் றிட நாம் இனிஎடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாரும்! செகத்தீரே! (3)

---

## 30. எடுத்த தேகம்

கட்டளைக் கலிப்பா

### பின்னும் தடைசெய்தது ஏன்?

556 'எடுத்த தேகம் பொருள் ஆவி மூன்றும்நீ
எனக்கொன் றில்லை' எனமோன நன்னெறி
கொடுத்த போது கொடுத்ததன் றோ? பின்னுங்
குளறி நான்என்று கூத்தாட மாயையை
விடுத்த வாறும், கண் ணீரொடு கம்பலை
விலகு மாறும், என் வேட்கைப்ர வாகத்தைத்
தடுத்த வாறும், புகலாய்! சிரகிரித்
தாயு மான தயாபர மூர்த்தியே! (1)

நீயே சுவாமி.

557 நோயும் வெங்கலிப் பேயும் தொடர நின்
நூலிற் சொன்ன முறைஇய மாதிநான்
தோயும் வண்ணம் எனைக்காக்கும் காவலும்;
தொழும்பு கொள்ளும் சுவாமியும் நீகண்டாய்!
'ஓயும் சன்மம்; இனிஅஞ்சல் அஞ்சல்!என்
றுலகங் கண்டு தொழஓர் உருவிலே
தாயும் தந்தையு மானோய்! சிரகிரித்
தாயு மான தயாபர மூர்த்தியே! (2)

---

## 31. முகமெலாம்

கலிநிலைத் துறை

ஏழை என்செய்கோ!

558 முகமெ லாங்கண்ணீர் முத்தரும் பிடச்,செங்கை முகிழ்ப்ப,
அகமெ லாம்குழைந் தானந்த மாகநல் லறிஞர்
இகமெ லாம்தவம் இழைக்கின்றார்; என்செய்கோ ஏழை
சகமெ லாம்பெற நல்லருள் உதரமாச்சமைந்தோய்!(1)

---

## 32. திடமுறவே

கொச்சகக் கலிப்பா

### இனிப் படமுடியாது

559 திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனக்கென் றெண்ணி, நின்னைக் கைகுவித்தோன்
[நான் அலனோ?
அடைவுகெட்ட பாழ்மாயை ஆழியிலே இன்னம்அல்
படமுடியா; தென்னுவிப் பற்றே! பராபரமே! [லல்

### ஒருகால் வாராயோ ?

560 ஆராமை கண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோ? வந்து வருத்தமெல்லாந் தீராயோ?
பூராய மாகஅருட் பூரணத்தில் அண்டமுதற்
பாராதி வைத்த பதியே! பராபரமே! (2)

561 வாழாது வாழ,உனை வந்தடைந்தோர் எல்லாரும்
ஆழாழி யென்ன அருளானார்; அழுக்காற்றோ
டேழாய் எனஉலகம் ஏசும்இனி நான்ஒருவன்
பாழாகா வாறுமுகம் பார்! நீ பராபரமே! (3)

### நான்காணும் தரமோ ?

562 உள்ளத்தி னுள்ளே ஒளித்தென்னை ஆட்டுகின்ற
கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ?
வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன்; பராபரமே! (4)

## பூவும் புல்லும்

563 'வாவிக் கமலமலர் வண்டாய்த் துவண்டு துவண்'
டாவிக்குள் நின்றஉனக் கன்புவைத்தார்க்
[கஞ்சலென்பாய்!
பூவிற்கும் வான்கடையிற் புல்விற்போர் போல
பாவிக்க மாட்டேன் பதியே! பராபரமே! [ஒன்றைப்

## காதல் வெள்ளம்

564 'விண்ணுறு வெற்பின் விழுந்தாங் கென' மார்பிற்
கண்ணுறு பாய்ச்சிடும்என் காதல்வெள்ளங் கண்டிலை
தண்ணுறு சாந்தபதத் தற்பரமே! நால்வேதப் [யோ
பண்ணுறும் இன்பப் பதியே! பராபரமே! (6)

## கண்டிலையோ!

565 'கூடியநின் சீரடியார் கூட்டம்என்றே வாய்க்கும்' என
வாடியஎன் நெஞ்சம்முக வாட்டமும்நீ கண்டிலையோ?
தேடியநின் சீருஊத் திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடியநான் கண்டாய்! பதியே! பராபரமே! (7)

## தாய்க்கு உபசாரம் சொல்லவேண்டுமோ!

566 நெஞ்சத்தி னூடே நினைவாய், நினைவூடும்
அஞ்சலென வாழும்என தாவித் துணைநீயே
சஞ்சலமாற் றினை ;இனிமேல் தாய்க்குபசா ரம்புகன்று
பஞ்சரிக்க நான்ஆர்? பதியே! பராபரமே! (8)

## பத்திநெறி காட்டுக.

567 புத்திநெறி யாகஉனைப் போற்றிப் பலகாலும்
முத்திநெறி வேண்டாத மூடனேன், ஆ!கெடுவேன்;
சித்திநெறிக் கென்கடவேன்? சீரடியார்க் கேவல்செயும்
பத்திநெறிக் கேனுமுகம் பார்!நீ பராபரமே! (9)

முத்திக்குத் தகுதி யுடையவனே ?

568 கண்டறியேன்; கேட்டறியேன்; காட்டுநினை யே இதயம்
கொண்டறியேன்; முத்தி குறிக்குந் தரமுமுண்டோ?
தொண்டறியாப் பேதைமையேன் சொல்லேன் நின்
[தொன்மையெல்லாம்;
பண்டறிவாய் நீயே பகராய்! பராபரமே! (10)

---

## 33. தன்னை

........

என்ன பலன் கண்டாய்?

569 தன்னை அறியத் தனதருளால் தான்உணர்த்தும்
மன்னைப் பொருள் எனவே வாழாமற் பாழ்நெஞ்சே !
பொன்னைப், புவியை, மடப் பூவையரை, மெய்யெனவே
என்னைக்கவர்ந்திழுத்திட்டென்னபலன்கண்டாயே? (1)

---

## 34. ஆக்குவை

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

எல்லாம் செய்வாய்.

570 ஆக்குவை மாயை யாவும்; நொடியினில் அவற்றை மாள
நீக்குவை; நீக்க மில்லா நினைப்பொடு மறப்பு மாற்றிப்
போக்கொடு வரவும் இன்றிப் புனிதநல் லருளானந்தம்
தாக்கவும்செய்வாயன்றோ?சச்சிதானந்தவாழ்வே! (1)

---

## 35. கற்புறு சிந்தை

571 கற்புறு சிந்தை மாதர்
கணவரை யன்றி வேருேர்
இற்புறத் தவரை நாடார் ;
யாங்களும் இன்ப வாழ்வும்
தற்பொறி யாக நல்கும்
தலைவநின் அலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோம் கண்டாய் !
பூரணு னந்த வாழ்வே ! (1)

572 முருந்திள நகையார் பார
முலைமுகந் தழுவிச், செவ்வாய்
விருந்தமிர் தென அருந்தி,
வெறியாட்டுக் காளாய், நாளும்
இருந்தலோ காய தப்பேர்
இனத்தனுய் இருந்த ஏழை
பொருந்தவும் கதிமேல் உண்டோ?
பூரணு னந்த வாழ்வே ! (2)

### மற்று யார் அருள வல்லவர் ?

573 தீதெலாம் ஒன்ரும் வன்மை,
செறிந்திருட் படலம் போர்த்த
பாதகச் சிந்தை பெற்ற
பதகன்உன் பாத நீழல்

ஆதர வுடைய உள்ளன்
பருள்கிலை யாயின், மற்றியார்
போதனை செய்ய வல்லார்?
பூரணு னந்த வாழ்வே! (3)

574 நாதனை, நாதா தீத
நண்பனை; நடுவாய் நின்ற
நீதனைக் கலந்து நிற்க,
நெஞ்சமே! நீவா என்ருல்
வாதனை பெருக்கி என்னை
வசஞ்செய்து மனம்துன் மார்க்க
போதனை செய்தல் நன்ரே?
பூரணு னந்த வாழ்வே! (4)

## உனக்குப் புண்ணியம்.

575 எண்ணிய எண்ணம் எல்லாம்
இறப்புமேற் பிறப்புக் காசை
பண்ணி,என் அறிவை எல்லாம்
பாழாக்கி, எனைப்பா ழாக்கும்
திண்ணிய வினையைக் கொன்று,
சிறியனை உய்யக் கொண்டால்
புண்ணியம் நினக்கே யன்ரே?
பூரணு னந்த வாழ்வே! (5)

## எனக்கு என்று ஒன்று உண்டோ!

576 பத்திநீ: பத்திக் கான
பலனும்நீ: பலவாச் சொல்லும்
சித்திநீ: சித்தர் சித்தித்
திறமும்நீ; திறமார் மோன

முத்திநீ ; முத்திக் கான
முதலும்நீ ; முதன்மை யான
புத்திநீ ; எனக்கொன் றுண்டோ?
பூரணா னந்த வாழ்வே ! (6)

## காலம் வீணே போயினது.

577 தாயினும் இனிய நின்னைச்
சரணென அடைந்த நாயேன்,
பேயினுங் கடைய னாகிப்
பிதற்றுதல் செய்தல் நன்றோ ?
தீயிடை மெழுகாய் நொந்தேன் ;
தெளிவிலேன் வீணே காலம்
போயின ; தாற்று கில்லேன் ;
பூரணா னந்த வாழ்வே ! (7)

# 36. மலைவளர் காதலி

பன்னிரு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

## ஒன்று உண்டேல், எல்லாம் உண்டு.

578 பதியுண்டு ; நிதியுண்டு ; புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு ; தவிசுண்டு ; திட்டாந்த மாக யம
படரெனுந் திமிரம்அணுகாக்
கதியுண்டு ; ஞானமாங் கதிருண்டு ; சதிருண்டு ;
காயசித் திகளுமுண்டு ;
கறையுண்ட கண்டர்பால் அம்மை! நின் தாளிற்
கருத்தொன்றும் உண்டாகுமேல்,

நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானஆ னந்தவொளியே!
நாதாந்த ரூபமே! வேதாந்த மோனமே!
நானெனும் அகந்தைதீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே!
மதுசூ தனன்தங்கையே!
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே! (1)

என் மனப்படி அருள்

579 தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே,
சிற்றிடையி லே, நடையிலே,
சேலொத்த விழியிலே, பாலொத்த மொழியிலே,
சிறுபிறை நுதற்கீற்றிலே,
பொட்டிலே, அவர்கட்டு பட்டிலே, புனைகந்த
பொடியிலே, அடியிலே,மேற்
பூரித்த முலையிலே, நிற்கின்ற நிலையிலே,
புந்திதனை நுழையவிட்டு,
நெட்டிலே அலையாமல்; அறிவிலே,பொறையிலே,
நின்னடியர் கூட்டத்திலே,
நிலைபெற்ற அன்பிலே, மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்தி லே,உன் இருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளும் அருள்வையோ?
வளமருவு தேவையரசே!
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே! (2

மறந்து உய்வனோ!

580 பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
பொய்யென் றெனைக்காட்டிஎன்
போதத்தின் நடுவாகி, அடிஈறும் இல்லாத
போதபூ ரணவெளிக்குள்

ஏதும்அற நில்லென் றுபாயமா வைத்துநினை
வெல்லாஞ்செய் வல்லசித்தாம்
இன்பஉரு வைத்தந்த அன்னையே! நின்னையே
எளியேன் மறந்துய்வனோ?
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்கும்உட் கண்ணிலார்க்கும்,
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்,
வீறுவா தம்புகலும்வாய்
வாதநோ யாளர்க்கும் எட்டாத முக்கணுடை
மாமருந்துக் கமிர்தமே!
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்ணுமையே! (3)

## என் தொழிலெலாம் சாண் கும்பியின் பொருட்டாயின!

581 மிடியிட்ட வாழ்க்கையால் உப்பிட்ட கலமெனவும்
மெய்யெலாம் உள்ளுடைந்து,
வீறிட்ட செல்வர்தம் தலைவாயில் வாசமாய்
வேதனைகள் உற வேதனும்
துடியிட்ட வெவ்வினையை ஏவினன்; பாவிநான்
தொடரிட்ட தொழில்களெல்லாம்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
தொண்டர்பணி செய்வதென்றோ?
அடியிட்ட செந்தமிழின் அருமையிட் டாருரில்
அரிவையோர் பரவைவாயில்
அம்மட்டும் அடியிட்டு நடைநடந் தருள்அடிகள்
அடிஈது முடிஈதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே!
வளமருவு தேவையரசே!
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்ணுமையே! (4)

## தேவியின் திருநாமங்கள்

582 பூரணி, புராதனி, சுமங்கலை, சுதந்தரி,
புராந்தகி, த்ரியம்பகி, எழிற்
புங்கவி, விளங்குசிவ சங்கரி, சகச்ரதள
புட்பமிசை வீற்றிருக்கும்
நாரணி, மனாதீத நாயகி, குணாதீத
நாதாந்த சத்தி, என்றுன்
நாமமே உச்சரித் திடும்அடியர் நாமமே
நான்உச்ச ரிக்கவசமோ!
ஆரணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ
அகிலாண்ட கோடிஈன்ற
அன்னையே! பின்னையுங் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூபமயிலே!
வாரணியும் இருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவையரசே!
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்ணுமையே! (5)

## எதற்கும் வழி இல்லை.

583 பாகமோ பெறஉனைப், பாடஅறி யேன்;மலப்
பரிபாகம் வரவும்மனதிற்
பண்புமோ சற்றும்இலை; நியமமோ செய்திடப்
பாவியேன் பாபரூப
தேகமோ திடமில்லை; ஞானமோ கனவிலும்
சிந்தியேன்; பேரின்பமோ
சேரஎன் றூற்கள்ள மனதுமோ மெத்தவும்
சிந்திக்கு தென்செய்குவேன்!

மோகமோ, மதமோ, குரோதமோ, லோபமோ,
முற்றுமாற் சரியமோதான்
முறிஇட் டெனைக் கொள்ளும்; நிதியமோ தேடஎனின்
மூசுவரி வண்டுபோல
மாகம்ஓ டவும் வலன்; எனை ஆள வல்லையோ?
வளமருவு தேவையரசே!
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்ணுமையே! (6)

நானிலந்தனில் அலையவோ!

584 தூளேறு தூசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கி, நாளும்
சுழலேறு காற்றினிடை அழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவையெல்லாம்,
நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றில்
நட்பேற உள்ளுடைந்து,
நயனங்கள் அற்றதோர் ஊரேறு போலவே
நானிலந் தனில்அலையவோ?
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று,
விரையேறு மாலைசூடி,
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங்கூந்தலாய்!
வாளேறு கண்ணியே! விடையேறும் எம்பிரான்
மனதுக் கிசைந்தமயிலே!
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்ணுமையே! (7)

பேய்களும் மந்திரமும்

585 பூதமொடு பழகிவளர் இந்திரிய மாம்பேய்கள்,
புந்திமுத லானபேய்கள்,
போராடு கோபாதி ராட்சப் பேய்கள், என்
போதத்தை ஊடழித்து

வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தான்; இவ் வல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந்த் ராதிக்ய
வித்தையை வியந்தருள்வையோ?
நாதவடி வாகிய மகாமந்த்ர ரூபியே!
நாதாந்த வெட்டவெளியே!
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே!
ஞானஆ னந்தமயிலே!
வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே!
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்ணுமையே! (8)

---

## 37. அகிலாண்ட நாயகி

சந்த விருத்தம்

### வாயுவை அடக்கினுல் வரும் வாழ்வு

586 வட்ட மிட்டொளிர் பிராண வாயுவெனும்
நிகள மோடுகம னஞ்செயும்
மனமெ னும்பெரிய மத்த யானை யைஎன்
வசம டக்கிடின் .மு மண்டலத்
திட்ட முற்றவள ராச யோகம்இவன்
யோகம் என்றறிஞர் புகழவே
ஏழை யேன்உலகில் நீடு வாழ்வன்; இனி
இங்கி தற்கும்அனு மானமோ!

பட்ட வர்த்தனர் பராவு சக்ரதர
பாக்ய மானசுக யோகமும்,
பார காவிய கவித்வ நான்மறை
பராய ணஞ்செய்மதி யூகமும்
அட்ட சித்சியும் நல்அன்ப ருக்கருள
விருது கட்டியபொன் அன்னமே!
அண்ட கோடிபுகழ் காவை வாழும்அகி
லாண்ட நாயகிஎன் அம்மையே! (1)

---

## 38. பெரிய நாயகி

---

### சிவபோக விளைவு

587 காற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி
கன்மப் புனற்குள்ஊறும்
கடைகெட்ட, நவவாயில் பெற்றபசு மட்கலக்
காயத்துள் எனை இருத்திச்,
சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
துருத்திக்குள் மதுவென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேன்? அருள்
தோயம்நீ பாய்ச்சல்செய்து,
நாற்றைப் பதித்ததென மோனமாம் பயிரதனை
நாட்டிப், புலப்பட்டியும்
நமனென தீப்பூடும் அணுகாமல், முன்னின்று
நாடுசிவ போகமான
பேற்றைப் பகுத்தருளி எனை ஆள வல்லையோ?
பெரியஅகி லாண்டசோதி
பெற்றநா யகி! பெரிய கயிலைமா நகர்மருவு
பெரியநா யகிஅம்மையே! (1)

## 39. தந்தை தாய்

588 தந்தைதாய், மகவு, மனை, வாழ்க்கை; யாக்கை
சகம் அனைத்தும் மௌனி அருள் தழைத்தபோதே
இந்திரசா லங்கனவு கானல் நீராய்
இருந்ததுவே ; இவ்வியற்கை என்னே! என்னே!!

589 என்னைநான் கொடுக்கஒருப் பட்ட காலம்
யாதிருந்தென்? எவைபோயென்? என்னை நீங்கா
அன்னைபோல் அருள்பொழியுங் கருணை வாரி!
ஆனந்தப் பெருமுகிலே! அரசே! சொல்லாய்! (2)

590 அரசே! நின் திருக்கருணை அல்லா தொன்றை
அறியாத சிறியேன்நான் அதனால் முத்திக்
கரைசேரும் படிக்குன் அருட் புணையைக் கூடும்
கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன்.

591 கண்டேன் இங் கென்னையும், என் றனையும் நீங்காக்
கருணையும் நின் றன்னையுநான் கண்டேன்!
கண்டேன்!
விண்டேன்என் றெனைப்புறம்பாத் தள்ள வேண்டா;
விண்டது நின் அருட்களிப்பின் வியப்பாலன்றோ?

592 ஓவென்ற சுத்தவெளி ஒன்றே நின்றிங்
குயிரையெல்லாம் வம்மினென உவட்டா இன்பத்
தேவென்ற நீகலந்து கலந்து முத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ, செகவி லாசம்? (5)

593 செகத்தைஎல்லாம் அணுவளவுஞ் சிதரு வண்ணம்
சேர்த்தணுவுள் வைப்பை; அணுத் திரளை எல்லாம்
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா ! நீ நினைத்த வாறே யெல்லாம். (6)

594 சொல்லாலே வாய்துடிப்ப தல்லால் நெஞ்சம்
துடித்திருகண் நீர் அருவி சொரியத் தேம்பிக்
கல்லாலே இருந்தநெஞ்சுங் கல்லால் முக்கட்
கனியேநெக் குருகிடவுங் காண்பேன் கொல்லோ !

---

## 40. பெற்றவட்கே.

### அன்பரும் வன்பரும்

595 பெற்றவட்கே தெரியும் அந்த வருத்தம் ; பிள்ளை
பெருப்பேதை அறிவாளோ ? பேரா னந்தம்
உற்றவர்க்கே கண்ணீர்கம் பலைஉண் டாகும் ;
உருதவரே கல்நெஞ்சம் உடைய ராவார். (1)

596 ஆவாஎன் றழுதுதொழுங் கைய ராகி,
அப்பனே ! ஆனந்த அடிக ளே ! நீ
வாவாஎன் றவர்க்கருளுங் கருணை எந்தாய் !
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறு நீயே ? (2)

### அன்பும் நீயே தரவேண்டும்.

597 நீயேஇங் கெளியேற்கும் தாகமோக
நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்த லாலே
பேயேற்குந் தனக்கெனவோ அன்பும் உண்டோ?
பெம்மானே! இன்னம்அன்பு பெருகப் பாராய்;(3)

### திருவடி சூட்டாய்.

598 பாராயோ? என்துயரம் எல்லாம் ஐயா!
பகரும்முன்னே தெரியாதோ? பாவி யேன்முன்
வாராயோ? இன்னம்ஒரு கால்ஆனாலும்
மலர்க்கால்என் சென்னிமிசை வைத்தி டாயோ?

### திருவடி ஆசை

599 வைத்திடுங்கா லைப்பிடித்துக், கண்ணின் மார்பில்
வைத்தணைத்துக் கொண்டு, கையால் வளைத்துக்
சித்தமிசைப் புகஇருத்திப் பிடித்துக்கொண்டு, [கட்டிச்,
தியக்கமற இன்பசுகம் சேர்வ தென்றோ? (5)

### அறிந்திருந்தும் தள்ளினாய்.

600 சேராமற் சிற்றினத்தைப் பிரிந்தெந் நாளும்
திருவடிப்பே ரினத்துடனே சேரா வண்ணம்
ஆராக நான்அலைந்தேன் அரசே! நீதான்
அறிந்திருந்தும் மாயையில்ஏன் அழுந்த
[வைத்தாய்? (6)

### மெய்யோ. பொய்யோ?

601 வைத்தபொருள் உடல்ஆவி மூன்றும் நின்கை
வசம்எனவே யான்கொடுக்க வாங்கிக் கொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ? பொய்யோ?
சிறியேற்கிங் குளவுரையாய்! திகையா வண்ணம்.

## இரண்டுகால் மாடு

602 திகையாதோ? எந்நாளும் பேரானந்தத்
தெள்ளமுதம் உதவாமல் திவலை காட்டி
வகையாக அலக்கழித்தாய்! உண்டுடுத்து
வாழ்ந்தேன் நான் இரண்டுகால் மாடு போலே.

## வீடே வேண்டுவது.

603 மாடு, மக்கள், சிற்றிடையார், செம்பொன் ஆடை,
வைத்தகன தனமேடை மாட கூடம்,
வீடும்என் பால் தொடர்ச்சியோ? இடைவிடாமல்
மிக்ககதி வீடன்றோ விளங்கல் வேண்டும். (9)

## என்னை விட்டிடாதே

604 விளங்களனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற
வேதகமே! போதகமே! விமல வாழ்வே!
களங்கரகி தப்பொருளே! என்னை நீங்காக்
கண்ணுதலே! நாதாந்தக் கட்சிப் பேறே! (10)

605 நாதமே! நாதாந்த வெளியே! சுத்த
ஞாதுருவே! ஞானமே! ஞேய மே! நல்
வேதமே! வேதமுடி வான மோன
வித்தே! இங் கென்னை இனி விட்டி டாதே; (11)

## 41. கல்லாலின்

### துரும்பைப் பற்றிக் கடல் கடத்தல்

606 கல்லாலின் நீழல்தனில் ஒருநால் வர்க்கும்
கடவுள்நீ உணர்த்துவதும் கைகாட் டென்றூற்,
சொல்லாலே சொலப்படுமோ? சொல்லும் தன்மை
துரும்புபற்றிக் கடல்கடக்கும் துணிபே யன்றோ?

### அருள்கொண்டே அறியவேண்டும்.

607 அன்றோ? ஆமோ? எனவும் சமய கோடி
அத்தனையும் வெவ்வேறாய் அரற்ற நேரே
நின்றாயே! நினைப்பெறுமா றெவ்வா றிங்கே
நின்னருள்கொண் டறிவதல்லால் நெறிவே
[றுண்டோ! (2)

### நாங்கள் வேறோ?

608 நெறிபார்க்கில் நின்னையன்றி அகிலம் வேறோ?
நிலம்நீர்தீக் கால்வானும் நீய லாத
குறியாதும் இல்லையென்றால் யாங்கள் வேறோ?
கோதைஒரு கூறுடையாய்! கூறாய்! கூறாய்!! (3)

### உன் மகிமை நன்று.

609 கூறாய ஐம்பூதச் சுமையைத் தாங்கிக்,
குணமிலா மனமெனும்பேய்க் குரங்கின் பின்னே
மாருத கவலையுடன் சுழல என்னை
வைத்தனையே! பரமே! நின் மகிமை நன்றே. (4)

### சிறிது வெளியானுல்....

610 நன்றெனவும் தீதெனவும் எனக்கிங் குண்டோ !
நானுகி நீஇருந்த நியாயம் சற்றே
இன்றெனக்கு வெளியானுல், எல்லாம் வல்ல
இறைவா! நின் அடியருடன் இருந்து வாழ்வேன்.

### உன் பார்வை வேண்டும்.

611 வாழ்வெனவும் தாழ்வெனவும் இரண்டாப் பேசும்
வையகத்தார் கற்பனையாம் மயக்க மான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
பரமே! நின் ஆனந்தப் பார்வை யெங்கே? (6)

### அலந்து போனேன்.

612 'எங்கேஎங் கேஅருள்' என் றெமைஇ ரந்தான்
ஏழைஇவன் எனவும் எண்ணி இச்சை கூரும்
அங்கேஅங் கேஎளிவந் தென்னை ஆண்ட
ஆரமுதே! உனைக் காண்பான் அலந்து
[போனேன். (7)

### போனதை நினைந்து வருந்துகின்றேன்.

613 போனநாட் கிரங்குவதே தொழிலா இங்ஙன்
பொருந்துநாள் அத்தனையும் போக்கினேன்;என்
ஞானநா யகனே! நின் மோன ஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கும் நாள்எந் நாளோ?

### எமனது நியாயம்.

614 நாட்பட்ட கமலம்என்ன இதயம் மேவும்
நறுந்தேனே! துன்மார்க்க நாரி மார்கண்
வாட்பட்ட காயம்இந்தக் காயம் என்றே
வன்கூற்றும் உயிர்பிடிக்க வரும்அந் நீதி? (9)

வேறு சிருட்டி

615 நீதிஎங்கே? மறைஎங்கே? மண்விண் எங்கே?
நித்தியராம் அவர்கள் எங்கே? நெறிதப் பாத
சாதிஎங்கே? ஒழுக்கம்எங்கே? யாங்கள் எங்கே?
தற்பர! நீ பின்னும் ஒன்றைச் சமைப்பதானல். (10)

வேறு பொருளை நாடேன்.

616 ஆனுலும் யானெனதிங் கற்ற எல்லை
அதுபோதும் அதுகதிதான் அல்ல என்று
போனுலும் யான்போவன் அல்லால் மோனப்
புண்ணியனே! வேறும்ஒரு பொருளை நாடேன்.

அப்போது இருக்குமோ!

617 பொருளே! நின் பூரணம்மே லிட்ட காலம்
போக்குவர வுண்டோ? தற் போதம் உண்டோ?
இருள்தான் உண் டோ? அல்லால் வெளிதான்
[உண்டோ?
இன்பம்உண்டோ? துன்பம்உண்டோ? யாம்அங்
[குண்டோ? 12

என்னைப்போல் உண்டோ?

618 உண்டோ? நீ படைத்தவுயிர்த் திரளில் என்போல்
ஒருபாவி; தேகாதி உலகம் பொய்யாக்
கண்டேயும் எள்ளளவுத் துறவு மின்றிக்,
காசினிக்குள் அலைந்தவரார்? காட்டாய்!தேவே!

மூவர் தமிழ்

619 தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாள் முக்கட்
செங்கரும்பே! மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொல் முற்றுமோ? தான். (14)

## என் கண்கலக்கம் பார்.

620 முற்றுமோ எனக்கினிஆ னந்த வாழ்வு
மூதறிவுக் கினியாய்! நின் முளரித் தாளிற்
பற்றுமோ சற்றுமில்லை; ஐயோ! ஐயோ!!
பாவிபடும் கண்கலக்கம் பார்த்தி லாயோ ? (15)

## பாரதே பார்த்திருக்க

621 பார்த்தனஎல் லாம்எழியும்; அதனுற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்கப் பரமே! மோன
மூர்த்திவடி வாய்உணர்த்துங் கைகாட் டுண்மை
முற்றியென தல்லல்வினை முடிவ தென்றே ? (16)

## ஆக்கல் ஆழித்தலின் பொருள்

622 'என்றுளை நீ யன்றுளம்யாம்' என்ப தென்னை?
இதுநிற்க. எல்லாந்தாம் இல்லை யென்றே
பொன்றிடச்செய் வல்லவன் நீ எமைப்ப டைக்கும்
பொற்புடையாய் என்னினது பொருந்தி டாதே ?

## இருந்தபடி இருப்பது

623 பொருந்துசகம் அனைத்தினையும் பொய்பொய் யென்று
புகன்றபடி மெய்யென்றே போத ரூபத்
திருந்தபடி என்றிருப்ப தன்றே யன்றே
எம்பெருமான்!.யான்கவலை எய்தாக் காலம்! (18)

## குறைவற அளித்தால் குறைவாமோ !

624 காலமே! காலம்ஒரு மூன்றும் காட்டுங்
காரணமே! காரணகா ரியங்கள் இல்லாக்
கோலமே! எனைவாவா என்றுகூவிக்
குறைவறநின் அருள்கொடுத்தாற் குறைவோ ?
[சொல்லாய்! (19)

625 சொல்லாய தொகுதியெல்லாம் கடந்து நின்ற
சொரூபானந் தச்சுடரே ! தொண்ட னேனைக்
கல்லாகப் படைத்தாலும் மெத்த நன்றே;
கரணமுடன் நான் உறவு கலக்க மாட்டேன். (20)

## கலங்காத தீரர்

626 கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்,
கடவுள் ! உனைக் காணவே காய மாதி
புலங்காணார் ; நான்ஒருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை ? கண்டாய் !

## நான்படும் பாடு தெரிய வில்லையோ ?

627 கண்டிலையோ ? யான்படும்பா டெல்லாம் மூன்று
கண்ணிருந்தும் ; தெரியாதோ ? கசிந்துள் [ என்பார்
தொண்டரடித் தொண்டனன்றோ ? கருணை நீங்காச்
சுத்தபரி பூரணமாம் சோதி நாதா ! (22)

## பிரிவாற்றுமை

628 சோதியாய் இருட்பிழம்பைச் சூறை யாடும்
தூவெளியே! எனைத்தொடர் ந்து தொடர்ந்தெந் [ நாளும்
வாதியா நின்றவினைப் பகையை வென்ற
வாழ்வே! இங் குனைப்பிரிந்து மயங்கு கின்றேன்.

## கும்பிடல் அன்றி இல்லை.

629 மயக்குறும்என் மனம்அணுகாப் பாதை காட்டி,
வல்வினையைப் பறித்தனையே; வாழ்வே! நான்என்
செயக்கடவேன்? செயல்எல்லாம் நினதே என்று
செங்கைகுவிப் பேன் அல்லாற் செயல்வே றில்லை.

## சமய நிலை

630 வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்,
விளங்குபரம் பொருளே! நின் விளையாட்டடல்லால்,
மறுபடும் கருத்தில்லை; முடிவில் மோன
வாரிதியின் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா!

631 அம்மா! ஈ ததிசயந்தான் அன்றே! அன்றே!!
அகண்ட நிலை ஆக்கிஎன்னை அறிவாம் வண்ணம்
சும்மாவே யிருக்கவைத்தாய் ஐயா! ஆங்கே
சுகமயமாய் இருப்பதல்லாற் சொல்வான் என்னே!

## எனக்கு வினை வந்தது எவ்வாறு?

632 என்னேநான் பிறந்துழல வந்த வாறிங்
கெனக்கெனவோர் செயலிலையே; ஏழை யேன்பால்
முன்னேசெய் வினைஎனவும் பின்னே வந்து
மூளும்வினை எனவும்வர முறைஎன்? எந்தாய் (27)

## ஏகதேசம் உண்டோ?

633 தாயான தண்ணருளை நிரம்ப வைத்துத்
தமியேனைப் புரவாமல் தள்ளித் தள்ளிப்
போயான தென்கொல்ஐயா! ஏக தேசம்
பூரணத்துக் குண்டோதான்? புகலல் வேண்டும்!

## இதுதான் இரக்கமோ!

634 புகலரிய நின்விளையாட் டென்னே எந்தாய்!
புன்மையறி வுடையஎன்னைப் பொருளாப் பண்ணி
இகல்விளைக்கும மலம்மாயை கன்மத் தூடே
இடர்உறவும் செய்தனையே! இரக்கம் ஈதோ? (29)

## என் நெஞ்சம், என் நெஞ்சம்?

635 இரக்கமொடு பொறைஈதல் அறிவா சாரம்
இல்லேன்நான் நல்லோர்கள் ஈட்டம் கண்டாற்
கரக்கும்இயல் புடையேன்பாழ் நெஞ்சம் எந்தாய் !
கருந்தாதோ? வல்லுருக்கோ? கரிய கல்லோ? (30)

---

# 42. பராபரக் கண்ணி

636 சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாராதி ஆண்ட பதியே ! பராபரமே ! (1)

637 கண்ணாரக் கண்டோர் கருப்பொருள்கா ணமல்அருள்
விண்ணா டிருந்தஇன்ப வெற்பே பராபரமே ! (2)

638 சிந்தித்த எல்லாம்என் சிந்தைஅறிந் தேஉதவ
வந்த கருணை மழையே ! பராபரமே ! (3)

639 ஆராஅமுதே ! அரசே ! ஆனந்த வெள்ளப்
பேராறே ! மோனப் பெருக்கே ! பராபரமே ! (4)

640 ஆரறிவார் என்ன அனந்தமறை ஓலமிடும்
பேரறிவை ! இன்பப் பெருக்கே ! பராபரமே ! (5)

641 உரையிறந்த அன்பர்உளத் தோங்கொளியாய் ஓங்கிக்
கரையிறந்த இன்பக் கடலே ! பராபரமே ! (6)

16

642 எத்திக்கு ந் தானுகி என் இதயத் தேஊறித்
தித்திக்கும் ஆனந்தத் தேனே! பராபரமே! (7)

643 திக்கொடுகீழ் மேலும் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே! பராபரமே! (8)

644 முத்தே! பவளமே! மொய்த்தபசும் பொற்சுடரே!
சித்தே!என் உள்ளத் தெளிவே! பராபரமே! (9)

645 கண்ணே! கருத்தே! என் கற்பகமே! கண்நிறைந்த
விண்ணே! ஆனந்த வியப்பே! பராபரமே! (10)

646 வாக்காய், மனதாய் மனவாக் கிறந்தவர்பால்
தாக்காதே தாக்குந் தனியே! பராபரமே! (11)

647 பார்த்தஇடம் எல்லாம் பரவெளியாய்த் தோன்றஒரு
வார்த்தை சொல்லவந்த மனுவே! பராபரமே! (12)

648 வானந்தம் மண்ணினந்தம் வைத்துவைத்துப் பார்க்க [எனக்
கானந்தம் தந்த அரசே! பராபரமே! (13)

649 அன்பைக் பெருக்கிஎன தாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே! இறையே! பராபரமே! (14)

650 வானமெல்லாங் கொண்ட மவுனமணிப் பெட்டகத்துக்
கானபணி யான அணியே! பராபரமே! (15)

651 ஓடும் இருநிதியும் ஒன்ருகக் கண்டவர்கள்
நாடும் பொருளான நட்பே! பராபரமே! (16)

652 சித்த நினைவும் செயும்செயலும் நீயெனவாழ்
உத்தமர்கட் கான உறவே! பராபரமே! (17)

653 போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றி
வேதாந்த வீட்டில் விளக்கே! பராபரமே! [யெனும்

654 முத்தாந்த வீதி முளரிதொழும் அன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே! பராபரமே! (19)

655 ஈனந் தரும்உடலம் என்னதியான் என்பதற
ஆனந்தம் வேண்டி அலந்தேன்! பராபரமே! (20)

656 என்புருகி, நெஞ்சம் இளகிக் கரைந்துகரைந்
தன்புருவாய் நிற்க அலந்தேன், பராபரமே! (21)

657 சுத்த அறிவாய்ச் சுகம்பொருந்தின் அல்லால்என்
சித்தம் தெளியாதென் செய்வேன்? பராபரமே! (22)

658 மாறு அனுபூதி வாய்க்கின் அல்லால் என்மயக்கம்
தேறுதென் செய்வேன்? சிவமே! பராபரமே! (23)

659 தாகமறிந் தின்பநிட்டை தாராயேல்? ஆகெடுவேன்!
தேகம் விழுந்திடின்என் செய்வேன்? பராபரமே! (24)

660 அப்பா!என் எய்ப்பில்வைப்பே! ஆற்றுகிலேன்; [போற்றிஎன்று
செப்புவதல் லால்வேறென் செய்வேன்? பராபரமே!

661 உற்றறியு மென்அறிவும் உட்கருவி போற்சவிமாண்
டற்றுமின்பம் தந்திலையே! ஐயா! பராபரமே! (26)

662 சொல்லால் அடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கின்
அல்லால்என் தாகம் அறுமோ? பராபரமே! (27)

663 பாராயோ! என்னைமுகம் பார்த்தொருகால் என்கவலை
தீராயோ! வாய்திறந்து செப்பாய்! பராபரமே! (28)

664 ஓயாதோ என்கவலே? உள்ளே ஆனந்தவெள்ளம்
பாயாதோ? ஐயா! பகராய்! பராபரமே! (29)

665 ஓகோ! உனைப்பிரிந்தார் உள்ளம் கனலில்வைத்த
பாகோ! மெழுகோ! பகராய்! பராபரமே! (30)

666 கூர்த்தஅறி வத்தனையுங் கொள்ளைகொடுத் [துன்னருளைப்
பார்த்தவன்நான் என்னைமுகம் பாராய்! பராபரமே!

667 கடல்அமுதே! தேனே! என் கண்ணே! கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்! நீ பராபரமே! (32)

668 உள்ளம் அறிவாய்; உழப்பறிவாய்; நான்ஏழை,
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன்; பராபரமே! (33)

669 கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலஎனக்
கென்றிரங்கு வாய்! கருணை எந்தாய்! பராபரமே! (34)

670 எண்ணாத எண்ணமெலாம் எண்ணிஎண்ணி ஏழை [நெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும்; பராபரமே! (35)

671 ஆழித் துரும்பெனவே அங்கும் இங்கும் உன்அடிமை
பாழில் திரிவதென்ன பாவம்? பராபரமே! (36)

672 கற்றஅறி வால்உனை நான் கண்டவன்போல் கூத்தாடிற்
குற்றமென்றன் நெஞ்சே கொதிக்கும், பராபரமே!

673 ஐயோ! உனைக்காண்பான் ஆசைகொண்ட தத்தனையும்
பொய்யோ? வெளியாப் புகலாய்! பராபரமே! (38)

674 துன்பக்கண் ணீரில் துளைந்தேற்குன் ஆனந்த
இன்பக்கண் ணீர்வருவ தெந்நாள்? பராபரமே! (39)

675 வஞ்சனையும் பொய்யும்உள்ளே வைத்தழுக்கா
[ருய்உள்ளும்
நெஞ்சனுக்கும் உண்டோ நெறிதான்? பராபரமே!

676 பாசம்போய் நின்றவர்போல் பாராட்டி ஆனாலும்
மோசம்போனேன் நான்; முறையோ? பராபரமே!

677 நன்றறியேன்; தீதறியேன்; நான்என்று நின்றவன்ஆர்
என்றறியேன்; நான்ஏழை; என்னே? பராபரமே! (42)

678 இன்றுபுதி தன்றே? எளியேன் படுந்துயரம்
ஒன்றும்அறி யாயோ? உரையாய்! பராபரமே! (43)

679 எத்தனைதான் சன்மம்எடுத் தெத்தனைநான் பட்டதுயர்?
அத்தனையும் நீஅறிந்த தன்றோ? பராபரமே! (44)

680 இந்தநாள் சற்றும் இரங்கிலையேல், காலன்வரும்
அந்தநாள் காக்கவல்லார் ஆர்காண்? பராபரமே! (45)

681 உற்றுற்று நாடி உளம்மருண்ட பாவியைநீ
சற்றிரங்கி ஆளத் தகாதோ? பராபரமே! (46)

682 எள்ளளவு நின்னைவிட இல்லா எனைமயக்கில்
தள்ளுதலால் என்னபலன்? சாற்றாய்! பராபரமே! (47)

683 பாடிப் படித்துலகில் பாராட்டி நிற்பதற்கோ
தேடி எனைஅடிமை சேர்த்தாய்? பராபரமே! (48)

684 சொன்னத்தைச் சொல்வதல்லால் சொல்லறஎன்
[சொல்லிறுதிக்
கென்னத்தைச் சொல்வேன்? எளியேன் பராபரமே!

685 சொல்லும் பொருளும்அற்றுச் சும்மா இருப்பதற்கே
அல்லும் பகலும்எனக் காசை பராபரமே! (50)

686 நேச நிருவிகற்ப நிட்டைஅல்லால், உன் அடிமைக்
காசையுண்டோ? நீஅறியா தன்றே? பராபரமே! (51)

687 துச்சனென வேண்டா;இத் தொல்லுலகில் அல்லல்
அச்சம் மிகஉடையேன் ; ஐயா! பராபரமே! [கண்டால்

688 கண்ணுவா.ரேனும்உனைக் கைகுவியா ராயின்அந்த
மண்ணுவார் நட்பை மதியேன்; பராபரமே! (53)

689 கொல்லா விரதம் குவலயமெல் லாம்ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சை; பராபரமே!

690 எத்தால் பிழைப்பேனோ? எந்தையே! நின்னருட்கே
பித்தானேன்; மெத்தவும்நான் பேதை; பராபரமே!

691 வாயினுல் பேசா மௌனத்தை வைத்திருந்தும்,
தாயிலார் போல்நான் தளர்ந்தேன் ; பராபரமே!

692 அன்னையிலாச் சேய்போல் அலக்கணுற்றேன்; கண்ணூர
என்னகத்தில் தாய்போல் இருக்கும் பராபரமே! (57)

693 உற்று நினைக் கில்துயரம் உள்ளுள்ளே செந்தீயாய்ப்
பற்றநொந்தேன்; என்னைமுகம் பார்நீ! பராபரமே!

694 பொய்யன்இவன் என்றுமெள்ளப் போதிப்பார்
[சொற்கேட்டுக்
கைவிடவும் வேண்டா;என் கண்ணே! பராபரமே!

695 எண்ணம் அறிந்தே, இளைப்பறிந்தே, ஏழைஉய்யும்
வண்ணம் திருக்கருணை வையாய்! பராபரமே! (60)

696 நாட்டாதே! என்னைஒன்றில் நாட்டி இதம்அகிதம்
காட்டாதே! எல்லாம்நீ கண்டாய்! பராபரமே! (61)

697 உன்னை நினைந் துன்னிறைவின் உள்ளே உலாவும்
[என்னை
அன்னைவயிற் றின்னம்அடைக் காதே! பராபரமே!

698 பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாரு
வரமெனக்குத் தந்தருள்!என் வாழ்வே! பராபரமே!

699 வந்தித்து நின்னை மறவாக் கடனுகச்
சிந்திக்க நின்னதருள் செய்யாய்! பராபரமே! (64)

700 எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய்! பராபரமே! (65)

701 வெட்டவெளிப் பேதையன்யான்; வேறுகப
[டொன்றறியேன்;
சிட்ட ருடன்சேர்!அனந்த தெண்டன், பராபரமே!

702 இரவுபகல் அற்றவிடத் தேகாந்த யோகம்
வரவும் திருக்கருணை வையாய்! பராபரமே! (67)

703 மால்காட்டிச் சிந்தை மயங்காமல் நின்றுசுகக்
கால்காட்டி வாங்காதே; கண்டாய்! பராபரமே! (68)

704 எப்பொருளும் நீஎனவே எண்ணி,நான் தோன்ருத
வைப்பைஅழி யாநிலையா வையாய்! பராபரமே! (69)

705 சும்மா இருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மால் அறிதற் கெளிதோ? பராபரமே! (70)

706 முன்னெடுபின் பக்கம் முடிஅடிநாப் பண்அறநின்
றன்னெடுநான் நிற்பதென்றே? சாற்ருய்! பராபரமே!

707 மைவண்ணந் தீர்ந்த மவுனிசொன்ன தெவ்வண்ணம்
அவ்வண்ணம் நிட்டை அருளாய்! பராபரமே! (72)

708 வித்தின்றி யாதும் விளைவதுண்டோ? நின்னருளாஞ்
சித்தின்றி யாங்களுண்டோ? செப்பாய்! பராபரமே!

709 ஆங்காரம் அற்றுன் அறிவான அன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும்; பராபரமே! (74)

710 சிந்தை அவிழ்ந்தவிழ்ந்து, சின்மயமாம் நின்னடிக்கே
வந்தவர்க்கே இன்ப நிலை வாய்க்கும்; பராபரமே! (75)

711 சொல்லாடா ஊமரைப்போல் சொல்லிறந்து; நீயாகின்
அல்லால் எனக்குமுத்தி ஆமோ? பராபரமே! (76)

712 பேச்சாகா மோனம் பிறவா முளைத்ததென்றற்
காச்சாச்சு; மேற்பயனுண் டாமோ? பராபரமே! (77)

713 கெட்டியென்றுன் அன்பர்மலம் கெட்டயர்ந்தோர், [பூரணமாம்
தொட்டிலுக்குட் சேய்போல் துயின்றார்; பராபரமே!

714 காட்ட அருளிருக்கக். காணு திருள்மலத்து
நாட்ட மெனக்குவரல் நன்றோ? பராபரமே! (79)

715 எத்தன்மைக் குற்றம் இயற்றிடினுந் தாய்பொறுக்கும்;
அத்தன்மை நின்னருளும் அன்றோ? பராபரமே! (80)

716 எத்தனையோ தேர்ந்தாலும், என்னாலே இன்பமுண்
சித்துருவே! இன்பச் சிவமே! பராபரமே! [டோ?

717 மண்ணாடுவிண் காட்டி, மறைந்துமறை யா அருளைக்
கண்ணாடுகண் ணாகஎன்று காண்பேன்? பராபரமே!

718 பஞ்சரித்து நின்னைப் பலகால் இரந்தவெல்லாம்,
அஞ்சல் எனும்பொருட்டே அன்றோ? பராபரமே! (83)

719 எங்கெங்கே பார்த்தாலும், எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ அன்றோ? பராபரமே! (84)

720 அனைத்துமாய் நின்றாயே; யான்வேறோ? நின்னை
நினைக்குமா றெங்கே? நிகழ்த்தாய்! பராபரமே! (85)

721 நின்போதத் தாலே நினைப்பும் மறப்பும் என்றால்,
என்போதம் எங்கே? இயம்பாய்! பராபரமே! (86)

722 ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமனம் எல்லாம்நீ
என்றறிந்தால் எங்கே இயங்கும்? பராபரமே! (87)

723 கொழுந்தில் வயிரமெனக், கோதறஉள் அன்பில்
அழுந்துமவர்க் கேசுகம்உண் டாகும்; பராபரமே!

724 பற்றும் பயிர்க்குப் படர்கொழுந்து போற்பருவம்
பெற்றவர்க்கே நின்னருள்தான் பேறும்; பராபரமே!

725 யோகியர்க்கே ஞான மொழுங்காம்; பே ரன்பான
தாகியரும் யோகம்முன்னே சார்ந்தோர்; பராபரமே!

726 அல்லும் பகலும் அறிவாகி நின்றவர்க்கே,
சொல்லும் பொருளும் சுமைகாண்; பராபரமே! (91)

727 எச்சிலென்று பூவை இகழ்ந்தோர்க் குனைப்போற்றப்
பச்சிலையுங் கிள்ளப் படுமோ? பராபரமே! (92)

728 அந்தக் கரணம் அடங்கத் துறப்பதுவே
எந்தத் துறவினும்நன் றெந்தாய்! பராபரமே! (93)

729 தன்னை அறிந்தால் தலைவன்மேல் பற்றலது,
பின்னைஒரு பற்றுமுண்டோ? பேசாய்! பராபரமே!

730 அன்பாற் கரைந்து, கண்ணீர் ஆறுகண்ட புண்ணி
குன்பால் வரவழிதான் உண்டோ? பராபரமே! [யருக்

731 தன்னை யறிந்தருளே தாரகமா நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம்; பராபரமே! (96)

732 கற்றகலை யால்நிலைதான் காணுமோ? காண்பதெல்
அற்ற இடத் தேவெளியாம் அன்ருே? பராபரமே! [லாம்

733 கண்மூடிக், கண்விழித்துக், காண்பதுண்டோ?
[நின்அருளாம்
விண்மூடின் எல்லாம் வெளியாம்; பராபரமே! (98)

734 நேரே நினதருள்என் நெஞ்சைக் கவரின், ஒன்றும்
பாரேன்; சுகமும் படைப்பேன்; பராபரமே! (99)

735 வான்காண வேண்டின் மலைஏறல் ஒக்கும்உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம்; பராபரமே!

736 வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லால், வேறும்ஒரு
சாதனைதான உண்டோ? நீ சாற்ருய்! பராபரமே! (101)

737 பாரகமும் விண்ணகமும் பற்ருக நிற்பதருள்
தாரகத்தைப் பற்றியன்ருே? சாற்ருய்! பராபரமே (102)

738 விளக்கும் தகளியையும் வேறென்ருர், நின்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார்; பராபரமே!

739 பாராதி நீயாப் பகர்ந்தால், அகம்எனவும்
ஆராயும் சிவனும்நீ யாம்காண்! பராபரமே! (104)

740 பொய்யைப்பொய் யென்றறியும் போதத்துக்காதரவுன்
மெய்யருளே யன்ருே? விளம்பாய்; பராபரமே! (105)

741 வருவான்வந் தேனெனல்போன், மன்னிஅழி
[யுஞ்சகத்தைத்
தெரிவாக இல்லையென்ற தீரம் பராபரமே! (106

742 மாயா சகமிலையேல், மற்றெனக்கோர் பற்றும்இலை;
நீயேநான் என்றுவந்து நிற்பேன்? பராபரமே! (107)

743 வானுதி நீ எனவே வைத்தமறை, என்னையும்நீ
தானுகச் சொல்லாதோ? சாற்றுய்! பராபரமே! (108)

744 வெள்ளக் கருணைமத வேழமாம் நின்னருட்கென்
கள்ளக் கருத்தே கவளம்; பராபரமே! (109

745 வண்டாய்த் துவண்டு. மவுன மலரணைமேல்
கொண்டார்க்கோ இன்பங் கொடுப்பாய்? பராபரமே!

746 மாயைமுதலாம்வினை நீ! மன்னுயிர்நீ! மன்னுயிர்தேர்ந்
தாயும்அறி வானதுநீ யன்றே? பராபரமே!

747 என்னறிவும் யானும்என தென்பதுவு மாம்இவைகள்
நின்னவையே யன்றே? நிகழ்த்தாய்! பராபரமே!

748 பாரறியா தண்டப் பரப்பறியா துன்பெருமை
யாரறிவார்? நானே அறிவேன்? பராபரமே! (113)

749 அண்டம் அனைத்தினுமாய், அப்பாலுக் கப்பாலும்
கொண்ட நின்னை யார்அறிந்துகொள்வார்?பராபரமே!

750 ஓம்புயர்வொன் றின்றி ஒலிபுகா மோனவட்டக்
கப்பலுக்காம் வான்பொருள்நீ கண்டாய்! பராபரமே!

751 என்போல் எளியவரும், எங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரும் உண்டோ? பராபரமே! (116)

752 பார்க்கின்அண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே;
யார்க்கும் செயலிலேயோ; ஐயா! பராபரமே! (117)

753 ஒன்றே! பலவே உருவே! அருவேயோ!
என்றே அழைப்பதுனை என்றோ? பராபரமே! (118)

754 செப்புவதெல்லாம்செபம்நான்; சிந்திப்பதெல்லாம்நின்
ஒப்பில் தியானமென ஓர்ந்தேன்; பராபரமே! (119)

755 ஆரிருந்தென்? ஆர்போய்என்? ஆரமுதாம் நின்னரு
சீரிருந்தால் உய்வேன்; சிவமே! பராபரமே! [ளின்

756 வஞ்சநமன் வாதனைக்கும், வன்பிறவி வேதனைக்கும்,
அஞ்சி உனை அடைந்தேன்; ஐயா! பராபரமே! (121)

757 எந்தப் படிஉன் இதயம் இருந்ததெமக்
கந்தப் படிவருவ தன்றோ? பராபரமே! (122)

758 எந்தெந்த நாளும் எனைப்பிரியா தென்னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டஅருள் தேவே! பராபரமே!

759 அஞ்சலஞ்சல் என்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சில் உணர்த்தும் நிறைவே! பராபரமே! (124)

760 என்னைஉன்றன் கைக்களித்தார் யாவர்? என்னை
[யான்கொடுத்துப்
பின்னைஉன்னாற் பெற்றநலம் பேசேன்; பராபரமே!

761 வாய்பேசா ஊமையென வைக்களன்றோ? நீமௌனத்
தாயாக வந்தருளைத் தந்தாய்; பராபரமே! (126)

762 தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக்கொண் டென்னபலன்? எந்தாய்! பராபரமே

763 மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டைஉன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் ! பராபரமே!

764 சுட்டிஉண ராமல் துரிய நிலை யாய்வெளியில்
விட்ட நின்னை, யானே வியப்பேன்? பராபரமே ! (129)

765 சூதொன்றும் இன்றிஎன்னைச் சும்மா இருக்கவைத்தாய்;
ஈதொன்றும் போதாதோ? இன்பம் ; பராபரமே! (130)

766 வாயொன்றும் பேசா மௌனியாய் வந்தாண்ட
தேயொன்றும் போதாதோ இன்பம்? பராபரமே !

767 என்றும் இருந்தபடிக் கென்னை எனக்களித்த
தொன்றும்போ தாதோ? உரையாய் பராபரமே ! (132)

768 எண்டிசைகீழ் மேலான எல்லாம் பெருவெளியாக்
கண்ட இடத் தென்னையும்நான் கண்டேன்; பராபரமே!

769 பித்தனைஏ தும்அறியாப் பேதையனை ஆண்டஉனக்
கெத்தனைதான் தெண்டன் இடுவேன் ? பராபரமே !

770 தாயர்கர்ப்பத் தூடனமும் தண்ணீருந் தந்தருளும்
நேயஉனை யாரே நினையார் ? பராபரமே ! (135)

771 விரிந்த மனமொடுங்கும் வேளையில்நா னுகப்
பரந்தஅருள் வாழி ! பதியே ! பராபரமே ! (136)

772 சிந்தனைபோய், நான்எனல்போய்த், தேக்கஇன்ப
[மாமழையை
வந்து பொழிந்தனை நீ ; வாழி, பராபரமே ! (137)

773 'தந்தேனே ஓர் வசனம் தந்தபடிக் கின்பமுமாய்
வந்தேனே' என்றனை நீ வாழி ! பராபரமே ! (138)

774 மண்ணும்விண்ணும் வந்து வணங்காவோ? நின்னரு
[ளாக்
கண்ணுறஉட் கண்டவரைக் கண்டால் பராபரமே!

775 என்றுங் கருணைபெற்ற இன்பத் தபோதனர்சொல்,
சென்றசென்ற திக்கனைத்தும் செல்லும் பராபரமே!

776 ஆடுவதும், பாடுவதும், ஆனந்த மாகநின்னைத்
தேடுவதும் நின் அடியார் செய்கை; பராபரமே! (141)

777 பொங்கிய நின் தண்ணருளைப் புட்கலமாப் பெற்றவர்
கெங்கெழுந்தென் ஞாயி றியம்பாய்! பராபரமே! [கட்

778 பாலரொடு, பேயர், பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தம் செய்கை; பராபரமே! (143)

779 உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போல்திரியும்
தொண்டர் விளையாட்டே சுகங்காண்! பராபரமே!

780 கங்குல்பகல் அற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
எங்கும் ஒருவழியே; எந்தாய்! பராபரமே! (145)

781 காயம்நிலை அல்லவென்று காண்பார் உறங்குவரோ?
தூய அருட் பற்றுத் தொடர்வார்; பராபரமே! (146)

782 அப்பும்உப்பும் போன்ற அயிக்யபரா னந்தர் தமக்
கொப்புவமை சொல்லவும்வாய் உண்டோ? பராபரமே!

783 சித்தம் தெளிந்து சிவமானோர் எல்லோர்க்கும்
கொத்தடிமை யான குடிநான்; பராபரமே!

784 தம்முயிர்போல் எவ்வுயிரும் தான்என்று தண்ணருள்
[கூர்
செம்மையருக் கேவல்என்று செய்வேன்? பராபரமே!

785 விண்ணுக்கும் விண்ணுகி மேவும்உனக் கியான்பூசை
பண்ணிநிற்கு மாறு பகராய்! பராபரமே! (150)

786 நெஞ்சமே கோயில்; நினைவே சுகந்தம்; அன்பே
மஞ்சனநீர்; பூசைகொள்ள வாராய்! பராபரமே!

787 கெட்டவழி ஆணவப்பேய் கீழாக; மேலான
சிட்டர்உனைப் பூசை செய்வார்; பராபரமே! (152)

788 கால்பிடித்து, மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பில், தேகம் விழுமோ? பராபரமே! (153)

789 பஞ்சசுத்தி செய்து, நின்னைப் பாவித்துப்
[பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும்; பராபரமே! (154)

790 அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும்; பராபரமே! (155)

791 மூர்த்திதலந் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்
[கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும்;
பராபரமே! (156)

792 விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ? பராபரமே!

793 தானம், தவம், தருமஞ் சந்ததமும் செய்வர், சிவ
ஞானந் தனை அணைய நல்லோர்; பராபரமே! (158)

794 சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற ஆணவப்பேய்க்
கின்னல் வருவதெந்நாள்? எந்தாய்! பராபரமே! (159)

795 இன்றே இருவினைவந் தேறியது? நான்என்றே
அன்றே விளைந்ததன்றே? ஆற்றேன்; பராபரமே!

796 எண்ணமுந்தான் நின்னைவிட இல்லையென்றால், யான்முனமே
பண்ணவினை ஏது? பகராய் பராபரமே! (161)

797 என்னை இன்ன தென்றறியா ஏழைக்கும் ஆகெடுவேன்!
முன்னைவினை கூடல் முறையோ? பராபரமே! (162)

798 அறியாநான் செய்வினையை ஐயா! நீ கூட்டும்
குறியே தெனக்குளவு கூறாய்! பராபரமே! (163)

799 என்னைக் கெடுக்க இசைந்த இருவினைநோய்
தன்னைக் கெடுக்கத் தகாதோ? பராபரமே! (164)

800 வல்லமையே காட்டுகின்ற மாமாயை. நான்ஒருவன்
இல்லையெனின் எங்கே இருக்கும்? பராபரமே! (165)

801 முக்குணத்தால் எல்லாம் முளைக்கப் பிரகிருதிக்
கிக்குணத்தை நல்கியதார்? எந்தாய்! பராபரமே! (166

802 ஆற்றப் படாதுதுன்பம்; ஐய!என்றால் என்மனது
தேற்றப் படா தினியென் செய்வேன்? பராபரமே!

803 பூராய மாய்மனதைப் போக்கஅறி யாமல்ஐயோ!
ஆராய் அலைந்தேன்; அரசே! பராபரமே! (168)

804 சினம்இறக்கக் கற்றாலுஞ், சித்தியெல்லாம் பெற்றாலும்,
மனம்இறக்கக் கல்லார்க்கு, வாய்ஏன்? பராபரமே!

805 வாதுக்கு வந்தெதிர்த்த மல்லரைப்போல் பாழ்த்தமனம்
ஏதுக்குக் கூத்தாடு தெந்தாய்! பராபரமே! (170)

806 சூதாடு வார்போல் துவண்டு துவண்டுமனம்
வாதாடின் என்னபலன் வாய்க்கும்? பராபரமே! (171)

807 கொள்ளித்தேள் கொட்டிக்குதிக்கின்றபேய்க்குரங்காய்க்
கள்ளமனம் துள்ளுவதென் கண்டோ? பராபரமே!

808 வந்ததையும், போனதையும், வைத்துவைத்துப்
[பார்த்திருந்தால்
சிந்தை இதமகிதஞ் சேரும்; பராபரமே! (173)

809 ஏறுமயிர்ப் பாலம்உணர் விந்தவிட யங்கள்நெருப்
பாறெனவும் நன்று அறிந்தேன்; பராபரமே! (174)

810 பொறிவழியே ஏழை பொறியாய் உழல்வதுநின்
அறிவின் விதித்தவிதி ஆமோ? பராபரமே! (175)

811 பாசசா லங்கள்எல்லாம் பற்றுவிட, ஞானவைவாள்
வீசும்நாள் எந்நாள்? விளம்பாய்! பராபரமே! (176)

812 எந்தவுட லேனும் எடுத்தவுடல் நல்லதென்று
சிந்தைசெய வந்ததிறம் செப்பாய்! பராபரமே! (177)

813 பொய்யெல்லாம்ஒன்றுப்பொருத்திவைத்தபொய்யுடலை
மெய்யென்றால் மெய்யாய் விடுமோ? பராபரமே! (178)

814 மின்னனைய பொய்யுடலை மெய்என்று நம்பிஐயோ!
நின்னை மறக்கை நெறியோ? பராபரமே! (179)

815 நித்தியமொன் றில்லாத நீர்க்குமிழி போன்றஉடற்
கித்தனைதான் துன்பமுண்டோ? என்னே? பராபரமே!

816 'தேகம்இறும்' என்றசடர் தேம்புவதென்? நித்திரையின்
ஊகமறிந் தால்பயந்தான் உண்டோ? பராபரமே!

817 ஏதைச் சுமையா எடுப்பார் எடுத்தவுடல்
சேதமுறின்? யாதுபின்னே செல்லும்? பராபரமே!

818 தோற்பாவை நாலாள் சுமையாகும்; சீவன்ஒன் றிங்
கார்ப்பால் எடுத்ததெவ ராலே? பராபரமே! (183)

819 ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளும்என் றன்
காலத்தைப் போக்கிஎன்ன கண்டேன்? பராபரமே!

820 பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரி வாதனை நின்
மெய்யருளின் மூழ்கின் விடுங்காண்; பராபரமே!

821 நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவி நன்னூற் போதம்; பராபரமே! (186)

822 சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றைஒக்கும்,
மன்னும் கலைஞான மார்க்கம்; பராபரமே! (187)

823 வாசகஞா னத்தால் வருமோ சுகம்? பாழ்த்த
பூசல்என்று போமோ? புகலாய்! பராபரமே! (188)

824 கேட்டதையே சொல்லும் கிளிபோல, நின்அருளில்
நாட்டமின்றி வாய்பேசல் நன்றோ? பராபரமே! (189)

825 வெளியாய் அருளில் விரவும்அன்பர் தேகம்
ஒளியாய்ப் பிறங்கியதும் உண்டோ? பராபரமே!

826 காலம்ஒரு மூன்றும் கருத்தில்உணர்ந் தாலும்அதை
ஞாலந் தனக்குரையார் நல்லோர்; பராபரமே! (191)

827 கோல்லாவிரதம்ஒன்றுகோண்டவரேநல்லோர்;மற்
றல்லாதார் யாரோ? அறியேன், பராபரமே! (192)

828 இல்லாத காரியத்தை இச்சித்துச் சிந்தைவழிச்
செல்லாமை நல்லோர் திறங்காண் ; பராபரமே! (193)

829 ஏதுவந்தும், ஏதொழிந்தும், என்னதியான் என்னுர்கள்
போதநிலை கண்ட புலத்தோர் ; பராபரமே! (194)

830 ஆயிரஞ்சொன் னுலும் அறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் ; பராபரமே! (195)

831 மாய மயக்கொழிந்தார், மற்ருென்றை நாடுவரோ?
நேய அருள் நிலையில் நிற்பார் ; பராபரமே! (196)

832 நித்திரையில் செத்தபிணம் நேரும்உடற் கிச்சைவை
சுத்தர்களே நல்ல துறவோர்; பராபரமே! [யாச்

833 என்னெஞ்ச மேனும் இரங்குமேல் நின்னருட்குக்,
கன்னெஞ் சருமுளரோ? காட்டாய்! பராபரமே! (198)

834 மந்தஅறி வாகி, இன்பம் வாயா திருந்தலைந்தாற்.
சிந்தைமயங் காதோ? என் செய்வேன்? பராபரமே!

835 தேடினேன்; திக்கனைத்தும் தெண்டனிட்டேன் ;
[சிந்தைநைந்து
வாடினேன்; என்மயக்கம் மாற்ருய்? பராபரமே! (200)

836 மடிமையெனும் ஒன்றை மறுத்தன்றோ என்னை
அடிமைகொளல் வேண்டும்? அரசே! பராபரமே!

837 காலர்பயம் தீர,இன்பக் காற்கபயம் என்றெழுந்த
மாலை வளர்த்தனையே வாழி! பராபரமே! (202)

838 நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்
பார்ப்பதல்லால், வேறும்ஒன்றைப் பாரேன்; பராபரமே!

839 நீர்க்குமிழி போல்என் நினைவுவெளி யாய்க்கரையப்.
பார்க்குமிடம் எல்லாம்என் பார்வை பராபரமே!

840 ஆடிஓய் பம்பரம்போல் ஆசையுடன் எங்கும் உனைத்
தேடிஓய் கின்றேன்;என் செய்வேன்? பராபரமே!

841 வேதாந்தம் சித்தாந்தம் வேறென்னுர் கண்களிக்கும்
நாதாந்த மோன நலமே! பராபரமே! (206)

842 ஆனந்த மான நின்னை யன்றிஒன்றை உன்னுத
மோனந் தமியேற்கு முத்தி; பராபரமே! (207)

843 ஏதுக்கும் உன்னைவிட இல்லையென்ருல், என்கருத்தைச்
சோதிக்க வேண்டா நான் சொன்னேன்; பராபரமே!

844 முத்தியிலும் தேகமிசை மூவிதமாம் சித்திபெற்ரோர்
எத்தனைபேர் என்றுரைப்ப தெந்தாய்! பராபரமே!

845 நீயன்றி நான்ஆர்? நினைவார்?என் நெஞ்சகம்ஆர்?
தாயன்றிச் சூலும்உண்டோ? சாற்ருய்! பராபரமே!

846 அங்கமே! நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
எங்கும்ஏன் ஏன்என்ற தென்னே? பராபரமே! (211)

847 கொள்ளைவெள்ளத் தன்னருள்மேற் கொண்டுசுழித் [தார்த்திழுத்தால்
கள்ளமனக் கப்பல்எங்கே காணும்? பராபரமே! (212)

848 எக்கலையும் கற்றுணர்ந்தோம் என்றவர்க்கும் சம்மதம் [சொல்
வக்கணையால் இன்பம் வருமோ? பராபரமே!

849 கல்லெறியப் பாசி கலைந்துநன்னீர் காணும்; நல்லோர்
சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும்; பராபரமே!

850 நின்னை உணர்ந்தோர்கள் தமை நிந்தித்த பேய் அறிஞர்
என்னகதி பெறுவார்? எந்தாய்! பராபரமே! (215)

851 என்னதியான் என்னல் அற்றோர். எங்கிருந்து பார்க்
[கினும் நின்
சன்னிதியாம் ; நீபெரிய சாமி ; பராபரமே! (216

852 சோற்றுத் துருத்திச் சுமைசுமப்பக், கண்பிதுங்கக்,
காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய்! பராபரமே! ,)

853 உள்ளபடி ஒன்றை உரைக்கின் அவர்க் குள்ளுறவாய்க்
கள்ளமின்றி, அன்பாய்க் களிப்பேன் ; பராபரமே!

854 அடுத்தஇயல் பாகஒன்றை யான்பகர்வ தல்லால்
தொடுத்ததொன்றை யான்வேண்டிச் சொல்லேன் ;
[பராபரமே! (219)

855 உள்ளம்அறி யாதொருவர் ஒன்றைஉன்னிப் பேசில்,
[ ஐயோ!
துள்ளிஇளங் கன்றாய்த் துடிப்பேன்; பராபரமே!

856 எல்லாரும்இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல். வேறொன் றறியேன் ; பராபரமே! (221)

857 முன்னாள்மெய்ஞ் ஞான முனிவர்தவம் ஈட்டுதல்போல்
இந்நாளிற் காணஎனக் கிச்சை ; பராபரமே!

858 கன்மமென்ப தெல்லாம் கரிசறவே மெய்ஞ்ஞான
தன்மநிலை சார்ந்ததன்பர் தன்மை ; பராபரமே! (223)

859 கண்துயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற
மண்டிய பேரொளிநீ, வாழி! பராபரமே! (224)

860 நானென தன்மைஎன்றும் நாடாமல் நாடஇன்ப
வானுகி நின்றனே நீ, வாழி! பராபரமே!

861 அகத்தூ டணுஅணுவாய், அண்டமெல்லாந் தானுய்,
மகத்தாகி நின்றனே நீ, வாழி! பராபரமே! (226)

862 காரகமாம் கர்ப்பஅறைக் கண்ணூடும் என்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனே நீ, வாழி பராபரமே! (227)

863 புரந்தோர்தம் தேசம்என்பார், பூமியைப்போ ராடி;
இரந்தோரும் தம்மதென்பார்; என்னே? பராபரமே!

864 மூர்த்திஎல்லாம் வாழி எங்கள் மோனகுரு வாழி! அருள்
வார்த்தைஎன்றும் வாழி! அன்பர் வாழி! பராபரமே!

865 சொல்லும் பொருளும் தொடரா அருள்நிறைவிற்
செல்லும் படிக்கருள்நீ செய்தாய், பராபரமே! (230)

866 இற்றைவரைக் குள்ளாக எண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்கள் எத்தனைபேர்? பேசாய்! பராபரமே!

867 நாடும் நகரும்நிசா ணட்டிய பாளையமும்,
ஈடுசெயு மோ?முடிவில் எந்தாய்! பராபரமே! (232)

868 தேடும் திரவியமும், சேர்ந்தமணிப் பெட்டகமும்,
கூட வரும்துணையோ? கூருய்; பராபரமே! (233)

869 தேடாத தேட்டினரே, செங்கைத் துலாக்கோல்போல்,
வாடாச் சமநிலையில் வாழ்வார்; பராபரமே! (234)

870 நீராய்க் கசிந்துருகி, நெட்டுயிர்த்து நின்றேனைப்,
பாராத தென்னே? பகராய்! பராப்ரமே! (235)

871 உள்ளபொருள் ஆவி உடல்மூன்றும் அன்றேதான்
கொள்ளைகொண்ட நீஎன் குறைதீர்! பராபரமே! (236)

872 ஆழ்ந்தாயே இவ்வுலகில்; அல்லலெல்லாந் தீர்ந்தரு
வாழ்ந்தாயே என்றனை நீ, வாழி! பராபரமே! [ளால்

873 தாரா அருளையெல்லாந் தந்தெனையும் நின்னருளில்
வாராயோ என்றனை நீ. வாழி! பராபரமே! (238)

874 ஆசைஉன்மீ தல்லால், அருளறிய வேறும்ஒன்றிற்
பாசம்வையேன், நின் கருணைப் பாங்காற் பராபரமே!

875 ஆதிஅந்த நீகுருவா யாண்டதல்லால் நின்னையன்றிப்
போதனையும் உண்டோ? புகலாய்! பராபரமே! (240)

876 தானாக வந்து தடுத்தாண் டெனைஇன்ப
வானாகச் செய்தஇன்ப வானே! பராபரமே! (241)

877 பற்றற் றிருக்கும்நெறி பற்றிற், கடல்மலையுஞ்
சுற்ற நினைக்குமனம், சொன்னேன்; பராபரமே! (242)

878 படிப்பற்றுக், கேள்விஅற்றுப், பற்றற்றுச், சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண்? பராபரமே! (243)

879 சத்தாகி நின்றோர் சடங்கள் இலிங்கமென
வைத்தாரு முண்டே;*என் வாழ்வே! பராபரமே! (244)

880 சித்த நிருவிகற்பம் சேர்ந்தார் உடல்தீபம்
வைத்தகர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே! (245)

881 ஆதிகா லத்தில்எனை ஆண்டனையே; இப்பால்நீ
போதிஎனின் எங்கேநான் போவேன்? பராபரமே!

---

* 'உண்டோ' என்பதும் பாடம்.

882 நாவழுத்துஞ் சொன்மலரோ? நாளுதிக்கும் பொன்
[மலரோ?
தேவையுனக் கின்னதென்று செப்பாய்! பராபரமே!

883 கன்னல்தரும் பாகாய்க். கருப்புவட்டாய்க், கற்கண்டாய்,
இன்னமுதாய் என்னுள் இருந்தாய்; பராபரமே! (248)

884 சிற்பரமே! தற்பரமே! தெய்வச் சுருதிசொன்ன
அற்புதமே! அன்பே! அறிவே! பராபரமே! (249)

885 அறிவிப்பான் நீயென்ருல், ஐம்புலங்கள் தம்தம்
நெறிநிற்பார் யாரே? நிகழ்த்தாய்? பராபரமே! (250)

886 அந்தக் கரணமெனும் ஆகாத பேய்கள்எனை
வந்துபிடித் தாட்ட வழக்கோ? பராபரமே! (251)

887 ஐவரோடுங் கூடாமல், அந்தரங்க சேவைதந்த
தெய்வ அறிவே! சிவமே! பராபரமே! (252)

888 அருளாகி நின்றசுகம் ஆகாமல், ஐயோ!
இருளாகி நிற்க இயல்போ! பராபரமே! (253)

889 அன்பரெல்லாம் இன்பம் அருந்திடவும், யான்ஒருவன்
துன்புறுதல் நன்ருே? நீ சொல்லாய் பராபரமே! (254

890 சந்ததமும் நின்கருணை சாற்றுவதல் லால்,வேறு
சிந்தை அறியேன்,உன் சித்தம்; பராபரமே! (255)

891 நானுன் எனக்குளறும் நாட்டத்தால் என்னைவிட்டுப்
போனுலும், உன்னைவிட்டுப் போகேன்; பராபரமே!

892 இக்காயம் பொய்என்ருேர் ஈட்டத் துனக்கபயம்
புக்காதார் உண்டோ? புகலாய்; பராபரமே! (257)

893 தானுதல் பூரணமே சாரும்இடம் உண்டுயிரும்
வானு தியும்ஒழுங்காய் மன்னும். பராபரமே! (258)

894 உன்னுமனங் கர்ப்பூர உண்டைபோ லேகரைய,
மின்னும்ஆ னந்த விளக்கே! பராபரமே! (259)

895 நாட்பட் டலைந்த நடுக்கமெல்லா ந் தீர,உனக்
காட்பட்டும், துன்பம்எனக் காமோ? பராபரமே! (260)

896 பாவிபடும் கண்கலக்கம் பார்த்தும் இரங் காதிருந்தால்
ஆவிக் குறுதுணையார்? ஐயா! பராபரமே! (261)

897 நின்னிறைவே தாரகமாம் நின்றுசுகம் எய்தாமல்,
என்னிறைவே பாவித்தேன் ; என்னே? பராபரமே!

898 நின்னைச் சரண்புகுந்தால், நீகாக்க வேண்டுமல்லால்,
என்னைப் புறம்விடுதல் என்னே? பராபரமே! (263)

899 மாருத துன்பமெல்லாம் வந்துரைத்தால், நின்செவியில்
ஏருத வாறே தியம்பாய்? பராபரமே! (264)

900 விஞ்சுபுலப் பாடனைத்தும். வீறுதுன்பஞ் செய்யஅந்த
அஞ்சுபுல வேடருக்கும் ஆற்றேன் ; பராபரமே! (265)

901 கன்னங் கரியநிறக் காமாதி ராட்சசப்பேய்க்
கென்னை இலக் காகவைத்த தென்னே? பராபரமே!

902 சித்திநெறி கேட்டல் செகமயக்கம் ; சன்மமற
முத்திநெறி கேட்டல் முறைகாண் ; பராபரமே! (267)

903 சிந்தை சிதையச். சிதையாத ஆனந்தம்
எந்தவகை யாலேவந் தெய்தும்? பராபரமே!

904 'கூர்த்தஅறி வால்அறியக் கூடா' தெனக்குரவன்
தேர்த்தபடி தானே திரிந்தேன்; பராபரமே! (269)

905 பத்தர் அருந்தும் பரமசுகம் யான் அருந்த
எத்தனை நாள் செல்லும்? இயம்பாய்! பராபரமே!

906 தீரத்தி னல்துறவு சேராமல் இவ்வுலகில்
பாரத் தனம்பேசல் பண்போ? பராபரமே! (271)

907 இந்த வெளியினை உண் டேப்பமிடப் பேரறிவாத்
தந்தவெளிக் கேவெளியாய்ச் சார்ந்தேன்; பராபரமே!

908 உணர்த்தும்உனை நாடா, துணர்ந்தவையே நாடி,
இணக்குறுமென் ஏழைமைதான் என்னே? பராபரமே!

909 உண்டுபோல் இன்றும் உலகைத், திரமெனஉட்
கொண்டுநான் பெற்றபலன் கூறாய்? பராபரமே!

910 உள்ளபடி யாதும்என உற்றுணர்ந்தேன்; அக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன்; பராபரமே! (275)

911 சித்த மவுனம், செயல்வாக் கெலாமவுனம்
சுத்த மவுனம்என்பால் தோன்றின், பராபரமே! (276

912 எண்ணில்பல கோடிஉயிர் எத்தனையோ அத்தனைக்கும்
கண்ணிற் கலந்தஅருட் கண்ணே! பராபரமே! (277)

913 எனக்கினியார் உன்போல இல்லையென்றால், யானும்
உனக்கினியான் ஆகா உளவென்? பராபரமே! (27 8

914 அண்ட பிண்டம் காணேன், அகமும் புறமும்ஒன்றாக்
கண்டஎன்னை நீகலந்த காலம், பராபரமே! (279)

915 எத்தனையோ கோடி எடுத்தெடுத்துச் சொன்னாலும்
சித்தம் இரங்கிலை;என் செய்வேன்? பராபரமே! ( 280

916 அன்றந்த நால்வருக்கும் அற்புதமா நீஉரைத்த
தொன்றந்த வார்த்தைஎனக் குண்டோ? பராபரமே!

917 அப்பன்என்றும், அன்னைஎன்றும் ஆரியன்என்
[றும்உனையே
செப்புவது முன்னிலையின் சீர்காண்; பராபரமே!

918 கட்டும் கனமும்அந்தக் காலர்வரும் போதெதிர்த்து
வெட்டும் தளமோ? விளம்பாய்! பராபரமே! (283)

919 பேசாத மோன நிலை பெற்றன்றோ? நின்னருளாம்
வாசா மகோசரந்தான் வாய்க்கும்; பராபரமே! (284)

920 கற்றாலும், கேட்டாலும், காயம்அழி யாதசித்தி
பெற்றாலும் இன்பம் உண்டோ? பேசாய்; பராபரமே!

921 கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற அஞ்சனம்போல்
அண்டமெல்லாம் நின்னருளே அன்றோ? பராபரமே!

922 தன்செயலால் ஒன்றும்இலை தான்என்றால் நான்பாவி
நின்செயலாய் நில்லா நினைவேன்? பராபரமே!

923 கொலை,களவு, கள்காமங், கோபம்விட்டா லன்றோ?
மலைஇலக்கா நின்னருள்தான் வாய்க்கும்; பராபரமே!

924 தன்னைஅறி யாது,சகந் தானாய் இருந்துவிட்டால்,
உன்னை அறியஅருள் உண்டோ? பராபரமே! (289)

925 ஒன்றிரண்டென் றன்ற உணர்வுகொடுத் துள்ளபடி
என்றும் என்னை வையாய் இறையே! பராபரமே!

926 கருதும்அடி யார்கள்உளம் காணவெளி யாகும்
துரியநிறை வான சுகமே! பராபரமே! (291)

927 பொய்குவித்த நெஞ்சன், அருட்பொற்பறிந்து
[ திக்கனைத்தும்
கைகுவித்து நிற்பதெந்தக், காலம்? பராபரமே! (292)

928 அத்துவித மான அயிக்ய அனுபவமே
சுத்த நிலை; அந்நிலை யார் சொல்வார்? பராபரமே!

929 வைத்த சுவர் அலம்பின் மண்போமோ? மாயையினேர்க்
கெத்தனைபோ தித்துமென்னும்? எந்தாய்! பராபரமே!

930 பூட்டற்றுத், தேகமற்றுப் போகுமுன்னே, நின்னருளைக்
காட்டத் தகாதோ? என் கண்ணே! பராபரமே!

931 சொல்லிற் பதர்களைந்து, சொல்முடிவு காணுதார்,
நெல்லிற் பதர்போல நிற்பார்; பராபரமே! (296)

932 அழுக்காற்றல் நெஞ்சம் அழுங்கியபுன் மாக்கள்,
இழுக்காற்றல் இன்பநல மெய்தார்; பராபரமே!

933 தேகாதி பொய்எனவே தேர்ந்தஉப சாந்தருக்கு
மோகாதி உண்டோ? மொழியாய்! பராபரமே! (298)

934 சாதனைஎல் லாம்அவிழத், தற்போதங் காட்டாதோர்
போதனை நீ நல்குவதெப் போதோ? பராபரமே!

935 ஒன்றும்அறி யாஇருளாம் உள்ளம் படைத்தஎனக்
கென்று கதிவருவ தெந்தாய்! பராபரமே! (300)

936 சிந்திக்குந் தோறும், என்னுட் சிற்சுகமாய் ஊற்றூறிப்,
புந்திக்குள் நின்றஅருட் பொற்பே! பராபரமே!

937 என்றும்அடைந் தோர்கட் கிரங்கார் குறிப்பனைத்தும்,
கன்றைஉதை காலி கதைகாண்! பராபரமே!

938 குற்றம் குறையக், குணம்மே லிட,அருளே
உற்றவரே ஆவிக் குறவாம்; பராபரமே! (303)

939 ஒருரையால் வாய்க்கும்உண்மைக் கோர்அனந்த நூல்
[ கோடி
பேருரையாற் பேசில்என்ன பேரும்? பராபரமே!

940 சொல்லும் சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலும்
அல்லல் ஒழிவதென்றைக் கையா! பராபரமே! (305)

941 பிடித்ததையே தாபிக்கும் பேரா ணவத்தை,
அடித்துத் துரத்தவல்லார் ஆர்காண்? பராபரமே!

942 நேசத்தால் நின்னை நினைக்கும் நினைவுடையார்,
ஆசைக் கடலில் அழுந்தார்; பராபரமே! (307)

943 கள்ளாது கட்டுணவும் காரியமோ? நான்ஒருசொல்
கொள்ளாத தோடமன்றே? கூறுய்; பராபரமே! (308)

944 சென்றஇடம் எல்லாம் திருவருளே தாரகமா
நின்றவர்க்கே ஆனந்த நிட்டை; பராபரமே! (309)

945 நீட்சி குறுகலில்லா நித்யசுகா ரம்பசக
சாட்சியாம் உன்னைவந்து சார்ந்தேன்; பராபரமே!

946 வானுதி தத்துவமாய் மன்னிநின்ற காரண! நீ
நானுகி நிற்பதெந்த நாளோ? பராபரமே! (311)

947 காட்டத்தில் அங்கி கடையவந்தால் என்ன;உன்னும்
நாட்டத்தி னூடுவந்த நட்பே! பராபரமே! (312)

948 நித்திரையாய்த், தானே நினைவயர்ந்தால், நித்தம்
[ நித்தம்
செத்தபிழைப் பானதெங்கள் செய்கை; பராபரமே!

949 இன்பநிட்டை எய்தாமல், யாதெனினுஞ் சென்றுமனம்
துன்புறுதல், வன்பிறவித் துக்கம்; பராபரமே! (314)

950 பொய்அகல, மெய்யான போதநிலை கண்டோர்க்கோர்
ஐயமிலை! ஐயமிலை!! ஐயா! பராபரமே! (315)

951 மந்திரத்தை உன்னி மயங்கா தெனக்கினியோர்
தந்திரத்தை வைக்கத் தகாதோ? பராபரமே! (316)

952 விண்கருணை பூத்ததென மேவி உயிர்க்குயிராய்த்,
தண்கருணை தோன்றஅருள் தாய்நீ! பராபரமே!

953 தன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்றால்,
நின்மயமாய் எல்லாம் நிகழும்; பராபரமே! (318)

954 ஏங்கி இடையும்நெஞ்ச ஏழையை,நீ வாஎன்றே
பாங்குபெறச் செய்வதுன்மேற் பாரம்; பராபரமே!

955 ஆண்ட நின்னை நீங்கா அடிமைகள்யாம்; ஆணவத்
பூண்டதென்ன கன்மம்? புகலாய்! பராபரமே! [தைப்

956 எங்கணும்நீ என்றால், இருந்தபடி எய்தாமல்,
அங்கும் இங்கும் என்றலைய லாமோ? பராபரமே!

957 கற்கும்மது உண்டு களித்ததல்லால், நின்னருளில்
நிற்கும்மது தந்ததுண்டோ? நீதான்; பராபரமே! 322

958 அகண்டபகி ரண்டம் அறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டால் கதியாம் பராபரமே! (323)

959 கலக்கமுற, நெஞ்சைக் கலக்கித், திரும்பத்
துலக்குபவன் நீயலையோ? சொல்லாய்! பராபரமே!

960 சிந்தையும்என் போலச் செயலற் றடங்கிவிட்டால்,
வந்ததெலாம் நின்செயலா வாழ்வேன்; பராபரமே!

961 பந்தமெலாம் தீரப், பரஞ்சோதி! நீகுருவாய்
வந்த வடிவை மறவேன் ; பராபரமே! (326)

962 தானந்த மான சகச நிருவிகற்ப
ஆனந்த நிட்டைஅருள் ஐயா! பராபரமே! (327)

963 அல்லலெல்லா ந் தீர,எனக் கானந்த மாகஒரு
சொல்லைஎன்பால் வைத்ததைஎன் சொல்வேன்?
[பராபரமே! (328)

964 சிந்தை மயக்கமறச், சின்மயமாம் நின்றஉன்னைத்
தந்தஉனக் கென்னையும்நான் தந்தேன்; பராபரமே!

965 மைகாட்டு மாயை மயக்கமற. நீகுருவாய்க்
கைகாட்ட வும்கனவு கண்டேன் ; பராபரமே! (330)

966 மால்வைத்த சிந்தை மயக்கற.என் சென்னிமிசைக்
கால்வைக்க வும்கனவு கண்டேன்; பராபரமே! (331)

967 மண்ணூன மாயையெல்லாம் மாண்டுவெளி யாகஇரு
கண்ணூர வும்கனவு கண்டேன்; பராபரமே: (332)

968 மண்ணீர்மை யாலே மயங்காதுன் கையால்என்
கண்ணீர் துடைக்கவும்நான் கண்டேன்; பராபரமே!

969 உள்ள துணரா உணர்விலிமா பாவிஎன்றே
மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய்! பராபரமே!

970 எல்லாம் நினதுசெயல் என்றெண்ணும் எண்ணமும்நீ
அல்லால் எனக்குளதோ? ஐயா! பராபரமே! (335)

971 பந்த மயக்கிருக்கப். பற்றெழிந்தேன் என்றுளறும்
இந்த மயக்கம் எனக்கேன்? பராபரமே! (336)

972 காட்சிஎல்லாங் கண்ணை விடக் கண்டதுண்டோ?
[யாதினுக்கும்
ஆட்சி உனதருளே யன்றோ? பராபரமே! (337)

973 எட்டுத் திசையுமொன்ருய்; இன்பமாய் நின்றஉன்னை
விட்டுப் பிரியஇடம் வேருே? பராபரமே! (338)

974 பிரியா துயிர்க்குயிராய்ப் பின்னம்அற ஓங்கும்
செறிவே! அறிவே! சிவமே! பராபரமே! (339)

975 ஏதேது சொன்னுலும், எள்ளளவும் நீஇரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய்; பராபரமே! (340)

976 கற்பனையாப் பாடுகின்றேன்; கண்ணீரும் கம்பலையும்
சொற்பனத்துங் காணேன்; என் சொல்வேன்?
[பராபரமே! (341)

977 வன்பொன்றும் நீங்கா மனதிறப்ப. மாருப்பே
ரன்பொன்றும் போதும்எனக் கையா! பராபரமே!

978 ஏதும் தெரியா எளியெனை வாஎன,நின்
போதநிலை காட்டின் பொருதோ? பராபரமே! (343)

979 ஓராமல் எல்லாம் ஒழிந்தேற்குன் தெய்வஅருள்
தாரா திருக்கத் தகுமோ? பராபரமே! (344)

980 மோனந் தருஞானம் மூட்டி, எனக்குவட்டா
ஆனந்த வாழ்க்கை அருளாய்; பராபரமே! (345)

981 வாடுமுகம் கண்டென்னை வாடாம லேகாத்த
நீடும் கருணை நிறைவே! பராபரமே! (346)

982 புந்தியினல் நின் அடியைப் போற்றுகின்ற மெய்யடியார்
சிந்தைஇறப் போநின் தியானம்? பராபரமே! (347)

983 உனக்குவமை யாக்கருணை உள்ளவரும், வன்மைக்
கெனக்குவமை யானவரும் இல்லை; பராபரமே! (348)

984 தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போல் எவ்விடத்தும்
நீயிருந்தும் நான்தளர்ந்து நின்றேன்; பராபரமே!

985 வாயாற் கிணறுகெட்ட வாறேபோல் வாய்பேசிப்
பேயானர்க் கின்பமுண்டோ? பேசாய்! பராபரமே!

986 பாவம்என்ருல் ஏதும் பயமின்றிச் செய்யஇந்தச்
சீவனுக்கார் போதம் தெரித்தார்? பராபரமே! (351)

987 இன்ப நிருவிகற்பம் இன்றேதா! அன்றெனிலோ
துன்பம் பொறுப்பரிது; சொன்னேன்; பராபரமே!

988 கற்கும்நிலை கற்ருல் கருவிஅவி ழாதருளாய்
நிற்கும்நிலை கற்பதுவே நீதம்; பராபரமே! (353)

989 காய்ச்சச் சுடர்விடும்பொற் கட்டிபோல் நின்மலமாய்ப்
பேச்சற் றவரே பிறவார்; பராபரமே! (354)

990 பற்றெழிந்து, சிந்தைப் பதைப்பொழிந்து, தானேதான்
அற்றிருப்ப தென்றைக் கமைப்பாய்? பராபரமே! (355)

991 உருவெளிதான் வாதவூர் உத்தமர்க்கல் லால்இனமும்
குருவழிநின் ருர்க்கும்உண்டோ? கூருய்! பராபரமே!

992 தேகம்யா தேனும்ஒரு சித்திபெறச் சீவன்முத்தி
ஆகும்நெறி நல்லநெறி; ஐயா! பராபரமே! (357)

993 உலகநெறி போற்சடலம் ஓய,உயிர் முத்தி
இலகுமெனல், பந்த இயல்போ? பராபரமே! (358)

994 பரமாப் பரவெளியாப் பார்ப்பதல்லால், மற்றெவர்க்குந்
திரமேதும் இல்லை; நன்றாய்த் தேர்ந்தேன்; பராபரமே!

995 தேடுவேன் நின் அருளைத், தேடுமுன்னே எய்தின் நடம்
ஆடுவேன்; ஆனந்த மாவேன்; பராபரமே! (360)

996 உள்ளம் குழைய உடல்குழைய உள்ளிருந்த
கள்ளம் குழையஎன்று காண்பேன்? பராபரமே! (361)

997 பட்டப் பகல்போலப் பாழ்த்தசிந்தை மாளின், எல்லாம்
வெட்டவெளி யாக விளங்கும்; பராபரமே! (362)

998 பார்க்கின்அணுப் போற்கிடந்த பாழ்ஞ்சிந்தை மாளின்,
ஆர்க்குச் சரியிடலாம்? ஐயா! பராபரமே! [என்னை

999 பாட்டுக்கோ? அன்பினுக்கோ? பத்திக்கோ? அன்பர்
நீட்டுக்கெல் லாங்குறுகி நின்றாய்; பராபரமே! [தங்கள்

1000 முத்தாந்த வித்தே! முளைக்குநில மாய்எழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே! பராபரமே! (365)

1001 உன்னு வெளியாய், உறங்காத பேருணர்வாய்,
என் ஆவிக் குள்ளே யிருந்தாய், பராபரமே! (366)

1002 தத்துவமெல் லாம்அகன்ற தன்மையர்க்குச், சின்மய
நித்த!முத்த! சுத்த நிறைவே! பராபரமே! [மாம்

1003 உள்ளக் கொதிப்பகல, உள்ளுள்ளே ஆனந்த
வெள்ள மலர்க்கருணை வேண்டும்; பராபரமே! (368)

1004 என்னைப் புரப்பதரு ளின்கடனும்; என்கடனும்
நின்னிற் பணியறவே நிற்கை; பராபரமே! (369)

1005 தானேயாம் நன்னிலையைத் தந்தஅரு ளானந்த
வானே! மனுதீத வாழ்வே! பராபரமே! (370)

1006 மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்தநின்னிறைவைக்
கண்ணாரக் கண்டு களித்தேன்; பராபரமே! (371)

1007 அறியாமை ஈதென் றறிவித்த அன்றே
பிறியா அருள்நிலையும் பெறறேன்; பராபரமே! (372)

1008 தீதெனவும் நன்றெனவும் தேர்ந்து,நான் தேர்ந்தபடி
ஏதும் நடக்கவொட்டா தென்னே? பராபரமே! (373)

1009 கண்டஅறி வகண்டா காரம்என மெய்யறிவிற்
கொண்டவர்க்கே முத்தி கொடுப்பாய், பராபரமே!

1010 ஈருக வல்வினை நான் என்னுமல் இன்பசுகப்
பேரும் படிக்ககடிமை பெற்றேன்; பராபரமே! (375)

1011 பெற்றார் அனுபூதி, பேசாத மோனநிலை
கற்றார் உனைப்பிரியார் கண்டாய்! பராபரமே! (376)

1012 நீயேநான்என்று நினைப்பும் மறப்புமறத்
தாயே அனைய அருள் தந்தாய்; பராபரமே! (377)

1013 சஞ்சலமற் றெல்லாம்நீ தான்என் றுணர்ந்தேன்; என்
அஞ்சலியுங் கொள்ளாய்; அரசே! பராபரமே! (378)

1014 பூதமுதல் நாதம்வரை பொய்யென்ற மெய்யரெல்லாங்
காதலித்த இன்பக் கடலே! பராபரமே! (379)

1015 வாக்குமனம் ஒன்றுபட்ட வார்த்தையல்லால்,
[வெவ்வேருய்ப்
போக்குடைய வார்த்தை பொருந்தேன்; பராபரமே!

1016 வன்மையின்றி எல்லாம் மதித்துணர்வாய்க்
[ காகெடுவேன்
தன்மைஒன்றுந் தோயாத் தடையோ? பராபரமே!

1017 பத்தர்சித்தர் வாழி;பரி பக்குவர்கள் வாழிசெங்கோல்
வைத்தவர்கள் வாழி;குரு வாழி! பராபரமே! (382)

1018 கல்லாதேன் ஆனாலுங், கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன்; பராபரமே!

1019 சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச்,
[சுகங்கொடுத்த
நல்லவர்க்கே கொத்தடிமை நான்காண்! பராபரமே!

1020 முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி
தித்தித் திடவிளைந்த தேனே! பராபரமே! (385)

1021 நித்திரையும், பாழ்த்த நினைவும்அற்று நிற்பதுவோ
சுத்த அருள்நிலை? நீ சொல்லாய்! பராபரமே! (386)

1022 மண்ணும் மறிகடலும் மற்றுளவும் எல்லாம் உன்
கண்ணி லிருக்கவும்நான் கண்டேன்; பராபரமே!

1023 பூட்டிவைத்து, வஞ்சப் பொறிவழியே என்றனைநீ
ஆட்டுகின்ற தேதோ? அறியேன்; பராபரமே! (388)

1024 பொய்யுணர்வாய் இந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்
உய்யும் வகையும் உளதோ? பராபரமே! [தேன்

---

## 43. பைங்கிளிக் கண்ணி

1025 அந்தமுடன் ஆதி அளவாமல், என் அறிவில்
சுந்தரவான் சோதி துலங்குமோ? பைங்கிளியே! (1)

1026 அகம்மேவும் அண்ணலுக்கென் அல்லலெல்லாஞ் [சொல்லிச்,
சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா; பைங்கிளியே!

1027 ஆவிக்குள் ஆவியெனும் அற்புதனர் சிற்சுகந்தான்,
பாவிக்கும் கிட்டுமோ? சொல்லாய்நீ; பைங்கிளியே!

1028 ஆரும் அறியாமலெனை அந்தரங்கமாகவந்து
சேரும் படி இறைக்குச் செப்பிவா; பைங்கிளியே! (4)

1029 ஆருன கண்ணீர்க்கென் அங்கபங்க மானதையும்
கூருத தென்னே? குதலைமொழிப் பைங்கிளியே! (5)

1030 இன்பருள ஆடைஅழுக் கேறும்எமக் கண்ணல்சுத்த
அம்பரமாம் ஆடை அளிப்பானே? பைங்கிளியே! (6)

1031 உன்னுமல், ஒன்றிரண்டென் றோராமல், வீட்டுநெறி
சொன்னுன் வரவும்வகை சொல்லாய்நீ; பைங்கிளியே!

1032 ஊரும்இலார்; பேரும்இலார்; உற்றூர்பெற் றூருடனே
யாரும்இலார்; என்னை அறிவாரோ? பைங்கிளியே!(8)

1033 ஊரைப்பா ராமல்,எனக் குள்ளகத்து நாயகனர்
சீரைப்பார்த் தால்,கருணை செய்வரோ? பைங்கிளியே!

1034 என்று விடியும்? இறைவாஓ! என்றென்று
நின்ற நிலையெல்லாம் நிகழ்த்தாய்நீ ; பைங்கிளியே!

1035 எந்த மடலூடும் எழுதா இறைவடிவைச்
சிந்தைமட லாஎழுதிச் சேர்ப்பேனோ? பைங்கிளியே!

1036 கண்ணுள் மணி போல்இன்பம் காட்டி எனைப்பிரிந்த
திண்ணியரும் இன்னம்வந்து சேர்வாரோ? பைங்
[ கிளியே!

1037 ஏடார் மலர்சூடேன் ; எம்பெருமான் பொன்னடியாம்
வாடா மலர்முடிக்கு வாய்க்குமோ? பைங்கிளியே!

1038 கல்ஏன்? மலர்ஏன்? கனிந்தஅன்பே பூசை என்ற
நல்லோர், பொல் லாஎனையும் நாடுவரோ?
[பைங்கிளியே! (14)

1039 கண்டதனைக் கண்டு கலக்கந் தவிர்எனவே
விண்டபெரு மானையும்நான் மேவுவனோ?
[பைங்கிளியே! (15)

1040 காணாத காட்சி கருத்துவந்து காணாமல்,
வீணாள் கழித்து மெலிவேனோ? பைங்கிளியே! (16)

1041 காந்தம் இரும்பைக் கவர்ந்திழுத்தால் என்ன அருள்
வேந்தன் எமைஇழுத்து மேவுவனோ? பைங்கிளியே!

1042 காதலால் வாடினதுங் கண்டனையே ; எம்இறைவர்
போதரவால் இன்பம் புசிப்பேனோ? பைங்கிளியே!

1043 கிட்டிக்கொண் டன்பர்உண்மை கேளாப் பலஅடி
[ கொன்
பட்டிக்கும் இன்பமுண்டோ? சொல்லாய்நீ:
[ பைங்கிளியே! (19)

1044 கிட்டுராய் நெஞ்சிற் கிளர்வார் ; தழுவஎன்ருல்
நெட்டூர ராவர் ; அவர் நேசமென்னே? பைங்கிளியே!

1045 கூறும் குணமும் இல்லாக் கொள்கையினர் என்கவலை
ஆறும் படிக்கும் அணைவாரோ? பைங்கிளியே! (21)

1046 சின்னம் சிறியேன்றன் சிந்தைகவர்ந்தார் இறைவர் ;
தன்னம் தனியே தவிப்பேனே? பைங்கிளியே! (22)

1047 சிந்தை மருவித் தெளிவித் தெனை ஆள
வந்தகுரு நாதன் அருள் வாய்க்குமோ? பைங்கிளியே!

1048 சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை,
அல்லும் பகலும் அணைவேனே? பைங்கிளியே! (24)

1049 தற்போதத் தாலே தலைகீழ தாக, ஐயன்
நற்போத இன்புவர நாள்செலுமோ? பைங்கிளியே!

1050 தன்னை அறியும் தருணந் தனில்தலைவர்
என்னை அணை யாதவண்ணம் எங்கொளித்தார்?
[ பைங்கிளியே! (26)

1051 தாங்கரிய மையலெல்லாம் தந்தெனைவிட் டின்னரு
[ ளாம்
பாங்கியைச்சேர்ந் தார்; இறைக்குப் பண்போசொல்
[பைங்கிளியே!

1052 தாவியதோர் மற்கடமாம் தன்மை விட்டே, அண்ண
[ லிடத்
தோவியம்போல் நிற்கில்எனை உள்குவரோ?
[ பைங்கிளியே!

1053 தீராக் கருவழக்கைத் தீர்வை இட்டங் கென்னையினிப்
பாரேரு தாண்டானைப் பற்றுவனே? பைங்கிளியே!

1054 தூங்கிவிழித் தென்னபலன்? தூங்காமல் தூங்கி
[ நிற்கும்
பாங்குகண்டா லன்றோ? பலன்காண்பேன்;
[ பைங்கிளியே! (30)

1055 தொல்லைக் கவலை தொலைத்துத், தொலையாத
எல்லையிலா இன்பமயம் எய்துவனோ? பைங்கிளியே!

1056 நன்னெஞ்சத் தன்பர்எல்லாம் நாதரைச்சேர்ந்
[ தின்பணைந்தார்
வன்னெஞ்சத் தாலேநான் வாழ்விழந்தேன்;
[பைங்கிளியே! (32)

1057 நானே கருதின்வர நாடார்;சும் மாஇருந்தால்
தானே அணைவர்;அவர் தன்மைஎன்னே?
[ பைங்கிளியே! (33)

1058 நீர்க்குமிழி போன்றஉடல் நிற்கையிலே, சாசுவதம்
சேர்க்கஅறியாமல் திகைப்பேனோ? பைங்கிளியே!

1059 நெஞ்சகத்தில் வாழ்வார், நினைக்கின்வே றென்றணை
[யார்!
வஞ்சகத்தா ரல்லர்;அவர் மார்க்கமென்னோ?
[ பைங்கிளியே! (35)

1060 பன்முத்தி ரைச்சமயம் பாழ்படக்கல் லாலடிவாழ்
சின்முத் திரைஆசைச் சேர்வேனோ? பைங்கிளியே!

1061 பச்சைகண்ட நாட்டிற் பறக்கும்உனைப் போற்
[ பறந்தேன்;
இச்சைஎல்லாம் அண்ணற் கியம்பிவா; பைங்கிளியே!

1062 பாசபந்தஞ் செய்ததுன்பம் பாராமல். எம்இறைவர்
ஆசைதந்த துன்பமதற் காற்றேன்நான்;பைங்கிளியே!

1063 பாராசை அற்றிறையைப் பற்றறநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா ; பைங்கிளியே ! (39)

1064 பேதைப் பருவத்தே பின்றொடர்ந்தென் பக்குவம்முன்
சோதித்த அண்ணல்வந்து தோய்வாரோ?
[பைங்கிளியே! (40)

1065 பைம்பயிரை நாடும்உன்போல், பார்பூத்த
[பைங்கொடிசேர்
செம்பயிரை நாடித் திகைத்தேன்நான்; பைங்கிளியே!

1066 பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ? எம்இறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா; பைங்கிளியே! (42)

1067 பொய்ப்பணிவேண் டேனைப் பொருட்படுத்தி,
[அண்ணலென்பால்
மெய்ப்பணியும், தந்தொருகால் மேவுவனோ?
[பைங்கிளியே! (43)

1068 மண்உறங்கும்; விண்உறங்கும்; மற்றுளஎ
[லாம்உறங்கும்;
கண்உறங்கேன் எம்இறைவர் காதலால்
[பைங்கிளியே! (44)

1069 மட்டுப் படாத மயக்கமெல்லாந் தீர,என்னை
வெட்டவெளி வீட்டில்அண்ணல் மேவுவனோ?
[பைங்கிளியே!

1070 மாலைவளர்த் தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம்
பாலைவனத் தில்விட்ட பாவமென்னோ? பைங்கிளியே!

1071 மெய்யில்நோய் மாற்றவுழ்தம் மெத்தவுண்டெம்
[அண்ணல்தந்த
மையல்நோய் தீர்க்க மருந்தும் உண்டோ?
பைங்கிளியே! (47)

1072 மேவுபஞ்ச வண்ணமுற்ருய்; வீண்சிறையால் [அல்லல்உற்ருய்;
பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா; பைங்கிளியே!

1073 வாய்திறவா வண்ணம்எனை வைத்தாண்டார்க்கென் [துயரை
நீதிறவாச் சொல்லில் நிசமாங்காண்; பைங்கிளியே!

1074 வாட்டப் படாத மவுனஇன்பம் கையாலே
காட்டிக் கொடுத்தானைக், காண்பேனே? [பைங்கிளியே! (50)

1075 வாரா வரவாக வந்தருளும் மோனருக்கென்
பேராசை யெல்லாம்போய்ப் பேசிவா; பைங்கிளியே!

1076 விண்ணவர்தம் பால்அமுதம் வேப்பங்காயாகஎன்பால்
பண்ணியதெம் அண்ணல்மயல் பார்த்தாயோ! [பைங்கிளியே! (52)

1077 விண்ணுள் வளிஅடங்கி வேறற்ற தென்ன, அருட்
கண்ணுள் அடங்கிடவும் காண்பேனே? பைங்கிளியே!

1078 விண்ணூர் நிலவுதவழ் மேடையில்எல் லாரும்உற,
மண்ணூன வீட்டில்என்னை வைத்ததென்னே? [பைங்கிளியே! (54)

1079 உள்ளத்தி னுள்ளே ஒளித்திருந்தென் கள்ளமெல்லாம்
வள்ளலறிந் தால்,எனக்கு வாயும்உண்டோ? [பைங்கிளியே! (55)

1080 ஆகத்தை நீக்குமுன்னே, ஆவித் துணைவரை நான்
தாகத்தின் வண்ணம் தழுவுவனே? பைங்கிளியே!

1081 தானே சுபாவம் தலைப்படநின் ருல்,ஞான
வானு னவரும் வருவாரோ? பைங்கிளியே! (57)

1082 கள்ளத் தலைவரவர் கைகாட்டிப் பேசாமல்
உள்ளத்தில் வந்த உபாயமென்னே? பைங்கிளியே!

---

## 44. எந்நாட் கண்ணி

### 1. தெய்வ வணக்கம்

1083 நீர்பூத்த வேணி நிலவெறிப்ப, மன்றாடும்
கார்பூத்த கண்டனையான் காணும்நாள் எந்நாளோ!

1084 பொன்னாரும் மன்றுள்மணிப் பூவைவிழி வண்டுசுற்
என்னா ரமுதின் நலம் இச்சிப்ப தெந்நாளோ! [றும்

1085 நீக்கிமலக் கட்டறுத்து, நேரே வெளியில்எம்மைத்
தூக்கிவைக்கும் தாளைத் தொழுதிடும்நாள் எந்நாளோ!

1086 கருமுகங்காட் டாமல் என்றும் கர்ப்பூரம் வீசும்
திருமுகமே நோக்கித் திருக்களிப்ப தெந்நாளோ!

1087 வெஞ்சே லெனும்விழியார் வேட்கைநஞ்சுக் கஞ்சினரை
அஞ்சேல் எனுங்கைக் கபயமென்ப தெந்நாளோ! (5)

1088 ஆறு சமயத்தும் அதுஅதுவாய் நின்றிலங்கும்
வீறு பரைதிருத்தாள் மேவும்நாள் எந்நாளோ! (6)

1089 பச்சைநிற மாய்ச்சிவந்த பாகங் கலந்துலகை
இச்சையுடன் ஈன்றாளை யாம்காண்ப தெந்நாளோ!

1090 ஆதிஅந்தங் காட்டா தகண்டிதமாய் நின்றுணர்த்தும்
போதவடி வாம்அடியைப் போற்றும்நாள்
[எந்நாளோ! (8)

1091 கங்கை நிலவுசடைக் காட்டானைத் தந்தையெனும்
புங்கவெண்கோட் டானைபதம் புந்திவைப்ப
[ தெந்நாளோ! (9)

1092 அஞ்சுமுகம் காட்டாமல், ஆறுமுகங் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப
[ தெந்நாளோ! (10)

1093 தந்தைஇரு தாள் துணித்துச், தம்பிரான் தாள்
[ சேர்ந்த
எந்தைஇரு தாளிணைக்கே இன்புறுவ தெந்நாளோ!

---

## 2. குருமரபின் வணக்கம்

1094 துய்ய கரமலரால் சொல்லாமற் சொன்னஉண்மை
ஐயனைக்கல் லால்அரசை யாம்அணுவ தெந்நாளோ!

1095 சிந்தையினுக் கெட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல
நந்தியடிக் கீழ்க்குடியாய் நாம்அணுவ தெந்நாளோ!

1096 எந்தை சனற்குமர னுதிஎமை யாட்கொள்வான்
வந்த தவத்தினரை வாழ்த்தும்நாள் எந்நாளோ!

1097 போய்கண்டார் காணுப் புனிதமேனும் அத்துவித
மேய்கண்ட நாதன்அருள் மேவும்நாள்
[எங்நாளோ!

1098 பாதிவிருத் தத்தால்இப் பார்விருத்தமாக உண்மை
சாதித்தார் போன்னடியைத் தான்பணிவ
[தேங்நாளோ!

1099 சிற்றம் பலமன்னும் சின்மயராந் தில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறும்நாள் எந்நாளோ! (6)

1100 குறைவிலருள் ஞானமுதல் கொற்றங் குடிஅடிகள்
நறைமலர்த்தாட் கன்புபெற்று நாம்இருப்ப தெந்
[ நாளோ! (7)

1101 நாளவங்கள் போகாமல் நன்னெறியைக் காட்டிஎமை
ஆளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந்நாளோ?

1102 என்அறிவை உள்ளடக்கி, என்போல் வரும்மவுனி
தன்அறிவுக் குள்ளேநான் சாரும்நாள் எந்நாளோ?

1103 ஆறுள்ஒன்றை நாடின், அதற் காறும்உண்டாம்
[ என்றெமக்குக்
கூறும் மவுனிஅருள் கூடும்நாள் எந்நாளோ!

1104 'நில்லாமல் நின்றருளை நேரேபார்' என்றஒரு
சொல்லால் மவுனிஅருள் தோற்றும்நாள்
[ எந்நாளோ! (11)

1105 வைதிகமாம் சைவ மவுனிமவு னத்தளித்த
மெய்திகழ்ந்தென் அல்லல் விடியும்நாள் எந்நாளோ!

1106 வாக்குமனம் அற்ற மவுனிமவு னத்தருளே
தாக்கவும்,என் அல்லலெல்லாம் தட்டழிவ
தெந்நாளோ? (13)

---

## 3. அடியார் வணக்கம்

---

1107 வெம்பந்தம் தீர்த்துலகாள் வேந்தன் திருஞான
சம்பந்தனை அருளால் சாரும்நாள் எந்நாளோ!

1103 ஏரின் சிவபோகம் இங்கிவர்க்கே என்னஉழ
வாரம்கொள் செய்கையர்தாள் வாரம்வைப்ப தெந்
[ நாளோ ! (2)

1109 பித்தர் இறை என்றறிந்து பேதைபால் தூதனுப்பு
வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ !

1110 போதஊர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூர் ஐயன்அன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ !

1111 ஓட்டுடன்பற் றின்றி உலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ !

1112 கண்டதுபொய் என்றகண்டா காரசிவம்மெய்யெனவே
விண்டசிவ வாக்கியர்தாள் மேவும்நாள் எந்நாளோ !

1113 சக்கர வர்த்தி தவராச யோகியெனும்
மிக்கதிரு மூலன்அருள் மேவும்நாள் எந்நாளோ ! (7)

1114 கந்தர்அனு பூதிபெற்றுக் கந்தரனு பூதிசொன்ன
எந்தைஅருள் நாடி யிருக்கும்நாள் எந்நாளோ ! (8)

1115 எண்ணரிய சித்தர் இமையோர் முதலான
பண்ணவர்கள் பத்தர் அருள் பாலிப்ப தெந்நாளோ !

---

## 4. யாக்கையைப் பழித்தல்

1116 சுக்கிலமும், நீரும், சொரிமலமும் நாறும்உடற்
புக்குழலும் வாஞ்சைஇனிப் போதும்என்ப
[நெந்நாளோ ! (1)

1117 நீர்க்குமிழி பூணமைத்து நின்ருலும் நில்லாமெய்
பார்க்கு மிடத்திதன்மேல் பற்றறுவ தெந்நாளோ !(2)

1118 காக்கை, நரி, செந்நாய், கழுகொருநாள் கூடிஉண்டு
தேக்குவிருந் தாம்உடலைச் சீஎன்ப தெந்நாளோ! (3)

1119 செங்கிருமி ஆதி செனித்தசென்ம பூமியினை
இங்கெனுடல் என்னும் இழுக்கொழிவ தெந்நாளோ !

1120 தத்துவர்தொண் ணூற்றறுவர் தாமாய்வாழ் [இந்நாட்டைப்
பித்தன் நான் என்னும் பிதற்ருெழிவ தெந்நாளோ !

1121 ஊனென்றி நாதன் உணர்த்துமதை விட்டறிவேன்
நானென்ற பாவிதலை நாணும்நாள் எந்நாளோ !

1122 வேலையிலா வேதன் விதித்தஇந்த்ர சாலஉடல்,
மாலைவியா பார மயக்கொழிவ தெந்நாளோ ! (7)

1123 ஆழ்ந்து நினைக்கின் அரோசிகமாம் இவ்வுடலில்
வாழ்ந்துபெறும் பேற்றை மதிக்கும்நாள் எந்நாளோ!

1124 மும்மலச்சே ருன முழுக்கும்பி பாகமெனும்
இம்மலகா யத்துள் இகழ்ச்சிவைப்ப தெந்நாளோ !

1125 நாற்றமிகக் காட்டும் நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமைஎன்ப தெந்நாளோ ! (10)

1126 உருஇருப்ப, உள்ளேதான் ஊறுமலக் கேணி
அருவருப்பு வாழ்க்கையைக்கண் டஞ்சும்நாள் [எந்நாளோ ! (11)

———

## 5. மாதரைப் பழித்தல்

1127 மெய்வீசு நாற்றமெல்லாம் மிக்கமஞ்ச ளால்மறைத்துப்
பொவீசும் வாயார் புலேஒழிவ தெந்நாளோ! (1)

1128 திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக் குழற்காட்டில்
கண்ணிவைப்போர் மாயம் கடக்கும்நாள் எந்நாளோ!

1129 கண்டுமொழி பேசிமனம் கண்டுகொண்டுகைவிலேயாக்
கொண்டுவிடும் மானர்பொய்க் கூத்தொழிவ
[எந்நாளோ! (3)

1130 காமனேவா என்றிருண்ட கண்வலேயை வீசுமின்னர்
நாமம் மறந்தருளே நண்ணும்நாள் எந்நாளோ! (4)

1131 கண்களில்வெண் பீளே கரப்பக், கருமையிட்ட
பெண்கள்மயல் தப்பிப் பிழைக்கும்நாள் எந்நாளோ!

1132 வீங்கித் தளர்ந்து விழுமுலேயார் மேல்வீழ்ந்து
தூங்குமதன் சோம்பைத் துடைக்கும்நாள்
[எந்நாளோ!

1133 கச்சிருக்கும் கொங்கை, கரும்பிருக்கும் இன்மாற்றம்
வைச்சிருக்கு மாதர் மயக்கொழிவ தெந்நாளோ! (7)

1134 பச்சென்ற கொங்கைப் பசப்பியர்பா ழானமயல்
நச்சென் றறிந்தருளே நண்ணும்நாள் எந்நாளோ!

1135 உந்திச் சுழியால் உளத்தைச் சுழித்தகன
தந்தித் தனத்தார் தமைமறப்ப தெந்நாளோ!

1136 தட்டுவைசே லேக்கொய் சகத்திற்சிந் தையெல்லாங்
கட்டிவைக்கும் மாயமின்னர் கட்டழிவ தெந்நாளோ!

1137 ஆழாழி என்ன அளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழான மாதர்மயற் பற்றொழிவ தெந்நாளோ! (11)

1138 தூயபனித் திங்கள் சுடுவதெனப் பித்தேற்றும்
மாய மடவார் மயக்கொழிவ தெந்நாளோ! (12)

1139 ஏழைக் குறும்புசெயும் ஏந்திழையார் மோகமெனும்
பாழைக் கடந்து, பயிராவ தெந்நாளோ! (13)

1140 விண்டு மொழிகுளறி, வேட்கைமது மொண்டுதரும்
தொண்டியர்கள் கட்கடையிற் சுற்றொழிவ
[தெந்நாளோ!

1141 மெய்யில் சிவம்பிறக்க மேவும் இன்பம் போல்,மாதர்
பொய்யில்இன்பின் றென்று பொருந்தாநாள்
[எந்நாளோ! (15)

---

## 6. தத்துவ முறைமை

1142 ஐம்பூதத் தாலே அலக்கழிந்த தோடம்அற
எம்பூத நாதன்அருள் எய்தும்நாள் எந்நாளோ! (1)

1143 சத்தமுத லாம்புலனிற் சஞ்சரித்த கள்வரெனும்
பித்தர்பயம் தீர்ந்து பிழைக்கும்நாள் எந்நாளோ! (2)

1144 நாளும் பொறிவழியை நாடாத வண்ணம்எமை
ஆளும் பொறியால் அருள்வருவ தெந்நாளோ! 3)

1145 வாக்காதி யானகன்ம மாயைதம்பால் வீண்காலம்
போக்காமல் உண்மை பொருந்தும்நாள் எந்நாளோ!

1146 மணமான வானரக்கைம் மாலேயா காமல்,
எனே ஆள் அடிகள்அடி எய்தும்நாள் எந்நாளோ!

1147 வேட்டைப் புலப்புலேயர் மேவாத வண்ணம் மனக்
காட்டைத் திருத்திக் கரைகாண்ப தெந்நாளோ! (6)

1148 உந்து பிறப்பிறப்பை உற்றுவிடா தெந்தையருள்
வந்து பிறக்க மனம்இறப்ப தெந்நாளோ! (7)

1149 புத்திஎனுந் துத்திப் பொறிஅரவின் வாய்த்தேரை
ஒத்துவிடா தெந்தையருள் ஓங்கும்நாள் எந்நாளோ!

1150 ஆங்காரம் என்னும்மத யானேவா யிற்கரும்பாய்
ஏங்காமல் எந்தைஅருள் எய்தும்நாள் எந்நாளோ!

1151 சித்தமெனும் பௌவத் திரைக்கடலில் வாழ்துரும்பாய்
நித்தம்அலே யாதருளில் நிற்கும்நாள் எந்நாளோ!

1152 வித்தியா தத்துவங்கள் ஏழும் வெருண்டோடச்,
சுத்தபர போகத்தைத் துய்க்கும்நாள் எந்நாளோ!

1153 சுத்தவித்தை யேமுதலாத் தோன்றும்ஓர் ஐந்துவகைத்
தத்துவத்தை நீக்கிஅருள் சாரும்நாள் எந்நாளோ?

1154 பொல்லாத காமப் புலேத்தொழிலில் என்னறிவு
செல்லாமல் நன்னெறியிற் சேரும்நாள் எந்நாளோ!

1155 அடிகள்அடிக் கீழ்க்குடியாய் யாம்வாழா வண்ணம்
குடிகெடுக்கும் பாழ்மடிமைக் கூறொழிவ தெந்நாளோ!

1156 ஆன புறக்கருவி ஆறுபத்தும் மற்றுளவும்
போனவழி யுங்கூடப் புல்முளேப்ப தெந்நாளோ! (15)

1157 அந்தகனுக் கெங்கும்இருள் ஆனவா ருஅறிவில்
வந்தஇருள் வேலை வடியும்நாள் எந்நாளோ! (16)

1158 புன்மலத்தைச் சேர்ந்துமல போதம் பொருந்துதல்,
[போய்
நின்மலத்தைச் சேர்ந்து,மலம் நீங்கும்நாள்
[எந்நாளோ! (17)

1159 கண்டுகண்டும் தேருக் கலக்கமெல்லாந் தீரும்வண்
[ணம்
பண்டைவினை வேரைப் பறிக்கும்நாள் எந்நாளோ!

1160 பைங்கூழ் வினைதான் படுசாவி யாகஎமக்
கெங்கோன் கிரணவெயில் எய்தும்நாள் எந்நாளோ!

1161 குறித்தவிதம் ஆதியாற் கூடும்வினை யெல்லாம்
வறுத்தவித்தாம் வண்ணம்அருள் வந்திடும்நாள்
[எந்நாளோ! (20)

1162 சஞ்சிதமே ஆதி சரக்கான மூச்சேறும்
வெந்தபொரி யாகஅருள் மேவும்நாள் எந்நாளோ!

1163 தேகமுதல் நான்காத் திரண்டொன்ருய் நின்றிலகும்
மோகமிகு மாயை முடியும்நாள் எந்நாளோ! (22)

1164 சத்த முதலாத் தழைத்திங் கெமக்குணர்த்தும்
சுத்தமா மாயைத் தொடக்கறுவ தெந்நாளோ!

1165 எம்மை வினையை இறையைஎம்பாற் காட்டாத
அம்மை திரோதை அகலும்நாள் எந்நாளோ! (24)

1166 நித்திரையாய் வந்து நினைவழிக்கும் கேவலமாம்
சத்துருவை வெல்லும் சமர்த்தறிவ தெந்நாளோ!

1167 சன்னல்பின்ன லான சகலமெனுங் குப்பையிடை
முன்னவன்ஞா னக்கனலை மூட்டும்நாள் எந்நாளோ !

1168 மாயா விகார மலமொழிசுத் தாவத்தை
தோயா அருளைத் தொடரும்நாள் எந்நாளோ ! (27)

## 7. தன்னுண்மை

1169 உடம்பறியும் என்னும் அந்த ஊழலெல்லாம் தீரத்
திடம்பெறவே எம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ !

1170 செம்மைஅறி வால்அறிந்து தேகாதிக் குள்இசைந்த
எம்மைப் புலப்படவே யாம்அறிவ தெந்நாளோ !

1171 தத்துவமாம் பாழ்த்த சடஉருவைத் தான்சுமந்த
சித்துருவாம் எம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ ! (3)

1172 பஞ்சப் பொறியைஉயிர் என்னும்அந்தப் பஞ்சமறச்
செஞ்செவே எம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ ! (4)

1173 அந்தக் கரணம்உயி ராம்என்ற அந்தரங்க
சிந்தைக் கணத்தில்எம்மைத் தேர்ந்தறிவ
[ தெந்நாளோ ! (5)

1174 முக்குணத்தைச் சீவனென்னும் மூடத்தை விட்டருளால்
அக்கணமே எம்மை அறிந்து கொள்வ தெந்நாளோ!

1175 காலைஉயிர் என்னும் கலதிகள்சொற் கேளாமல்
சீவமுடன் எம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ!

1176 வான்கெடுத்துத் தேடு மதிகேடர் போலஎனை
நான்கொடுத்துத் தேடாமல் நன்கறிவ தெந்நாளோ !

## 8. அருளியல்பு

1177 ஈனம் தருநா டிது நமக்கு வேண்டாஎன்
ருனந்த நாட்டில் அவதரிப்ப தெந்நாளோ ! (1)

1178 பொய்க்காட்சி யான புவனத்தை விட்டருளாம்
மெய்க்காட்சி யாம்புவனம் மேவும்நாள் எந்நாளோ !

1179 ஆதிஅந்தம் காட்டாமல் அம்பரம்போலே நிறைந்த
தீதில் அருட்கடலைச் சேரும்நாள் எந்நாளோ ! (3)

1180 எட்டுத் திசைகீழ்மேல் எங்கும் பெருகிவரும்
வெட்டவெளி விண்ணூற்றின் மெய்தோய்வ
[தெந்நாளோ ! (4)

1181 சூதான மென்று சுருதியெல்லாம் ஓலமிடும்
மீதான மானவெற்பை மேவும்நாள் எந்நாளோ ! (5)

1182 வெந்துவெடிக் கின்றசிந்தை வெப்பகலத் தண்ணரு
[ளாய்
வந்துபொழி கின்ற மழைகாண்ப தெந்நாளோ ! (6)

1183 சூரியர்கள் சந்திரர்கள் தோன்ருச் சுயஞ்சோதிப்
பூரணதே யத்திற் பொருந்தும்நாள் எந்நாளோ !

1184 கன்றுமன வெப்பக் கலக்கமெலாம் தீர அருள்
தென்றல்வந்து வீசுவெளி சேரும்நாள் எந்நாளோ !

1185 கட்டுநமன் செங்கோல் கடா அடிக்குங் கோலாக
வெட்ட வெளிப்பொருளை மேவும்நாள் எந்நாளோ !

1186 சாலக் கபாடத் தடைதீர, எம்பெருமான்
ஓலக்க மண்டபத்துள் ஓடும்நாள் எந்நாளோ !

1187 விண்ணவன் தாள் என்னும் விரிநிலா மண்டபத்தில்
தண்ணீர் அருந்தித் தளர்வொழிவ தெந்நாளோ!

1188 வெய்யபுவி பார்த்து விழித்திருந்த அல்லலறத்
துய்ய அருளில் துயிலும்நாள் எந்நாளோ! (12)

1189 வெய்ய பிறவிவெயில் வெப்பமெலாம் விட்டகல
ஐயன்அடி நீழல் அணையும்நாள் எந்நாளோ! (13)

1190 வாதைப் பிறவி வளைகடலை நீந்தஐயன்
பாதப் புணை இணையைப் பற்றும்நாள் எந்நாளோ!

1191 ஈனம்இல்லா மெய்ப்பொருளை இம்மையிலே [காணவெளி
ஞானமெனும் அஞ்சனத்தை நான்பெறுவ [தெந்நாளோ! (15)

1192 எல்லாம் இறந்தவிடத் தெந்தைநிறை வாம்வடிவைப்
புல்லாமற் புல்லிப் புணரும்நாள் எந்நாளோ! (16)

1193 சடத்துளுயிர் போல்எமக்குத் தான்உயிராய் ஞானம்
நடத்துமுறை கண்டுபணி நாம்விடுவ தெந்நாளோ!

1194 எக்கணுமாம் துன்ப இருட்கடலை விட்டருளாம்
மிக்ககரை ஏறி வெளிப்படுவ தெந்நாளோ! (18)

---

## 9. பொருளியல்பு

1195 கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போல் [மெய்ஞ்ஞான
மெய்விளக்கின் பின்னேபோய், மெய்காண்ப [தெந்நாளோ! (1)

1196 கேடில்பசு பாசமெல்லாங் கீழ்ப்படவும், தானேமேல்
ஆடும் சுகப்பொருளுக் கன்புறுவ தெந்நாளோ!

1197 ஆணவத்தை நீக்கி, அறிவூடே ஐவகையாக்
காணவத்தைக் கப்பாலைக் காணும்நாள் எந்நாளோ!

1198 நீக்கப் பிரியா; நினைக்கமறக் கக்கூடாப்,
போக்குவர வற்ற பொருள் அணைவ தெந்நாளோ!

1199 அண்டருக்கும் எய்ப்பில்வைப்பாம் ஆரமுதை,
[என்னகத்திற்
கண்டுகொண்டு நின்று களிக்கும்நாள் எந்நாளோ!

1200 காட்டும் திருவருளே கண்ணுகக் கண்டுபர
வீட்டின்ப மெய்ப்பொருளை மேவும்நாள் எந்நாளோ!

1201 நானென தன்மை நழுவியே, எவ்வுயிர்க்கும்
தானென உண்மைதனைச் சாரும்நாள் எந்நாளோ!

1202 சிந்தை மறந்து, திருவருளாய் நிற்பவர்பால்
வந்தபொருள், எம்மையுந்தான் வாழ்விப்ப
[தெந்நாளோ! (8)

1203 எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் வியாபகமாய்
உள்ள ஒன்றை உள்ளபடி ஓரும்நாள் எந்நாளோ!

1204 அருவுருவம் எல்லாம் அகன்றதுவா யான
பொருள்எமக்கு வந்து புலப்படுவ தெந்நாளோ!

1205 ஆரணமும் காணு அகண்டிதா காரபரி
பூரணம்வந் தெம்மைப் பொருந்தும்நாள் எந்நாளோ!

1206 சத்தொடுசித் தாகித் தயங்கியஆ னந்தபரி
சுத்த அகண்டசிவம் தோன்றும்நாள் எந்நாளோ!

1207 எங்கெங்கும் பார்த்தாலும் இன்புருவாய் நீக்கமின்றித்
தங்கும் தனிப்பொருளைச் சாரும்நாள் எந்நாளோ!

1208 அடிமுடிகாட் டாதசுத்த அம்பரமாஞ் சோதிக்
கடுவெளிவந் தென்னைக் கலக்கும்நாள் எந்நாளோ!

1209 ஒன்றனையுங் காட்டா உளத்திருளைச் சூறையிட்டு
நின்றபரஞ் சோதியுடன் நிற்கும்நாள் எந்நாளோ!

1210 எந்தச் சமயம் இசைந்தும் அறி வூடறிவாய்
வந்தபொரு ளேபொருளா வாஞ்சிப்ப தெந்நாளோ!

1211 எவ்வாறிங் குற்றுணர்ந்தார் யாவர் அவர்தமக்கே
அவ்வாருய் நின்றபொருட் கன்புவைப்பதெந் நாளோ!

1212 பெண்ணாண் அலியெனவும் பேசாமல் என்னறிவின்
கண்ணூடே நின்றஒன்றைக் காணும்நாள் எந்நாளோ!

1213 நினைப்பும் மறப்பும்அற நின்றபரஞ் சோதி
தனைப்புலமா என்னறிவில் சந்திப்ப தெந்நாளோ!

---

## 10 ஆனந்த இயல்பு

1214 பேச்சுமூச் சில்லாத பேரின்ப வெள்ளம்உற்று
நீச்சு நிலை காணமல் நிற்கும்நாள் எந்நாளோ! (1)

1215 சித்தம் தெளிந்தோர் தெளிவில் தெளிவான
சுத்த சுகக்கடலுள் தோயும்நாள் எந்நாளோ! (2)

1216 சிற்றின்பம் உண்டுழ் சிதைய அனந் தங்கடல்போல்
முற்றின்ப வெள்ளம்எமை மூடும்நாள் எந்நாளோ!

1217 எல்லையில்பே ரின்பமயம் எப்படிஎன் றோர்தமக்குச்
சொல்லறியா ஊமர்கள்போல் சொல்லும்நாள்
[எந்நாளோ! (4)

1218 அண்டரண்ட கோடி அனைத்தும் உகாந்தவெள்ளம்
கொண்டதெனப் பேரின்பம் கூடும்நாள் எந்நாளோ!

1219 ஆதிஅந்தம் இல்லாத ஆதி அனாதிஎனும்
சோதிஇன்பத் தூடே துளையும்நாள் எந்நாளோ! (6)

1220 சாலோக மாதி சவுக்கியமும் விட்டநம்பால்
மேலான ஞானஇன்பம் மேவும்நாள் எந்நாளோ! (7)

1221 தற்பரத்தி னுள்ளேயும் சாலோக மாதிஎனும்
பொற்பறிந்தா னந்தம்பொருந்தும்நாள் எந்நாளோ!

1222 உள்ளத்தி னுள்ளேதான் ஊறும் சிவானந்த
வெள்ளந் திளைத்து, விடாய்தீர்வ தெந்நாளோ! (9)

1223 கன்னலுடன் முக்கனியும், கற்கண்டுஞ், சீனியுமாய்,
மன்னும் இன்ப ஆரமுதை வாய்மடுப்ப தெந்நாளோ!

1224 மண்ணா டுழன்ற மயக்கமெல்லாந் தீர்ந்திடவும்
விண்ணா டெழுந்தசுகம் மேவும்நாள் எந்நாளோ!

1225 கானற் சலம்போன்ற கட்டுமலைப் பொய்தீர
வானமுத வாவி மருவும்நாள் எந்நாளோ! (12)

1226 தீங்கரும்பென் றுல்இனியா, தின்றல் இனிப்பனபோல்
பாங்குறும்பே ரின்பம் படைக்கும்நாள் எந்நாளோ!

1227 புண்ணியபா வங்கள் பொருந்தாமெய் யன்பரெல்லாம்
நண்ணியபே ரின்பசுகம் நாம்அணைவ தெந்நாளோ!

---

## 11. அன்பு நிலைமை

1228 தக்கரவி கண்ட சரோருகம்போல் என் இதயம்
மிக்கஅருள் கண்டு விகசிப்ப தெந்நாளோ ! (1)

1229 வானமுகில்கண்ட மயூரபட்சி போலஐயன்
ஞான நடம் கண்டு நடிக்கும்நாள் எந்நாளோ ! (2)

1230 சந்திரனை நாடும் சகோரபட்சி போல்அறிவில்
வந்தபரஞ் சோதியையாம் வாஞ்சிப்ப தெந்நாளோ!

1231 குத்திரமெய்ப் புற்றகத்துக் குண்டலிப்பாம் பொன்
[ருட்டும்
சித்தனையென் கண்ணால் தெரிசிப்ப தெந்நாளோ ! (4)

1232 அந்தரத்தே நின்றுடும் ஆனந்தக் கூத்தனுக்கென்
சிந்தை திறைகொடுத்துச் சேவிப்ப தெந்நாளோ ! (5)

1233 கள்ளன் இவன் என்றுமெள்ளக் கைவிடுதல்
[காரியமோ ?
வள்ளலே என்று வருந்தும்நாள் எந்நாளோ ! (6)

1234 விண்ணுடர் காணு விமலா ! பரஞ்சோதி
அண்ணு!வா வா!என் றரற்றும்நாள் எந்நாளோ! (7)

1235 ஏதேது செய்தாலும் என்பணிபோய் நின்பணியாம்
மாதேவா ! என்று வருந்தும்நாள் எந்நாளோ ! (8)

1236 பண்டும்கா ணேன்நான்; பழம்பொருளே! இன்றும்
[உனைக்
கண்டும்கா ணேன்எனவும் கைகுவிப்ப தெந்நாளோ !

1237 பொங்கேத மான புழுக்கமெல்லா ந் தீரஇன்பம்
எங்கேளங் கேளன் றிரங்கும்நாள் எந்நாளோ! (10)

1238 கடலின்மடை விண்ட துபோல் கண்ணீ ராருக
உடல்வெதும்பி மூர்ச்சித் துருகும்நாள் எந்நாளோ!

1239 புலர்ந்தேன், முகஞ்சருகாய்ப் போனேன், நிற் காண
அலந்தேன்என் றேங்கி அழுங்கும்நாள் எந்நாளோ!

1240 புண்ணீர்மை யாளர் புலம்புமா போல் புலம்பிக்
கண்ணீரும் கம்பலையும் காட்டும்நாள் எந்நாளோ!

1241 போற்றேன்என் றுலும்என்னைப் புந்திசெய்யும்
[வேதனைக்கிங்
காற்றேன் ஆற் றேனென் றரற்றும்நாள் எந்நாளோ!

1242 பொய்முடங்கு பூமிசில பொட்டலுறப் பூங்கமலன்
கைமுடங்க நான்சனனக் கட்டறுவ தெந்நாளோ! (15)

1243 கற்குணத்தைப் போன்றவஞ்சக் காரர்கள்கை
[கோவாமல்,
நற்குணத்தார் கைகோத்து நான்திரிவ தெந்நாளோ!

1244 துட்டனைமா மாயைச் சுழல்நீக்கி அந்தரமே
விட்டனையோ என்று வியக்கும்நாள் எந்நாளோ! (17)

---

## 12. அன்பர் நெறி

---

1245 அத்துவா எல்லாம் அடங்கச்சோ தித்தபடி
சித்துருவாய் நின்றூர் தெளிவறிவ தெந்நாளோ! (1)

1246 மூச்சற்றுச். சிந்தை முயற்சி அற்று, மூதறிவாய்ப்
பேச்சற்ருேர் பெற்றஒன்றைப் பெற்றிடும்நாள்
[எந்நாளோ! (2)

1247 கோட்டாலே யான குணம் இறந்த நிர்க்குணத்தோர்
தேட்டாலே தேடுபொருள் சேரும்நாள் எந்நாளோ!

1248 கெடுத்தே பசுத்துவத்தைக், கேடில்ஆனந்தம்
அடுத்தோர் அடுத்தபொருட் கார்வம்வைப்ப
[தெந்நாளோ! (4)

1249 கற்கண்டால் ஓடுகின்ற காக்கைபோல் பொய்ம்மாயச்
சொற்கண்டால் ஓடும்அன்பர் தோய்வறிவ
[தெந்நாளோ! (5)

1250 மெய்த்தகுலம், கல்வி,புனை வேடமெல்லாம் ஓடவிட்ட
சித்திஒன்றும் சேராச் செயல்அறிவ தெந்நாளோ!

1251 குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போதம்
அற்றவர்கட் கற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ!

1252 தர்க்கமிட்டுப் பாழாம் சமயக் குதர்க்கம்விட்டு
நிற்கும்அவர் கண்டவழி நேர்பெறுவ தெந்நாளோ!

1253 வீறியவே தாந்தமுதல் மிக்க கலாந்தம்வரை
ஆறும்உணர்ந் தோர்உணர்வுக் கன்புவைப்ப
[தெந்நாளோ! (9)

1254 கண்டஇடம் எல்லாம் கடவுள்மயம் என்றறிந்து
கொண்டநெஞ்சர் நேயம்நெஞ்சிற் கொண்டிருப்ப
[தெந்நாளோ! (10)

1255 பாக்கியங்களெல்லாம் பழுத்து மனம்பழுத்தோர்
நோக்குந் திருக்கூத்தை நோக்கும்நாள் எந்நாளோ!

1256 எவ்வுயிருந் தம்உயிர்போல் எண்ணும் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ!

## 13. அறிஞர் உரை *

1257 'இருநிலனாய்த் தீயாகி' என்றதிருப் பாட்டின்
பெருநிலையைக் கண்டணைந்து பேச்சறுவ
[தெந்நாளோ! (1)

1258 'அற்றவர்கட் கற்றசிவன் ஆம்' என்ற அத்துவிதம்
முற்றுமொழி கண்டருளின் மூழ்கும்நாள் எந்நாளோ!

1259 'தானென்னை முன்படைத்தான்' என்ற தகவுரையை!
நானென்று உண்மைபெற்று நாம்உணர்வ
[தெந்நாளோ! (3)

1260 'என்னுடைய தோழனுமாய்' என்ற திருப்பாட்டின்
நன்னெறியைக் கண்டுரிமை நாம்செய்வ தெந்நாளோ!

1261 'ஆருடனே சேரும் அறி'வென்ற அவ்வுரையைத்
தேரும் படிக்கருள் தான் சேரும்நாள் எந்நாளோ! (5)

1262 'நினைப்பறவே தான் நினைந்தேன்' என்றநிலை நாடி
அனைத்துமாம் அப்பொருளில் ஆழும்நாள்
[எந்நாளோ! (6)

1263 'சென்றுசென் றேஅணுவாய்த் தேய்ந்துதேய்ந்
[தொன்றாகி
நின்றுவிடும்' என்றநெறி நிற்கும்நாள் எந்நாளோ!

---

* சில பதிப்புக்களில், இப்பகுதியில் உள்ள கண்ணிகள் பின் முன்னாகக் காணப்படுகின்றன.

1264 'ஆதிஅந்தம் இல்லா அரியபரஞ் சோதி' என்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்குமநாள் எந்நாளோ!

1265 'உன்னில்உன்னும்' என்ற உறுமொழியால் என்
[இதயந்
தன்னில்உன்னி நன்னெறியைச் சாரும்நாள்
[எந்நாளோ! (9)

1266 'பிறிதொன்றில் ஆசையின்றிப் பெற்றிருந்தேன்' என்ற
நெறியுடையான் சொல்லில்நிலை நிற்கும்நாள்
[எந்நாளோ! (10)

1267 'திரையற்ற நீர்போல் தெளிய' எனத் தேர்ந்த
உரைபற்றி உற்றங் கொடுங்கும்நாள் எந்நாளோ!

1268 'அறியா அறிவில் அவிழ்ந்தேற' என்ற
நெறியாம் முறையுணர்ந்து நிற்கும்நாள் எந்நாளோ!

1269 'எனக்குள் நீ என்றும் இயற்கையாப் பின்னும்
உனக்குள்நான்' என்ற உறுதிகொள்வ தெந்
[நாளோ!

1270 'அறிவை அறிவதுவே யாகும் பொருள்' என்
றுறுதிசொன்ன உண்மையினை ஓரும்நாள் எந்
[நாளோ! (14)

---

## 14. நிற்கும் நிலை

1271 பண்ணின் இசை போலப் பரமன்பால் நின்றதிறம்
எண்ணிஅரு ளாகி இருக்கும்நாள் எந்நாளோ! (1)

1272 அறிவோ டறியாமை அற்றறிவி னூடே
குறியில் அறிவுவந்து கூடும்நாள் எந்நாளோ! (2)

1273 சொல்லால் மனத்தால் தொடராச்சம் பூரணத்தில்
நில்லா நிலையாய் நிலைநிற்ப தெந்நாளோ! (3)

1274 செங்கதிரின் முன்மதியம் தேசடங்கி நின்றிடல்
[ போல்
அங்கணனூர் தாளில் அடங்கும்நாள் எந்நாளோ!

1275 வானூ டடங்கும் வளிபோல இன்புருவாம்
கோனூ டடங்கும் குறிப்பறிவ தெந்நாளோ! (5)

1276 செப்பரிய தன்கருணைச் சிற்சுகனூர் பூரணத்தில்
அப்பினிடை உப்பாய் அணையும் நாள் எந்நாளோ

1277 தூயஅறி வான சுகரூப சோதிதன்பால்
தீயின் இரும் பென்னத் திகழும்நாள் எந்நாளோ!

1278 தீதணையாக் கர்ப்பூர தீபமென நான்கண்ட
சோதியுடன் ஒன்றித் துரிசறுவ தெந்நாளோ! (8)

1279 ஆராரும் காணாத அற்புதனூர் பொற்படிக்கீழ்
நீரார் நிழல்போல் நிலாவும்நாள் எந்நாளோ! (9)

1280 எட்டத் தொலையாத எந்தைபிரான் சந்நிதியில்
பட்டப் பகல்விளக்காய்ப் பண்புறுவ தெந்நாளோ!

1281 கருப்புவட்டை வாய்மடுத்துக் கண்டார்நாப் போல
விருப்புவட்டா இன்புருவை மேவும்நாள் எந்நாளோ!

1282 துச்சப் புலனால் சுழலாமல் தண்ணருளால்
உச்சிக் கதிர்ப்படிகம் ஒவ்வும்நாள் எந்நாளோ!

1283 இம்மா நிலத்தில் இருந்தபடி யேயிருந்து
சும்மா அருளைத் தொடரும்நாள் எந்நாளோ! (13)

1284 தானவனுந் தன்மைஎய்தித் தண்டம்என அண்டம்
[எங்கும்
ஞானமத யானை நடத்தும்நாள் எந்நாளோ! (14

1285 ஒன்றிரண்டும் இல்லதுவாய், ஒன்றிரண்டும்
[உள்ளதுவாய்
நின்ற சமத்துநிலை நேர்பெறுவ தெந்நாளோ! (15)

1286 பாசம்அக லாமல் பதியிற் கலவாமல்
மாசில் சமத்துமுத்தி வாய்க்கும்நாள் எந்நாளோ!

1287 சிற்றறிவு மெள்ளச் சிதைந்தெம்மான் பேரறிவை
உற்றறியா வண்ணம்அறிந் தோங்கும்நாள்
[எந்நாளோ! (17)

1288 தந்திரத்தை மந்திரத்தைச் சாரின் நவையாம்அறிவென்
றெந்தையுணர் வேவடிவாய் எய்தும்நாள் எந்நாளோ!

1289 போக்குவர வற்றவெளி போல்நிறைந்த போதநிலை
நீக்கமறக் கூடி நினைப்பறுவ தெந்நாளோ! (19)

1290 காண்பானும், காட்டுவதும், காட்சியுமாய் நின்றஅந்த
வீண்பாவம் போய், அதுவாய் மேவும்நாள்
[எந்நாளோ! (20)

1291 வாடாதே, நானுவாய் மாயாதே, எம்கோவை
நாடாதே நாடி, நலம்பெறுவ தெந்நாளோ! (21)

1292 ஆடலையே காட்டி, என தாடலொழித் தாண்டான்
[பொன்
தாடலைமேல் சூடித் தழைக்கும் நாள்எந்நாளோ! (22)

1293 மேலொடுகீழ் இல்லாத வித்தகனுர் தம்முடனே,
பாலொடுநீர் போற் கலந்து பண்புறுவ தெந்நாளோ!

1294 அறியா தறிந்தெமைஆள் அண்ணலைநா மாகக்
குறியாத வண்ணம் குறிக்கும்நாள் எந்நாளோ! (24)

1295 ஓராமல், மந்திரமும் உன்னுமல், நம்பரனைப்
பாராமல் பார்த்துப் பழகும்நாள் எந்நாளோ! (25)

1296 ஊன்பற்றும் என்னே டுறவுபற்றும் பூரணன்பால்
வான்பற்றுங் கண்போல் மருவும்நாள் எந்நாளோ!

1297 ஆண்டான் மவுனி அளித்தஅறி வால்அறிவைத்
தூண்டாமல் தூண்டித் துலங்கும்நாள் எந்நாளோ!

1298 ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினே டத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ!

---

## 15. நிலைபிரிந்தோர் கூடுதற்கு உபாயம்

1299 கன்மநெறி தப்பின் கடுநரகென் றெந்நாளும்
நன்மைதரும் ஞானநெறி நான்அணைவ தெந்நாளோ!

1300 ஞானநெறி தானே நழுவிடினும் முப்பதத்துள்
ஆனமுத்தி நல்கும்என அன்புறுவ தெந்நாளோ! (2)

1301 பன்மார்க்க மான பலஅடிபட் டேனும்ஒரு
சொன்மார்க்கங் கண்டு துலங்கும்நாள் எந்நாளோ!

1302 அத்துவிதம் என்ற அநந்நியச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் தொடரும்நாள் எந்நாளோ!

1303 கேட்டல்முதல் நான்காலே கேடிலா நாற்பதமும்
வாட்டம் அறஎனக்கு வாய்க்கும்நாள் எந்நாளோ!

1304 என்னதியா னென்பதற, எவ்விடமும் என் ஆசான்
சன்னிதியாக் கண்டு,நிட்டை சாதிப்ப தெந்நாளோ!

1305 நாம்பிரம மென்ருல் நடுவேஒன் றுண்டாமால்;
தேம்பிஎல்லாம் ஒன்ருய்த் திகழும்நாள் எந்நாளோ!

1306 முச்சகமே யாதி முழுதும்அகண் டாகார
சச்சிதா னந்தசிவம் தானென்ப தெந்நாளோ! (8)

1307 எவ்வடிவும் பூரணமாம் எந்தைஉரு என்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே அடங்கும்நாள் எந்நாளோ! (9)

1308 சிந்தித்த தெல்லாஞ் சிவபூ ரணமாக
வந்தித்து வாழ்த்தி வணங்கும்நாள் எந்நாளோ! (10)

1309 தாங்கியபார் விண்ணுதி தானேஞா னக்கினியாய்
ஓங்கு மியோகவுணர் வுற்றிடும்நாள் எந்நாளோ!

1310 ஆசனமூர்த் தங்கள் அறஅகண்டா காரசிவ
பூசைசெய ஆசை பொருந்தும்நாள் எந்நாளோ!

1311 அஞ்செழுத்தின் உண்மை யதுவான அப்பொருளை
நெஞ்சழுத்தி ஒன்ருகி நிற்கும் நாள் எந்நாளோ!(13)

1312 அவ்வுயிர்போல் எவ்வுயிரும் ஆனபிரான் றன்னடிமை
எவ்வுயிரும் என்றுபணி யாம்செய்வ தெந்நாளோ!

1313 தேசிகர்கோ ஞன திறல்மவுனி நந்தமக்கு
வாசி கொடுக்க மகிழும்நாள் எந்நாளோ! (15)

1314 குருலிங்க சங்கமமாக் கொண்டதிரு மேனி,
அருள்மயமென் றன்புற் றருள்பெறுவ தெந்நாளோ!

## 45. காண்பேனேவென் கண்ணி

1315 சிந்திக்குந் தோறுந் தெவிட்டா அமுதே! என்
புந்திக்குள் நீதான் பெருந்திடவும் காண்பேனே!

1316 கேவலத்தில் நான்கிடந்து கீழ்ப்படா தின்பஅருட்
காவலன்பால் ஒன்றிக் கலந்திடவும் காண்பேனே!

1317 துரியம் கடந்தஒன்றே! தூவெளியாய் நின்ற
பெரியநிறைவே! உன்னை நான் பெற்றிடவும்
[காண்பேனே! (3)

1318 மாசற்ற அன்பர்நெஞ்சே மாறுத பெட்டகமாத்
தேசுற்ற மாமணிநின் தேசினையும் காண்பேனே! (4)

1319 மாயா விகார மலம்அகல, எந்தைபிரான்
நேயானு பூதி நிலைபெறவும் காண்பேனே! (5)

1320 பொய்யுலகும், பொய்யுறவும், பொய்யுடலும்
[பொய்யெனவே
மெய்ய! நினை மெய்யெனவே மெய்யுடனே காண்
[பேனே!

1321 வால்அற்ற பட்டமென மாயா மனப்படலம்
கால்அற்று வீழவுமுக் கண்ணுடையாய்! காண்பேனே!

1322 உள்ளும் புறம்பும் ஒருபடித்தாய் நின்றுசுகம்
கொள்ளும் படிக்கிறை! நீ கூட்டிடவுங் காண்பேனே!

1323 காட்டுகின்ற முக்கட் கரும்பே! கனியே!என்
ஆட்டமெல்லாம் திரஉன தாடலேயும் காண்பேனே!

1324 தூங்காமல் தூங்கிச் சுகப்பெருமான் நின்னிறைவில்
நீங்காமல் நிற்கும் நிலேபெறவும் காண்பேனே! (10)

1325 வாதவூ ராளிதனே வான்கருணே யால்விழுங்கும்
போதவூ ரேறேநின் பொன்னடியும் காண்பேனே!

1326 சாட்டையிலாப் பம்பரம்போல் ஆடும் சடசால
நாட்டமற எந்தைசுத்த ஞானவெளி காண்பேனே!

1327 மன்ருடும் வாழ்வே மரகதஞ்சேர் மாணிக்கக்
குனறே!நின் தாட்கீழ்க் குடிபெறவும் காண்பேனே!

1328 பொய்யென் றறிந்தும்,எமைப் போகவொட்டா தைய [இந்த
வையம் கனமயக்கம் மாற்றிடவுங் காண்பேனே!

1329 தாயினும் நல்ல தயாளுவே! நின்னே உன்னித்
தீயில்மெழு கொத்துருகுஞ் சிந்தைவரக் காண்பேனே!

1330 என்செயினும், என்பெறினும், என் இறைவா! [ஏழையன்யான்
நின்செயல்என் றுன்னும் நினேவுவரக் காண்பேனே!

1331 எள்ளத் தனேயும் இரக்கமிலா வன்பாவி
உள்ளத்தும் எந்தை உலாவிடவுங் காண்பேனே! (17)

1332 வஞ்சகத்துக் காலயமாம் வல்வினேயேன் ஆகெடுவேன்
நெஞ்சகத்தில் ஐயா! நீ நேர்பெறவும் காண்பேனே!

1333 தொல்லேப் பிறவித் துயர்கெடவும் எந்தைபிரான்
மல்லற் கருணே வழங்கிடவும் காண்பேனே! (19)

1334 வாளாருங் கண்ணார் மயற்கடலில் ஆழ்ந்தேன்;சற்
றாளாக எந்தை அருள்செயவும் காண்பேனோ! (20)

1335 பஞ்சாய்ப் பறக்கும்நெஞ்சப் பாவியைநீ கூவி,ஐயா!
அஞ்சாதே! என்றின் னருள்செயவும் காண்பேனோ!

1336 ஆடுகறங் காகி அலமந் துழன்றுமனம்
வாடும்எனை, ஐயா! நீ, வாஎனவும் காண்பேனோ!(22)

1337 சிட்டர்க் கெளிய சிவனேயோ! தீவினையேன்
மட்டற்ற ஆசை மயக்கறவுங் காண்பேனோ! (23)

1338 உண்ணின் றுணர்த்தும் உலப்பிலா ஒன்றே! நின்
தண்ணென்ற சாந்தஅருள் சார்ந்திடவும்
[காண்பேனோ! (24)

1339 ஓடுங் கருத்தொடுங்க, உள்ளுணர்வு தோன்றநினைக்
கூடும் படிக்கிறை! நீ கூட்டிடவும் காண்பேனோ! (25)

1340 வாக்கால் மனத்தால் மதிப்பரியாய்! நின்னருளை
நோக்காமல் நோக்கிநிற்கும் நுண்ணறிவு
[காண்பேனோ! (26)

1341 இவ்வுடம்பு நீங்குமுன்னே எந்தாய்!கேள்;
[இன்னருளாம்
அவ்வுடம்புக் குள்ளே அவதரிக்கக் காண்பேனோ! (27)

1342 நித்தமாய், ஒன்றாய், நிரஞ்சனமாய், நிர்க்குணமாம்
சுத்தவெளி நீவெளியாய்த் தோன்றிடவும்
[காண்பேனோ! (28)

1343 கண்ணிறைந்த மோனக் கருத்தே!என் கண்ணே!என்
உண்ணிறைந்த மாயை ஒழிந்திடவும் காண்பேனோ!

1344 அத்தா ! விமலா ! அருளாளா ! ஆனந்த
சித்தா ! எனக்குன் அருள் செய்திடவும் காண்பேனே !

1345 வீணே பிறந்திறந்து வேசற்றேன் ; ஆசைஅறக்
காணேன் ; இறைநின் கருணைபெறக் காண்பேனே !

1346 சட்டையொத்த இவ்வுடலைத் தள்ளுமுன்னே,
[நான்சகச
நிட்டையைப்பெற் றையா! நிருவிகற்பம் காண்பேனே!

1347 எல்லாம் தெரியும் இறைவா !என் அல்லலெல்லாம்
சொல்லாமுன் நீதான் தொகுத்திரங்கக் காண்பேனே!

1348 அண்டபகி ரண்டம் அனைத்தும் ஒருபடித்தாக்
கண்டவர்கள் கண்டதிருக் காட்சியையுங்
[காண்பேனே! (34)

1349 ஊனிருந்த காயம் உடன் இருப்ப, எந்தை ! நின்பால்
வானிருந்த தென்னவும்நான் வந்திருக்கக்
[காண்பேனே ! (35)

1350 தினை அத் தனையும் தெளிவறியாப் பாவி
நினைவிற் பரம்பொருள் நீ நேர்பெறவும்
[காண்பேனே! (36)

1351 துன்பமெனுந் திட்டனைத்தும் சூறையிட ஐயாவே !
இன்பவெள்ளம் வந்திங் கெதிர்ப்படவுங்
[காண்பேனே! (37)

---

## 46. ஆகாதோவென் கண்ணி

1352 கல்லாத நெஞ்சம் கரைந்துருக எத்தொழிற்கும்
வல்லாய்! நின் இன்பம் வழங்கிஞல் ஆகாதோ! (1)

1353 என்னை அறிய, எனக்கறிவாய் நின்றருள் நின்
றன்னை அறிந் தின்பநலம் சாரவைத்தால் ஆகாதோ!

1354 பொய்ம்மயமே யான புரைதீர, எந்தை! இன்ப
மெய்ம்மயம்வந் தென்னை விழுங்கவைத்தால்
[ஆகாதோ! (3)

1355 மட்டிலாச் சிற்சுகமாம் வாழ்வே நின் இன்பமயம்
சிட்டர்போல் யான் அருந்தித் தேக்கவைத்தால்
[ஆகாதோ! (4)

1356 அத்தா! நின் பொற்ருள் அடிக்கே அனுதினமும்
பித்தாகி, இன்பம் பெருகவைத்தால் ஆகாதோ! (5)

1357 மெல்லியலார் மோக விழற்கிறைப்பேன் ஐயா! நின்
எல்லையில் ஆனந்தநலம் இச்சித்தால் ஆகாதோ! (6)

1358 சுட்டழகாய் எண்ணுமனம் சூறையிட்டானந்தமயக்
கட்டழகா! நின்னைக் கலக்கவைத்தால் ஆகாதோ!

1359 சோதியே! நந்தாச் சுகவடிவே! தூவெளியே!
ஆதியே! நின்னை அறியவைத்தால் ஆகாதோ! (8)

1360 நேசம் சிறிதும்இலேன்; நின்மலனே! நின்னடிக்கே
வாசம் செயஇரங்கி, வாஎன்ருல் ஆகாதோ! (9)

1361 என் அறிவுக் குள்ளே இருந்ததுபோல்; ஐயாவே!
நின் அறிவுள் நின்னுடன்யான் நிற்கவைத்தால்
[ ஆகாதோ! (10)

1362 ஆதிப்பி ரானே!என் அல்லல் இருள் அகலச்
சோதிப்ர காசமயம் தோற்றுவித்தால் ஆகாதோ!

1363 ஆசைச் சுழற்கடலில் ஆழாமல், ஐயா! நின்
நேசப் புணைத்தாள் நிறுத்தினுல் ஆகாதோ! (12)

1364 பாசநிக ளங்கள்எல்லாம் பஞ்சாகச் செஞ்செவே
ஈச!எனை வாஎன் றிரங்கினுல் ஆகாதோ!

1365 ஓயாஉள் ளன்பாய், உருகிவாய் விட்டரற்றிச்,
சேயாகி, எந்தை! நின்னைச் சேரவைத்தால் ஆகாதோ?

1366 ஆதியாம் வாழ்வாய், அகண்டிதமாய் நின்றபரஞ்
சோதி! நீ என்னைத் தொழும்பன்என்றுல் ஆகாதோ!

1367 விண்ணூரக் கண்ட விழிபோல் பரஞ்சோதி!
கண்ணூர நின்நிறைவைக் காணவைத்தால் ஆகாதோ!

1368 சேராமல் சேர்ந்துநின்று சின்மயனே! நின்மயத்தைப்
பாராமல் பாரெனநீ பட்சம்வைத்தால் ஆகாதோ!

1369 கண்ணுடி போல்எல்லாம் காட்டும் திருவருளை
உண்ணுடி ஐயா! உருகவைத்தால் ஆகாதோ! (18)

1370 மூலஇருள் கால்வாங்க, மூதறிவு தோன்ற, அருட்
கோலம்வெளி யாகஎந்தை! கூடுவித்தால் ஆகாதோ!

1371 சாற்றரிய இன்பவெள்ளம் தாக்குமதில் நீமுளைக்கில்
ஊற்றமுறும் என்னஅதில் உண்மைசொன்னுல்
[ ஆகாதோ! 20

1372 கையுங் குவித்திரண்டு கண்அருவி பெய்ய, அருள்
ஐய! நின்தாட் கீழே அடிமைநின்றுல் ஆகாதோ!

---

## 47. இல்லையோவென் கண்ணி

1373 ஏதும் தெரியா தெனைமறைத்த வல்லிருளை
நாத! நீ நீக்கஒரு ஞானவிளக் கில்லையோ! (1)

1374 பணியற்று நின்று, பதைப்பறஎன் கண்ணுள்
மணியொத்த சோதி! இன்ப வாரிஎனக் கில்லையோ!

1375 எம்மால் அறிவதற எம்பெருமான்! யாதும்இன்றிச்
சும்மா இருக்கஒரு சூத்திரந்தான் இல்லையோ! (3)

1376 நாய்க்குஞ் சுடையானேன் நாதா! நின் இன்பமயம்
வாய்க்கும் படிஇனிஓர் மந்திரந்தான் இல்லையோ! (4)

1377 ஊனாக நிற்கும் உணர்வைமறந் தையா! நீ
தானாக நிற்க.ஒரு தந்திரந்தான் இல்லையோ! (5)

1378 அல்லும் பகலும் அகண்டவடி வே! உனை நான்
புல்லும் படிஎனக்கோர் போதனைதான் இல்லையோ!

## 48. வேண்டாவோவென் கண்ணி

1379 கண்டவடி வெல்லாம்நின் காட்சிஎன்றே கைகுவித்துப்
பண்டும்இன்றும் நின்றஎன்னைப் பார்த்திரங்க
[வேண்டாவோ! (1)

1380 வாதனையோ டாடும் மனப்பாம்பு மாயஒரு
போதனைதந் தையா! புலப்படுத்த வேண்டாவோ!

1381 தன்னை அறியத் தனிஅறிவாய் நின்றருளும்
நின்னைஅறிந் தென்னறிவை நீங்கிநிற்க
[வேண்டாவோ! (3)

1382 அள்ளக் குறையா அகண்டிதா னந்தமென்னும்
வெள்ளம்எனக் கையா!வெளிப்படுத்த வேண்டாவோ!

1383 அண்டனே! அண்டர்அமுதே!என் ஆருயிரே!
தொண்டனேற் கின்பம் தொகுத்திரங்க
[வேண்டாவோ! (5)

1384 பாராதே! நின்று பதையாதே! சும்மாதான்
வாராய் எனவும் வழிகாட்ட வேண்டாவோ! (6)

## 49. நல்லறிவேயென் கண்ணி

1385 எண்ணிறைந்த மேன்மைபடைத் தெவ்வுயிர்க்கும் [அவ்வுயிராய்க் (1)
கண்ணிறைந்த சோதியைநாம் காணவா; நல்லறிவே!

1386 சித்தான நாம்என் சடத்தைநாம் என்னல்என்றும்
சத்தான உண்மைதனைச் சாரவா; நல்லறிவே! (2)

1387 அங்கும் இங்கும் எங்கும்நிறை அற்புதனர் [பொற்பறிந்து,
பங்கயத்துள் வண்டாயப் பயன்பெறவா; நல்லறிவே!

1388 கான்றசோ றென்ன இந்தக் காசினிவாழ் வத்தனையும்
தோன்ற அருள்வெளியில் தோன்றவா; நல்லறிவே!

## 50. பலவகைக் கண்ணி

1389 என் அரசே! கேட்டிலையோ? என்செயலோ ஏதுமிலை;
தன் அரசு நாடாகித் தத்துவம்கூத் தாடியதே! (1)

1390 பண்டொருகால் நின்பாற் பழக்கமுண்டோ? [எந்தைநினைக்
கண்டொருகால் போற்றக் கருத்தும் கருதியதே! (2)

1391 கண்டனவே காணும் அன்றிக் காணுவோ காணு;என்
கொண்டறிவேன்? எந்தை! நினைக் கூடும் [குறிப்பினையே? (3)

1392 கல்லா லடியில்வளர் கற்பகமே! என் அளவோ
பொல்லா வினைக்குப் பொருத்தந்தான்? [சொல்லாயோ!

1393 தப்பிதம்ஒன் றின்றி, அது தானாக நிற்கஉண்மை
செப்பியதும் அல்லால், என் சென்னியது [தொட்டனையே! 5

1394 மாசான நெஞ்சன் இவன் வஞ்சன்என்றே [வாய்திறந்து
பேசா மவுனம் பெருமான் படைத்ததுவே! (6)

1395 கற்பதெல்லாங் கற்றேம்;முக் கண்ணுடையாய்! நின்பணியாய்
நிற்பதுகற் றன்றே நிருவிகற்ப மாவதுவே! (7)

1396 முன்னளவில் கன்மம் முயன்றான் இவனென்றோ
என்னளவில் எந்தாய்! இரங்கா திருந்ததுவே! (8)

1397 நெஞ்சகம்வே ருகி, நினைக்கூட எண்ணுகின்ற
வஞ்சகனுக் கின்பமஎந்தாய்! வாய்க்குமா றெவ்வாறே!

1398 பள்ளங்கள் தோறும் பரந்தபுனல் போல்உலகில்
உள்ளம் பரந்தால் உடையாய்என் செய்வேனே! (10)

1399 முன் நினைக்கப், பின்மறைக்கும் மூடஇருள்;
ஆகெடுவேன்!
என் நினைக்க? என்மறக்க? எந்தை பெருமானே! (11)

1400 வல்லாளா! மோனு! நின் வான்கருணை என்னிடத்தே
இல்லாதே போனுல்நான் எவ்வண்ணம் உய்வேனே!

1401 வாக்கும் மனமும் மவுனமுற எந்தைநின்னை
நோக்கும் மவுனம்இந்த நூல்அறிவில் உண்டாமோ!

1402 ஒன்ருய்ப், பலவாய், உலகம்எங்கும் தானேயாய்,
நின்ருய் ஐயா!எனை நீ நீங்கற் கெளிதாமோ! (14)

1403 ஆவித் துணையே! அருமருந்தே! என்றனை நீ
கூவிஅழைத் தின்பம்கொடுத்தால் குறைவாமோ!(15)

1404 எத்தனையோ நின்வினையாட்? டெந்தாய்!கேள்! [இவ்வளவென்
றத்தனையும் என்னுல் அறியுந் தரமாமோ? (16)

1405 தேடுவார் தேடும் சிவனேயோ! நின்திருத்தாள்
கூடுவான் பட்டதுயர் கூறற் கெளிதாமோ! (17)

1406 பற்றினதைப் பற்றும்எந்தாய்! பற்றுவிட்டால் [கேவலத்தில்
உற்றுவிடும்; நெஞ்சம்உனை ஒன்றிநிற்பதெப்படியோ!

1407 ஒப்பிலா ஒன்றே! நின் உண்மைஒன்றும் காட்டாமல்,
பொய்ப்புவியை மெய்போற் புதுக்கிவைத்த [தென்னேயோ! (19)

1408 காலால் வழிதடவுங் காலத்தே கண்முளைத்தாற்
போலே எனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ!

1409 தன்அரசு நாடாம் சடசால பூமிமிசை
என்அரசே! என்னை இறையாக நாட்டினையோ! (21)

1410 திங்கள்அமு தாம்நின் திருவாக்கை விட்டரசே!
பொங்கு விடம்அனைய பொய்ந்நூல் புலம்புவனோ!

1411 உன்னஉன்ன, என்னைஎடுத் துள்விழுங்கும் [நின்னிறைவை,
இன்னம்இன்னம் காணமல்எந்தாய்! சுழல்வேனோ?

1412 ஆரா அமுதனைய ஆனந்த வாரிஎன்பால்
தாராமல் ஐயா! நீ தள்ளிவிட வந்ததென்னே! (24)

---

## *51. நின்ற நிலை*

........

வேறு

1413 நின்றநிலை யேநிலையா வைத்தா னந்த
நிலைதானே நிருவிகற்ப நிலையு மாகி,
என்றும்அழி யாதஇன்ப வெள்ளம் தேக்கி
இருக்களனைத் தொடர்ந்துதொடர்ந் திழுக்கும்
[அந்தோ! (1)

1414 இருக்காதி மறைமுடிவும் சிவாக மாதி
இதயமும்கை காட்டெனவே இதயத் துள்ளே
ஒருக்காலே உணர்ந்தவர்கட் கெக்கா லுந்தான்
ஒழியாத இன்பவெள்ளம் உலவா நிற்கும். (2)

1415 கற்றதும்கேட் டதுந்தானே ஏதுக் காகக்?
கடம்படமென் றுருட்டுதற்கோ? கல்லால் எம்மான்
குற்றமறக் கைகாட்டும் கருத்தைக் கண்டு,
குணங்குறிஅற் றின்பநிட்டை கூட அன்றோ! (3)

---

# 52. பாடுகின்ற பனுவல்

வஞ்சி விருத்தம்

1416 பாடு கின்ற பனுவ லோர்கள்
தேடுகின்ற செல்வமே!
நாடு கின்ற ஞான மன்றில்
ஆடு கின்ற அழகனே! (1)

1417 அத்தன் என்ற நின்னையே
பத்தி செய்து பனுவலால்
பித்தன் இன்று பேசவே
வைத்த தென்ன வாரமே? (2)

1418 சிந்தை அன்பு சேரவே
நைந்து நின்னை நாடினேன்
வந்து வந்துள் இன்பமே
தந்தி ரங்கு தாணுவே! (3)

1419 அண்டர் அண்டம் யாவும்நீ
கொண்டு நின்ற கோலமே
தொண்டர் கண்டு சொரிகணீர்
கண்ட நெஞ்சு கரையுமே. (4)

1420 அன்னை போல அருள்மி குத்து
மன்னு ஞான வரதனே!
என்னை யேஎ னக்க ளித்த
நின்னை யானும் நினைவனே! (5)

## 53. ஆனந்தக் களிப்பு

சங்கர சங்கர சம்பு-சிவ.
சங்கர சங்கர சங்கர சம்பு

1421 ஆதி அனாதியு மாகி - எனக்
கானந்த மாய்அறி வாய்நின் றிலங்கும்
சோதி மவுனியாய்த் தோன்றி - அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (1)

1422 சொன்னசொல் ஏதென்று சொல்வேன்! - என்னைச்
சூதாய்த் தனிக்கவே சும்மா இருத்தி
முன்னிலை ஏதும் இல்லாதே - சுகம்
முற்றச்செய் தேஎனைப் பற்றிக்கொண் டாண்டி!
(சங்கர! சங்கர! சம்பு!) (2)

1423 பற்றிய பற்றறஉள்ளே - தன்னைப்
பற்றச்சொன் னான்பற்றிப் பார்த்த இடத்தே
பெற்றதை ஏதென்று சொல்வேன்! - சற்றும்
பேசாத காரியம் பேசினான் தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (3)

1424 பேசா இடும்பைகள் பேசிச் - சுத்தப்
பேய்அங்க மாகிப் பிதற்றித் திரிந்தேன்
ஆசா பிசாசைத் துரத்தி - ஐயன்
அடியிணைக் கீழே அடக்கிக்கொண் டாண்டி!
(சங்கர! சங்கர! சம்பு!) (4)

1425 அடக்கிப் புலனைப் பிரித்தே – அவ
னாகிய மேனியில் அன்பை வளர்த்தேன்
மடக்கிக்கொண்டான் என்னைத் தன்னுள் - சற்றும்
வாய்பேசா வண்ண மரபும்செய் தாண்டி
( சங்கர! சங்கர! சம்பு! ) (5)

1426 மரபைக் கெடுத்தனன்; கெட்டேன்! - இத்தை
வாய்விட்டுச் சொல்லிடின் வாழ்வெனக் கில்லை;
கரவு புருடனும் அல்லன் - என்னைக்
காக்கும் தலைமைக் கடவுள்காண் மின்னே!
( சங்கர! சங்கர! சம்பு! ) (6)

1427 கடலின் மடைவிண்ட் தென்ன - இரு
கண்களும் ஆனந்தக் கண்ணீர் சொரிய
உடலும் புளகித மாக - என
துள்ளம் உருக உபாயம்செய் தாண்டி!
( சங்கர ! சங்கர ! சம்பு ! ) (7)

1428 உள்ளதும் இல்லதும் ஆகி-முன்
உணர்வது வாய்உன் உளங்கண்ட தெல்லாம்
தள்ளெனச் சொல்லிஎன் ஐயன்-என்னைத்
தானாக்கிக் கொண்ட சமர்த்தைப்பார்; தோழி!
( சங்கர! சங்கா! சம்பு! ) (8)

1429 பாராதி பூதம்நீ அல்லை-உன்னிப்
பார்இந் திரியம் கரணம் நீஅல்லை
ஆராய் உணர்வுநீ என்றான்;-ஐயன்
அன்பாய் உரைத்தசொல் ஆனந்தம்; தோழி!
( சங்கர! சங்கர! சம்பு!) (9)

1430 அன்பருக் கன்பான மெய்யன்,-ஐயன்,
ஆனந்த மோனன்,அருட்குரு நாதன்
தன்பாதம் சென்னியில் வைத்தான்;-என்னைத்
தான்அறிந் தேன்மனம் தான்இறந் தேனே!
(சங்கர! சங்கர! சம்பு!) (10)

1431 இறப்பும் பிறப்பும் பொருந்த-எனக்
கெவ்வண்ணம் வந்ததென் றெண்ணியான் பார்க்
மறப்பும் நினைப்புமாய் நின்ற-வஞ்ச [கில்
மாயா மனத்தால் வளர்ந்தது; தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (11)

1432 மனதே கல்லால்எனக் கன்றோ!-தெய்வ
மௌன குருவாகி வந்துகை காட்டி
எனதாம் பணிஅற மாற்றி-அவன்
இன்னருள் வெள்ளத் திருத்திவைத் தாண்டி!
(சங்கர! சங்கர! சம்பு!) (12)

1433 அருளால் எவையும் பார்என்றான்;-அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்;
இருளான பொருள்கண்ட தல்லால்-கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி? தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (13)

1434 என்னையும் தன்னையும் வேறா-உள்ளத்
தெண்ணாத வண்ணம் இரண்டற நிற்கச்
சொன்னது மோஒரு சொல்லே-அந்தச்
சொல்லால் விளைந்த சுகத்தைஎன் சொல்வேன்!
(சங்கர! சங்கர! சம்பு!) (14)

1435 விளையும் சிவானந்த பூமி-அந்த
வெட்ட வெளிநண்ணித் துட்ட இருளாம்
களையைக் களைந்துபின் பார்த்தேன்;-ஐயன்
களையன்றி வேறென்றும் கண்டிலன்; தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (15)

1436 கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை;-இரு
கண்காண நீங்கவுங் கண்டோம் துயில்தான்
கொண்டார்போற் போனாலும் போகும்-இதிற்
குணமேது நலமேது கூறாய்நீ; தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (16)

1437 நலமேதும் அறியாத என்னைச்-சுத்த
நாதாந்த மோனமாம் நாட்டம்தந் தேசஞ்
சலம்ஏதும் இல்லாமல் எல்லாம்-வல்லான்
தாளால்என் தலைமீது தாக்கினான்; தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (17)

438 தாக்கும்நல் லானந்த சோதி-அணு
தன்னிற் சிறிய எனைத்தன் அருளால்
போக்கு வரவற் றிருக்கும்-சுத்த
பூரண மாக்கினான் புதுமைகாண்! மின்னே!
(சங்கர! சங்கர! சம்பு! (18)

1439 ஆக்கி அளித்துத் துடைக்கும்-தொழில்
அத்தனை வைத்தும் எள்ளத்தனை யேனும்
தாக்கற நிற்கும் சமர்த்தன்-உள்ள
சாட்சியைச் சிந்திக்கத் தக்கது தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (19)

1440 சிந்தை பிறந்ததும் ஆங்கே;-அந்தச்
சிந்தை இறந்து தெளிந்ததும் ஆங்கே;
எந்த நிலைகளும் ஆங்கே;-கண்ட
யான்தான் இரண்டற் றிருந்ததும் ஆங்கே.
(சங்கர! சங்கர! சம்பு!) (20)

1441 ஆங்கென்றும் ஈங்கென்றும் உண்டோ?-சச்சி
தானந்த சோதி அகண்ட வடிவாய்
ஓங்கி நிறைந்தது கண்டால்-பின்னர்
ஒன்றென் றிரண்டென் றுரைத்திடலாமோ!
(சங்கர! சங்கர! சம்பு!) (21)

1442 என்றும் அழியும் இக் காயம்-இத்தை
ஏதுக்கு மெய்யென் றிருந்தீர்; உலகீர்!
ஒன்றும் அறியாத நீரோ-யமன்
ஓலைவந் தாற்சொல்ல உத்தரம் உண்டோ!
(சங்கர! சங்கர! சம்பு!) (22)

1443 உண்டோ நமைப்போல வஞ்சர்?-மலம்
ஊறித் ததும்பும் உடலைமெய் என்று
கொண்டோ பிழைப்பதிங் கையோ!-அருட்
கோலத்தை மெய்என்று கொள்ளவேண் டாவோ!
(சங்கர! சங்கர! சம்பு!) (23)

1444 வேண்டா விருப்பும் வெறுப்பும்-அந்த
வில்லங்கத் தாலே விளையும் சனனம்
ஆண்டான் உரைத்த படியே-சற்றும்
அசையா திருந்துகொள் அறிவாகி நெஞ்சே!
(சங்கர! சங்கர! சம்பு!) (24)

1445 அறிவாரும் இல்லையோ! ஐயோ!-என்னை
யார்என் றறியாத அங்க தேசத்தில்
வறிதேகா மத்திவிற் சிக்கி-உள்ள
வான்பொருள் தோற்கவோ வந்தேன் நான் தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (25)

1446 வந்த வரவை மறந்து-மிக்க
மாதர்பொன் பூமி மயக்கத்தில் ஆழும்
இந்த மயக்கை அறுக்க-எனக்
கெந்தைமெய்ஞ் ஞான எழில்வாள் கொடுத்தான்!
(சங்கர! சங்கர! சம்பு!) (25)

1447 வாளாருங் கண்ணரியர் மோகம்-யம
வாதைக் கனலை வளர்க்கும்மெய் என்றே
வேளா னவனும் மெய்விட்டான்-என்னின்
மிக்கோர் துறக்கை விதியன்றோ? தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (27)

1448 விதிக்கும் பிரபஞ்சம் எல்லாம்-சுத்த
வெயில்மஞ்சள் என்னவே வேதாக மங்கள்
மதிக்கும் அதனை மதியார்-அவர்
மார்க்கம் துன் மார்க்கம்சன் மார்க்கமோ? மானே!
(சங்கர! சங்கர! சம்பு!) (28)

1449 துன்மார்க்க மாதர் மயக்கம்-மனத்
தூயர்க்குப் பற்றுது சொன்னேன்; சனகன்
தன்மார்க்க நீதிதிட் டாந்தம்-அவன்
தான்அந்த மான சதானந்தன் அன்றோ!
(சங்கர! சங்கர! சம்பு!) (29

1450 அன்றென்றும் ஆம்என்றும் உண்டோ?-உனக்
கானந்தம் வேண்டின் அறிவாகிச் சற்றே
நின்றால் தெரியும் எனவே மறை
நீதிஎம் ஆதி நிகழ்த்தினன்; தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) (30)

---

# 54. அகவல்

145 திருவருள் ஞானம் சிறந்தருள் கொழிக்கும்
குருவடி வான குறைவிலா நிறைவே!
நின்ற ஒன்றே நின்மல வடிவே!
குன்றுப் பொருளே! குணப்பெருங் கடலே!
ஆதியும் அந்தமும் ஆனந்த மயமாம்

சோதியே! சத்தே! தொலைவிலா முதலே!
சீர்மலி தெய்வத் திருவரு ளதனாற்
பார்முதல் அண்டப் பரப்பெலாம் நிறுவி,
அண்டச முதலாம் எண்தரு நால்வகை
ஏழு பிறவியில் தாழா தோங்கும்

அனந்த யோனியின் இனம்பெற மல்க
அணுமுதல் அசல மான ஆக்கையும்
கணமுதல் அளவில் கற்ப காலமும்
கன்மப் பகுதித் தொன்மைக் கீடா
இமைப்பொழு தேனும் தமக்கென அறிவிலா

ஏழை உயிர்த்திரள் வாழ அமைத்தனை;
எவ்வுடல் எடுத்தார் அவ்வுடல் வாழ்க்கை
இன்பம் எனவே துன்பம் இலையெனப்
பிரியா வண்ணம் உரிமையின் வளர்க்க
ஆதர வாகக் காதலும் அமைத்திட்

டுக மின்றியே தேகம் நானென
அறிவு போல்அறி யாமை இயக்கிக்
காலமும் கன்மமும் கட்டும் காட்டியே,

மேலும் நரகமும் மேதகு சுவர்க்கமும்
மாலற வகுத்தனை ஏலும் வண்ணம் ;

அமையாக் காதலிற் சமய கோடி
அறம்பொரு ளாதி திறம்படு நிலையில்
குருவாய் உணர்த்தி, ஒருவர்போல் அனைவரும்
தத்தம் நிலையே முத்தி முடிவென
வாத தர்க்கமும் போத நூல்களும்

நிறைவிற் காட்டியே குறைவின்றி வயங்க
அங்கங்கு நின்றனை ; எங்கு மாகிச்
சமயா தீதத் தன்மை யாகி
இமையோர் முதலிய யாவரும் முனிவரும்
தம்மைக் கொடுத்திட் டெம்மை ஆள்என

ஏசற் றிருக்க மாசற்ற ஞான
நலமும் காட்டினை; ஞானமி லேற்கு
நிலையுங் காட்டுதல் நின்னருட் கடனே.

---

## 55. வண்ணம்

தனதந் தனன தந்த தனதந் தனனதந்த
தனதந் தனனதந்த — தன தனதான
தான தனதன தான தனா.

1452 அருவென் பனவு மன்றி, உருவென் பனவு மன்றி,
அகமும் புறமு மன்றி,—முறை பிறழாது
குறியும் குணமு மன்றி, நிறைவும் குறைவு மன்றி,
மறைஒன் றெனவி ளம்ப—விம லமதாகி,
அசலம் பெறஉ யர்ந்து, விபுலம் பெறவ ளர்ந்து,
சபலஞ் சபலமென்றுள்—அறி வினர்காண,
ஞான வெளியிடை மேவும் உயிராய்,

அனலொன் றிடஎ ரிந்து புகைமண் டிடுவ தன்று;
புனலொன் றிடஅ மிழ்ந்து—மடி விலதாதை
சருவும் பொழுது யர்ந்து சலனம் படுவ தன்று;
சமர்கொண் டழிவதன்; றெ—ரியல் பினதாகும்;
அவன்என் பதுவு மன்றி, அவள்என் பதுவு மன்றி,
அதுஎன் பதுவு மன்றி—எழில் கொடுலாவும்
ஆரும் நிலைஅறி யாத படியே,

இருள்என் பதுவு மன்றி, ஒளிஎன் பதுவு மன்றி,
எவையுந் தனுள டங்க,—ஒரு முதலாகும்;
உளதென் பதுவு மன்றி, இலதென் பதுவு மன்றி,
உலகம் தொழஇ ருந்த—அயன் முத லோர்கள்

எவரும் கவலை கொண்டு சமயங் களில்வி ழுந்து
சுழலும் பொழுதி ரங்கி—அருள் செயுமாறு
கூற ரியசக மாயை யறவே,

எனதென் பதைஇ கழ்ந்த அறிவின் திரளில் நின்றும்
அறிவொன் றெனவி ளங்கும்—உப யமதாக
அறியுந் தரமு மன்று; பிறியுந் தரமு மன்று;
அசரம் சரம்இ,ரண்டின்—ஒரு படியாகி.
எதுசந் ததம்நி றைந்த தெதுசிந் தனைஇ றந்த
தெதுமங் களசு பங்கொள்—சுக வடிவாகும்?
யாது பரமதை நாடி யறிநீ ;

பருவங் குல்வு கின்ற மடமங் கையர்தொ டங்கு
கபடந் தனில்வி ழுந்து,—கெடு நினைவாகி,
வலையின் புடைம றிந்த மறியென் றவச முண்டு,
வசனம் திரமு மின்றி.—அவர் இதழ்ஊறல்
பருகுந் தொழில்இ ணங்கி, இரவும் பகலும் இன்சொல்
பகரும் படி து ணிந்து.—குழல் அழகாக
மாலை வகைபல சூடி யுடனே,

பதுமம் தனைஇ சைந்த முலைஎன் றதைஉ கந்து
வரிவண் டெனஉ ழன்று.—கலி லென ஆடும்
சிறுகிண் கிணிசி லம்பு புனைதண் டைகள்மு ழங்கும்
ஒலிநன் றென்ம கிழ்ந்து—செவி கொளநாசி
பசுமஞ் சளின்வி யந்த மனமுந் திடமு கந்து
பவம்மிஞ் சிடஇ றைஞ்சி—வரி சையினூடு
காலின் மிசைமுடி சூடி மயலாய்,

மருளுந் தெருளும் வந்து, கதிஎன் பதை மறந்து,
மதனன் சலதி பொங்க,—இர ணமதான
அளிபுண் தனைவ ளைந்து விரல்கொண் டுறஅ ளைந்து
சுரதம் சுகம்இ தென்று—பர வசமாகி,
மருவும் தொழில்மி குந்து, தினமும் தினமும்விஞ்சி
வளரும் பிறைகு றைந்த—படி மதிசோர,
—வான ரமதென மேனி திரையாய்,

வயதும் படஎ ழுந்து பிணியும் திமிதி மென்று
வரவும், செயல்அ ழிந்துள்—இரு மலுமாகி
அளமும் செலுத லின்றி, விழியுஞ் சுடர்கள் இன்று,
முகமும் களைகள் இன்று,—சரி யெனநாடி,
மனை இன் புறஇ ருந்த இனமும் குலைகு லைந்து,
கலகம் செயஇ ருண்ட—யமன் வரும்வேளை,
ஏது துணைபழி கார மனமே!

தாயுமான சுவாமிகள் பாடல்
முற்றும்.

———

உ

தாயுமான சுவாமிகள் மாணாக்கர்

அருளைய சுவாமிகள்

தாயுமான சுவாமிகள் மீது

பாடிய

## அருள்வாக்கிய அகவல்

---

திருவளர் கருணைச் சிவானந்த பூரணம்
ஒருவரும் அறியா ஒருதனிச் சித்து;
நவந்தரு பேதமாய் நாடகம் நடித்துப்
பவந்தனை நீக்கிப் பரிந்தருள் பராபரம்;
கண்ணும் கருத்தும் கதிரொளி போல
நண்ணிட எனக்கு நல்கிய நன்மை;
ஒன்றாய்ப் பலவாய் ஒப்பிலா மோனக்
குன்றாய் நிறைந்த குணப்பெருங் குன்றம்;
மண்ணையும் புனலையும் வளியையும் கனலையும்
விண்ணையும் படைத்த வித்திலா வித்து;
பந்தம் அனைத்தையும் பாழ்பட நூறிஎன்
சிந்தையுட் புகுந்த செழுஞ்சுடர்ச் சோதி;
விள்ளொணா ஞானம் விளங்கிய மேலோர்
கொள்ளைகொண் டுண்ணக் குறைவிலா நிறைவு;
தாட்டா மரைமலர் தான்நினைப் பவர்க்குக்
காட்டா இன்பம் காட்டிய கதிநிலை;
வாக்கால் மனத்தால் மதித்திட அரிதென
நோக்கா திருக்க நோக்கிய நோக்கம்;
ஆதியாய் அறிவாய் அகண்டமாய் அகண்ட

சோதியாய் விரிந்து துலங்கிய தோற்றம் ;
பரவெளி தன்னில் பதிந்தஎன் னுளத்தில்
விரவி விரவி மேற்கொளும் வெள்ளம் ;
சுட்டுக் கடங்காச் சோதி ; அடியார்
மட்டுக் கடங்கும் வான்பெருங் கருணை ;

எல்லைக் கடங்கா ஏகப் பெருவெளி ;
தில்லைப் பொதுவில் திருநடத் தெய்வம்;
வாதவூர் எந்தையை வரிசையாய் விழுங்கும்
போதவூர் மேவுகர்ப் பூர விளக்குச்;
சுகரை அகண்டத் தூவெளி எல்லாம்

திகழவே காட்டும் சின்மய சாட்சி;
செழுந்தமிழ் அப்பரைச் சிவலிங்க மாகி
விழுங்கிய ஞான வித்தக வேழம் ;
எழில்தரு பட்டினத் திறைவரை என்றும்
அழிவிலா இலிங்க மாக்கிய அணுதி;

சாந்த பூமி ; தண்ணருள் வெள்ளம் ;
ஆர்ந்த நீழல் அசையாக் ககனம் ;
பரவுவார் நெஞ்சிற் பரவிய மாட்சி;
இரவுபகல் அற்ற ஏகாந்தக் காட்சி ;
ஆட்சிபோல் இருக்கும் அகிலந் தனக்குச்

சாட்சியாய் இருக்கும் தாரகத் தனிமுதல் ;
ஆணும் பெண்ணும் அலியும்அல் லாததோர்
தாணுவாய் நின்ற சத்தாம் தனிச்சுடர் ;
எள்ளும் எண்ணெயும் எப்படி அப்படி
உள்ளும் புறம்பும் உலாவிய ஒருபொருள் ;

அளவிலா மதந்தொறும் அவரவர் பொருள்என
உளம்நிறைந் திருக்கும் ஒருபொ[illegible] டலை[illegible] ;

துள்ளும் மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளும் மோனவாள் கொடுத்திடும் அரசு ;
பெரிய பேறு ; பேசாப் பெருமை ;

அரிய உரிமை ; அளவிலா அளவு ;
துரிய நிறைவு ; தோன்றா அதீதம் ;
விரியும் நல் லன்பு விளைத்திடும் விளைவு ;
தீராப் பிணியாம் செனனம் அறுக்க
வாரா வரவாய் வந்தசஞ் சீவி ;

ஆலைக் கரும்புபா கமுதக் கட்டி நீள்
சோலைக் கனிபலாச் சுளைகத லிக்கனி
பாங்குறு மாங்கனி பால்தேன் சருக்கரை
ஓங்குகற் கண்டுசேர்த் தொன்றாய்க் கூட்டி
அருந்திய ரசமென அறிஞர் சமாதியில்

பொருந்திய இன்பம் பொழிசிற் சுகோதயம்;
எங்கணும் நிறைந்த இயல்பினை எனக்குச்
செங்கையால் விளங்கத் தெரித்தமெய்த் தேசிகன் ;
தன்னை அறிவித்துத் தற்பர மாகி
என்னுளத் திருந்தருள் ஏக நாயகன் ;

அடிமுடி இல்லா அரும்பொருள் தனக்கு
முடிஅடி இதுஎன மொழிந்திடு முதல்வன் ;
மெய்யலால் மற்றவை மெய்அல; எல்லாம்
பொய்யென அறியெனப் புன்னகை புரிந்தோன் ;
அருளும் பொருளும் அபேதமாய் இருந்தும்

இருதிறன் என்னும் இயலும்உண் டென்றோன் ;
அருள்உனக் குண்டேல் அருளும் வெளிப்படும் ;
பொருள்மயந் தானே பொருந்துஎன் றுரைத்தோன் :
சத்தசத் திரண்டு தன்மையும் தானே
ஒத்தலால் சதசத் துனக்கென உரைத்தோன் ;

ஆணவம் அருவிடின் அருளுரு தென்னக்
காணரு நேர்மையாற் காணவே உரைத்தோன் ;
சென்மம் உள் ளளவுந் தீரா திழுக்கும்
கன்மம் விடாதெனக் காட்டிய வள்ளல் ;
உளதில தெனவும் உறுதலால் மாயை

வளம்இல தெனவும் வகுத்தினி துரைத்தோன் ;
இல்லறத் திருந்தும் இதயம் அடக்கிய
வல்லவன் ருனே மகாயோகி என்ருேன் ;
துறவறத் திருந்தும் சூழ்மனக் குரங்கொன்
றறவகை யறியான் அஞ்ஞானி என்ருேன் ;

இறவா மனந்தான் இறக்க உணர்த்திப்
பிறவா வரந்தரும் பேரறி வாளன் ;
அத்தன தருளால் அனைத்தையும் இயக்கும்
சுத்தமா மாயையின் தோற்றம்என் றுரைத்தோன் ;
இருள்மலம் அகல இசைந்ததில் அழுத்தும்

பொருளருள் திரோதைப் பொற்பெனப் புகன்ருேன் ;
வீறும் சிவமுதல் விளம்பிய படியே
ஆறும் அனுதியென் றறிஞருக் குரைப்போன் ;
கொல்லா விரதம் குவலயத் தோர்கள்
எல்லாம் பெறுமின்என் றியம்பிய தயாநிதி;

தருமமும தானமும் தவமும் புரிபவர்க்
குரிமையாய் அவரோ டுறவு கலப்பவன் ;
தன்னுயிர் போலத் தரணியின் மருவிய
மன்னுயிர் அனைத்தையும் வளர்த்திடும் வேந்தன் ;
களவுவஞ் சனைகள்செய் கருமிகள் தமக்கும்

தெளிவுவந் துறஅருள் செய்திடுந் திறத்தோன் ;
தான்பெறும் பேறு சகமெலம் பெறவே

வான்பெறுங் கருணை வழங்கிய மாரி ;
தஞ்சம்என் றடைந்த தாபதர் தம்மை
அஞ்சலென் றருளும் அறிஞர் சிகாமணி ;

சிவகோ டிகளுஞ் சித்தர்கோ டிகளும்
யாவரும் புகழ யாவையும் உணர்ந்தோன் ;
யான்என தென்று இறைவன்எம் பெருமான்
தான்அவ னாகிய தலைவன்எம் கோமான் ;
அருண கிரியார்க் காறு முகன்சொலும்

பொருள்நலம் அல்லது பொருள்என மதியான் ;
பூத முதலாப் பொலிந்திடும் நாத
பேதமும் கடந்த பெருந்தகை மூர்த்தி
மூலா தார முதலாய் உள்ள
மேலா தாரமும் வெறுவெளி கண்டவன் ;

மண்டலமூன்றிலும் மன்னிய உருவிலுங்
கண்ட வையத்திலுங் கடவுளாய் நின்றோன் ;
பகர்சம யந்தொறும் பரமே இருந்து
சுகநடம் புரியுந் தொழில்எனச் சொன்னோன் ;
பேத அபேத பேதா பேத

போதம் இதுஎனப் புகன்றிடும் புண்ணியன் ;
அதுநான் எனவே ஆற்றிடும் அனுபவம்
சதுர்வே தாந்தத் தன்மைஎன் றுரைத்தோன் ;
அல்லும் பகலும் அறிவா னோர்க்குச்
சொல்லும் பொருளும் சுமையெனச் சொன்னோன் ;

சுதனே குருவாம் சுவாமிநா யகற்கெனின்
அதிகம்மெய்ஞ் ஞானம் அல்லவோ என்றோன் ;
நேசயோ கத்துறு நிருபர்எல் லாம்தொழும்
இராசயோ கத்திறை இராசயோ கத்தான் ;
பொறுமை, தெளிவு, புனிதஆ சாரம்,

மறுவிலா வண்மை, வாரம், இயற்கை,
தண்ணமர் சாந்தம், தயங்கிய கீர்த்தி,
எண்ணெண் கலேபயில் இணையிலாக் கல்வி,
நல்ல இரக்கம், நடுநிலே, சத்தியம்,
இல்லேஎன் னுமல் எவர்க்கும் தருங்கொடை

நற்குணன் எல்லாம் நண்ணிய பெருந்தகை;
சிற்குண வாரி; திருவருட் செல்வன்;
கரம்மேல் எடுத்துக் கருத்துற வணங்கிப்
பரமே உனக்குப் பரமெனப் பகர்ந்தோன்;
ஆலடி மேவும் அரசினே அடுத்தே

சிலமெய்ஞ் ஞானம் தெளிந்தனன் எனவும்
சித்த மௌனி திடசித்த மாக
வைத்த நிலேயின் வளர்ந்தனன் எனவும்
மூலன் மரபில் முளேத்த மௌனிதன்
பாலன்யான் எனவும் பரிவொடும் பகர்ந்தோன்;

வடமொழி இயற்கையின் மகிமையை உணர்ந்து,
திடமுற முப்பொருள் திறத்தையும் தெளிந்து,
கண்டமு தென்னக், கனிரச மென்னத்,
தண்டமிழ் மாரி தன்னேப் பொழிந்து,
சித்தியும் முத்தியும் சிறந்தருள் கொழிக்கும்

நித்திய நிரஞ்சன நிராலம்ப நிறைவைப்
பாடியும் நாடியும் பணிந்தெழுந் தன்பால்
ஆடியும் அரற்றியும் அகம்குழை வெய்தியும்
உடலம் குழைய உரோமஞ் சிலிர்ப்பப்
படபடென் றுள்ளம் பதைத்துப் பதைத்துப்

பாங்குறு நெட்டுயிர்ப் பாகிப் பரதவித்
தேங்கி ஏங்கி, இரங்கி இரங்கி,
ஓய்ந்த பம்பரம்போல் ஒடுங்கியே சிறிதும்

ஏய்ந்த விழிகள் இமைப்பதும் இன்றிச்,
சோர்ந்து சோர்ந்து, துவண்டு துவண்டு,மெய்

ஆர்ந்த அன்போ டவசமுற் றடிக்கடி
உண்ணடுக் குறவே உருகிஏ சற்றுத்
தண்ணமர் மொழியுந் தழுதழுத் திடவே
உள்ளும் புறம்பும் ஒருமித் துருகி,
வெள்ள நீர்போல் விழிநீர் பெருக்கிக்

கன்று பசுவைக் கருதிக் கதறிச்
சென்றுசென் றோடித் திகைப்பது போல
என்புநெக் குடைய இருகரங் குவித்துப்
புன்புலால் யாக்கை பொருந்தா தினிஎன
உணர்ந்துணர்ந் தன்பாய் உவகைமேற் கொண்டினிக்

கணம்பிரி யேனெனக் கருதியே குறித்துத்
திருவுரு வெல்லாம் திருநீ றிலங்க
இருகர நளினம் இயல்முடி குவித்துப்
பூரண சந்திரன் போல்ஒளி காட்டும்
காரண வதனம் கவின்குறு வெயர்வுற

இளநிலா எனவே இலங்கிய சிறுநகை
தளதள என்னத் தங்கி எழில்பெற
இத்தன்மை யெல்லாம் இசைந்தும் இவன்அருள்
சித்தெனச் சிவகதி தேர்ந்தவர் உரைப்பப்
பாத்திர மாடப் பரிவுடன் நாடிச்

சாத்திரம் காட்டித் தயவுசெய் தருளும்
வல்லவன் எனவே மன்னுயிர்க் காக
எல்லையில் அன்பன் இவன்என விளங்கி
ஈனவுலகத் தியற்கைபொய் யென்றே
ஞானநூல் மெய்யென நவின்றினி திரங்கிக்

கேவல சகலம் கீழ்ப்பட மேலாய்
மேவரும் சுத்த மெய்யினை நல்க
அருள உருவுகொண் டவனியில் வந்த
பொருளே இவனெனப் பொலிந்திடும் புனிதன்
சைவம் சிவனுடன் சம்பந்தம் என்பது

மெய்வளர் ஞானம் விளக்கும்என் றிசைத்தோன் ;
கதிர்விழி ஒளியுறக் கலத்தல்சித் தாந்த
விதிமுறை யாம்என விளம்பிய மேலோன் ;
முடிவினில் ஆகம முறைமையின் உண்மையை
அடியரைக் குறித்துரைத் தருளிய அண்ணல் ;

சிதம்பர நேர்மை திறமா உரைத்திறை
பதம்பர வெனப்பகர் பரமமெய்ஞ் ஞானி ;
முத்திபஞ் சாக்கர முறைமையில் அயிக்கியம்
சத்தியம் இதுவெனச் சார்ந்தவர்க் குரைத்தோன் ;
அஞ்செழுத் துள்ளே அனைத்தையுங் காட்டிஎன்

நெஞ்சழுத் தியகுரு; நீதிமா தவன் ;
எல்லாம் நிறைந்த இறைவன் செயல்எனக்
கல்லா எனக்கும் கருணைசெய் கடவுள் ;
குருவரு ளாலே கூடுவ தல்லால்
திருவருள் உறுதெனத் தெரிந்திட உரைத்தோன் !

குருஉரு அருளெனக் கொண்டபின் குறையாப்
பொருள்மய மாம்எனப் புகன்றிடு போதன் ;
எந்தமூர்த் திகளையும் எழிற்குரு வடிவெனச்
சிந்தையில் தியக்கறத் தேர்ந்தவர்க் குரைத்தோன் ;
சதாசிவம் என்றபேர் தான்படைத் ததுதான்

எதாவதே பொருள்என் றெடுத்தெடுத் துரைத்தோன் ;
கல்லானை கன்னல் கவர்ந்திடச் செய்தவன்
எல்லாம் வல்லசித் தெம்மிறை யென்றோன் ;

எவ்வுயிர் தோறும் இறைமே வியதிறம்
செவ்விய பிரம்படி செப்பிடும் என்றேன் ;
எவ்வணம் எவர்எவர் இசைத்தனர், அவரவர்க்
கவ்வணம் அவன்எம் மான்என அறைந்தோன் ;
ஒருபா ணனுக்கே ஒருசிவன் ஆட்படின்
வரும்அடி யார்திறம் வழுத்தொணு தென்றேன் ;
சிவனடி யாரைச் சிவனெனக் காண்பவன்
எவன்அவன் சிவனே என்றெடுத் துரைத்தோன் ;
விருப்பு வெறுப்பினை வேரறப் பறித்துக்
கருப்புகா தென்னைக் காத்தருள் செய்தோன் ;
இருசொல் லுரையா தியான்இன்பம் எய்த
ஒருசொல் லுரைத்த உயர்குண பூதரன்
அத்துவா மார்க்கம் ஆறையும் அகற்றித்
தத்துவா தீதத் தன்மையைத் தந்தோன் ;
திருமகள் மருவிய திகழ்வள மறைசையில்
வருமுணர் வாளன்; மருளிலா மனத்தான்;
எண்ணிய எண்ணம்எல் லாந்தெரிந் தெனக்குத்
தண்ணருள் செய்தவன் தாயு மானவன் ;
ஒருமொழி பகர்ந்த உதவியால் அவன்றன்
இருபதம் முப்போ திறைஞ்சிவாழ்த் துவனே!

அருள்வாக்கிய அகவல்

முற்றிற்று.

## சில பிரதிகளில் காணப்பட்ட பாடல்கள்

## *கொச்சகக் கலிப்பா*

தத்துவம்வே றென்னைவே ருக்கியரு டந்ததிலே
உற்றுணர்வும் வேண்டாவென் றேரிரண்டு மூன்றினையும்
நித்தியமென் றேகாட்டி நில்லாம னில்லெனவே
தத்துவத்தோ டத்துவிதந் தருந்தாயு மானவனே. (1)

நந்தமதென் றெண்ணி நலிந்தவுடல் வேருக்கி
வந்தபொரு ளுன்னதல்ல வென்றனது வல்லமையும்
உன்தனக்கன் றெல்லா நமதென்றே யுட்புகுந்த
தந்தையுநீ மற்றுமரு ளாந்தாயு மானவனே. (2)

பந்தாடு மாபோற் பதிந்துகருப் பட்டேற்குச்
சிந்தா மணியாச் செகந்தனிலே தீவகம்போல்
வந்தான் மறைசைநகர் மற்றுமோர் மெய்கண்ட
சந்தானத் தானத் தவத்தாயு மானவனே. (3)

பின்னைத்தா ஞென்றினையுங் காட்டாத பேரிருளின்
உன்னைத்தான் கண்ணிலர்போ லொன்ருகித் தானுழன்ற
என்னைத்தா னிவ்வணமென் றெண்ணறியாவேழை
[யென்றே
தன்னைத்தான் றந்தாண்டான் றனித்தாயு மானவனே. (4)

திடக்குப்பை யாடரவஞ் செங்கட்கே முற்கோ
டுடுக்குப்பை நீத்தே யுறர்மறைசை வந்தெழுந்தே
விடக்குப்பைக் கோலால் விளங்கியபொய் மெய்யெனவாழ்
சடக்குப்பை யென்றுதவிர்த் தான்ருயு மானவனே. (5)

புகப்பட்டான் வல்லிருளின் பொல்லாத வேழாம்
பகப்பட்டா னீங்காப் பரப்பான தீவினையின்
அகப்பட்டான் மாய விகார வடவியெனுஞ்
சகப்பட்டா னென்றிரங்கி யாண்டான்றாயு மானவனே. (6)

கஞ்சனரி காணுத காரணமே யன்பருக்காப்
பஞ்சவன்முன் சேரப் பரிமே லெழுந்தபரம்
மஞ்சுலவுஞ் சோலையின் மாமறைசை வந்தோங்கித்
தஞ்சமென்றூற் கஞ்சலென வாடாயு மானவனே. (7)

மனக்கவலை தீர்த்தென் மயக்கவிகற் பங்களெல்லாம்
உனக்கலவென் றெவ்வொன்றாய் வேருக்கி யொன்றுமற
நினைக்கவரி தானவின்ப நிட்டையிதென் றேயுரைத்தான்
தனக்குவமை யில்லா னெனக்குமருட் டாயவனே. (8)

உ

சிவமயம்

## தாயுமான சுவாமிகள் பாடல்

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

தாயுமான சுவாமிகள் அருளிய
பாட்டு முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.